# அய்க்கண்ணின் புதினங்கள் ஓர் பன்முகப் பார்வை

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் பட்ட (பிஎச்.டி.)
ஆய்வின் பகுதி நிறைவாகப் பணிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்
**சு. புவனேசுவரி**
(பதிவு எண்: 0007)

நெறியாளர்
**முனைவர் பீ.கா. நபிசாள் பீவி**

Alagappa University
Central Library

P979




**தமிழ்த்துறை**
**அழகப்பா பல்கலைக்கழகம்**
(தேசிய தர மதிப்பீட்டுக் குழுவின் மறுமதிப்பீட்டில் 'ஏ' மதிப்புப் பெற்றது)
காரைக்குடி-630 003.
தமிழ்நாடு, இந்தியா.

**ஜூலை - 2012**

**முனைவர் பீ.கா.நபிசாள் பீவி**

உதவிப் பேராசிரியர்,

தமிழ்த்துறை,

அரசு மகளிர் கலைக்கல்லூரி (தன்னாட்சி),

புதுக்கோட்டை.

# நெறியாளர் சான்றிதழ்

"**அய்க்கண்ணின் புதினங்கள் ஓர் பன்முகப் பார்வை**" என்னும் தலைப்பில் **திருமதி.சு.புவனேசுவரி** அவர்கள் செய்துள்ள இவ்வாய்வேடு அழகப்பா பல்கலைக்கழகத்தில் முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காகத் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும், இவ்வாய்வின் மீது வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

இடம் : காரைக்குடி

நாள் : 5.7.2012

**(முனைவர் பீ.கா.நபிசாள் பீவி)**

**நெறியாளர்.**

முனைவர். நபிசாள் பீவி. பீ.கா.
எம்.ஏ., எம்.பில்., பிஎச்.டி.
உதவிப் பேராசிரியர்,
அரசினர் மகளிர் கலைக்கல்லூரி (தன்னாட்சி).
புதுக்கோட்டை.

துறைத்தலைவர்
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி-630 003

சு.புவனேசுவரி

பதிவு எண் : 0007

முனைவர் பட்ட ஆய்வாளர்

# ஆய்வாளர் உறுதிமொழி

**'அய்க்கண்ணின் புதினங்கள் ஓர் பன்முகப் பார்வை'** என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காக (பிஎச்.டி.) செய்யப்பட்ட இவ்வாய்வு என் சொந்த முயற்சியில் உருவானதாகும். இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேட்டினை நான் அளிக்கவில்லை என்று உறுதி கூறுகின்றேன்.

இடம் : காரைக்குடி

நாள் : 5. 7. 2012

**சு.புவனேசுவரி**

ஆய்வாளர்

உறுதிக் கையொப்பம் 5.7.2012

முனைவர். நபிசாள் பீவி. பீ.கா.
எம்.ஏ., எம்.பில்., பிஎச்.டி.
உதவிப் பேராசிரியர்,
அரசினர் மகளிர் கலைக்கல்லூரி (தன்னாட்சி),
புதுக்கோட்டை.

நெறியாளர்

**முனைவர் பீ.கா.நபிசாள் பீவி**

உதவிப் பேராசிரியர்,

தமிழ்த்துறை,

அரசு மகளிர் கலைக்கல்லூரி (தன்னாட்சி),

புதுக்கோட்டை.

# நன்றியுரை

**‘அய்க்கண்ணின் புதினங்கள் ஓர் பன்முகப் பார்வை’** என்னும் தலைப்பில் ஆய்வு மேற்கொள்ள வாய்ப்பளித்த அழகப்பா பல்கலைக்கழகத் துணைவேந்தர், பதிவாளர், தமிழ்த்துறைத் தலைவர் ஆகியோருக்கும் முதற்கண் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த ஆய்விற்குச் சிறந்த முறையில் வழிகாட்டி ஆய்வின் தொடக்கத்திலிருந்து ஆய்வேட்டினை நிறைவு செய்கின்ற நிலை வரையிலும் உதவிகள் புரிந்த ஆய்வு நெறியாளர் **முனைவர் பீ.கா.நபிசாள் பீவி** அவர்களுக்கு நான் என்றென்றும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளேன்.

இந்த ஆய்வுப்பணியைத் தொடர அனுமதி தந்த இராமசாமி தமிழ்க்கல்லூரித் தலைவர் **திருமிகு.இராம.பெரி.பெரியகருப்பன் எம்.இ.** அவர்களுக்கும், கல்லூரிச் செயலர் **திருமிகு.பெரி.வீரப்பன், பி.காம்.** அவர்களுக்கும் என் உள்ளம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். இறைவனடி சேர்ந்தாலும், இடைவிடாது, நான் முனைவர் பட்டம் பெற வேண்டும் என்று ஆசிர்வதித்துக் கொண்டிருக்கும் எங்கள் கல்லூரி நிறுவனர் ‘செந்தமிழ்ச் செல்வர்’ **பெரி.பெரியகருப்பன் செட்டியார்** அவர்களுக்கும், **திருமதி.மெய்யம்மை ஆச்சி** அவர்களுக்கும், என் நன்றியையும் வணக்கத்தையும் உரிதாக்குகின்றேன்.

ஆய்விற்கு உதவி புரிந்து, ஆய்வில் எழும் ஐயங்களை அன்புடன் களைய உறுதுணை செய்து, ஆய்வு செம்மையாக நிகழ்ந்தேற இன்முகத்துடனும், அன்பு கலந்த இனிய சொற்களுடனும், பல்லாறானும் உதவிகள் புரிந்த அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவர் **முனைவர் மு.பாண்டி** அவர்களுக்கு என் இதயங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுக்குத் தேவையான உதவிகள் கேட்டபொழுது, தேவையான நூல்களையும், செய்திகளையும், தந்துதவிய பேராசிரியர்கள் **முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை, முனைவர் சு.இராசாராம், முனைவர் மு.சுதா, திரு.மு.நடேசன், முனைவர் கா.கனநாதன், திரு.S.சுரேஷ்** ஆகியோருக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுக்குரிய ஆதாரங்கள் தேவைப்பட்டபொழுது, பேட்டி, வினாவழி தன் வரலாறு, பிற குறிப்புகள், நூல்கள் இவையெல்லாம் வேண்டும் போதெல்லாம் தந்துதவிய **பேரா.அய்க்கண்** அவர்களுக்கும், அவரது துணைவியார் **லேட்.திருமதி.வசந்தா** அவர்களுக்கும், அவரது குடும்பத்தாருக்கும் என் மனம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆய்வுக்குத் தேவையான நூல்களை வழங்கிய நூலகர் **திருமதி.மு.குமாரி** அவர்களுக்கும் படைப்பாசிரியரின் புதினங்களைத் தந்துதவிய **திரு.அஞ்செழுத்து** அவர்களுக்கும் என் மனம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வேடு செம்மையுற தகுந்த ஆலோசனைகளை வழங்கிய, என்னோடு பணியாற்றுகின்ற சக பேராசிரியர்களான, **முனைவர் ச.கணேசன், முனைவர் செ.நாகநாதன், திருமதி.இரா.கீதா** ஆகியோருக்கும், **முனைவர் மு.இரமேஷ்பாபு** அவர்களுக்கும் என் அன்பு மாணாக்கச் செல்வங்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நான் முனைவர் பட்டம் பெற வேண்டும் என்ற கனவோடு, என்னைப் படிக்க வைத்து தமிழ்உலகிற்கு அறிமுகப்படுத்திப், பெருமையைத் தேடித்தந்து, என்னை ஆசீர்வதித்துக் கொண்டிருக்கும் என் பெற்றோர் **தெய்வத்திரு.V.சுந்தர்ராஜன்–திருமதி.S.முனிராசம்மாள்**, என் மாமனார் **திரு.நா.அழகுத்தேவர்– தெய்வத்திரு.லெட்சுமி அம்மாள்**, என் அன்பு கணவர் **திரு.அ.வெங்கிடாசலம்**, மகள் **அ.வெ.**மகாலெட்சுமிக்கும் மற்றும் என் சகோதரர்களுக்கும், என் குடும்பத்தாருக்கும் நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன்.

ஆய்வினைச் செம்மையாக அச்சிட்டுத் தந்த SDS கணினி அச்சக நிறுவனத்தாருக்கும், சிறப்பாகக் கட்டமைப்புச் செய்த பூச்சரம் நிறுவனத்தாருக்கும் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**சு.புவனேசுவரி**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| உ.ஆ. | – | உரை ஆசிரியர் |
| நூ. | – | நூற்பா |
| ப. | – | பக்கம் |
| பக். | – | பக்கங்கள் |
| பா. | – | பாடல் |
| மு.ப. | – | முதற்பதிப்பு |
| மு.ப.ஆ. | – | முதற்பதிப்பு ஆசிரியர் |
| மு.வ. | – | மு.வரதராசனார் |
| மேலது | – | மேற்குறித்த நூல் |
| p. | - | Page |
| pp. | - | Pages |

# பொருளடக்கம்

# முன்னுரை

வாய்மொழி மரபின் தொடர்ச்சியாக ஏட்டிலக்கியங்களில் சங்க இலக்கியங்கள், நீதி, பக்தி, சிற்றிலக்கியங்கள் தனிப் பாடல் திரட்டுகள், தனி நூல்கள் எனப் பல தோன்றின. அவை மரபு இலக்கண கட்டமைப்போடு அமைக்கப்பட்டு மக்கள் வாழ்வதற்குரிய குறிக்கோளை வெளிப்படுத்தின. இலக்கியத்தின் மூலமான சமூக வளர்ச்சி என்பது அன்றைய காலச் சூழலையும் அன்றைய அறிவு, தொழில் நுட்ப போக்கு எனப் பலவாறு அறிந்து கொள்ளவும் துணைப் புரிந்தன. 18,19 ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் சமூகச் சூழல் உலகெங்கும் மாற்றம் பெற்றது. அக்காலத்தில் இலக்கியங்கள் பல உரைநடையில் அமைக்கப்பெற்றன. இத்தகு உரைநடைகள் மக்களும் எளிமையாகப் புரிந்து கொள்ளும் வகையில் எழுதப்பட்டன. நாடகம், புதினம், சிறுகதை எனப் பல்வேறு பரிணாமங்களில் உரைநடை இலக்கிய வகைகள் தோன்றின.

மக்களின் பயன்பாட்டிற்கும், காலச் சூழலுக்கும் ஏற்ப அமைந்த உரைநடை வடிவத்தில் அமைந்த புதினம் இன்றுவரை தனிச்சிறப்பிடம் பெற்றுக் காப்பியத்தின் மறுவடிவமாக விளங்குகிறது. கதை சொல்லும் போக்கில் மனித வாழ்க்கையில் நிகழும் இன்ப, துன்பங்களை ஆழ்ந்து ஆராய்ந்து கற்பனைத் திறத்துடன் புரியம்படியான சொற்களால் பல உத்திகளைப் பயன்படுத்தி எழுதப்படுகின்றன.

## ஆய்வுத் தலைப்பு

புதினம், சிறுகதை, நாடகம் எனப் பல்வேறு வகைகளில் தம் படைப்பாக்கத்தை உயர்த்திக்கொண்டிருக்கிற பேரா.அய்க்கண் புதினங்களின் மூலம் பன்முகமான சமூக இயங்கு நிலைகளை வெளிப்படுத்தியிருக்கிறார். இதனை மையமிட்டே '**அய்க்கண்ணின் புதினங்கள் ஓர் பன்முகப் பார்வை**' என்னும் தலைப்பில் இவ்வாய்வு அமைந்துள்ளது.

## ஆய்வு எல்லை

அகம், புறம் சார்ந்த நீதிக் கருத்துக்களைச் சுட்டி சமூகத்திற்கு விழிப்புணர்வு ஏற்படுத்தி குடும்ப வாழ்வின் செயல்பாடுகளைக் காட்டித் தனித்தன்மையில் புதினங்கள் எடுத்துரைக்கின்றன. இவரின் இருபது புதினங்களும் ஆய்வு எல்லையாக அமைகின்றன.

சமூகப் புதினங்களாகத் தொடங்கி வரலாற்றுப் புதினம், துப்பறியும் புதினம், மொழிப்பெயர்ப்புப் புதினம், தழுவல் புதினம் எனப் பல்வேறு வகைகளில் அமைக்கப்பட்டிருப்பதைக் காணலாம். இவற்றில் சமூக நிகழ்வுகளை, அன்றாடம் நிகழும் பிரச்சினைகளைச் சுட்டிக் காட்டுவதும், அதற்குரியத் தீர்வைத் தருவதுமாய் அமைபவை சமுதாயப் புதினங்களாகும். இத்தகைய சமூகப் புதினங்களை இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றிய ஆற்றல் மிக்க படைப்பாசிரியர்கள், புதினாசிரியர்களில் குறிப்பிடத்தக்கவர் பேரா.அய்க்கண் ஆவார். பல்வேறு புதினங்களைப் படைத்திருக்கும் இவர் பரிசுகள் பல பெற்றிருப்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

## ஆய்வு நோக்கம்

பேரா.அய்க்கண் சமூகப் பழமையைப் புகழ்ந்து ஓதுவதும், புதுமையை ஏற்றுக்கொள்ளும் படியாகவும் இரு மாறுபட்டத் தளத்தில் நிற்கிறார். குறிப்பாகப் பழமையில் சிறந்தவற்றையும் புதுமையில் சிறந்தவற்றையும் தமக்கே உரிய ஆளுமைத் திறத்தோடு நுண்ணாய்ந்து கருத்துக்களைத் தந்துள்ளார். இவர் புதினங்களில் காணப்படும் சமூகச் சிந்தனைகளையும், சிக்கல்களையும் தெரிந்துக் கொள்வதும், மக்கள் புரிந்து கொள்ளும் வகையில் கதைக்கரு, உத்திமுறைகள் போன்றவற்றைப் புதிய நோக்கில் அமைந்த அணுகுமுறைகளை அறிந்து கொள்ளவும் நோக்காகக் கொண்டு அமைக்கப்படுகிறது.

## சான்றாதாரங்கள்

ஆய்வின் முதன்மை ஆதாரங்களாக அய்க்கண்ணின் புதினங்கள் அனைத்தும் எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன.

## துணைமைச் சான்றாதாரங்கள்

புதினங்கள் தொடர்பான திறனாய்வு நூல்கள், ஆய்வேடுகள், இதழ்கள், கட்டுரைகள், பேட்டி போன்றவை துணைமைச் சான்றாதாரங்களாகும்

## அணுகுமுறைகள்

பேராசிரியர் அய்க்கண் அவர்களின் புதினங்களை வகைப்படுத்தி உள்ளடக்கக் கூறுகளை விளக்கும் நிலையில் விளக்கவியல் (Descriptive Approach) அணுகுமுறையும், சமூக இயங்குதல்களை வெளிக்கொணர்வதற்குச் சமுதாயவியல் (Sociological Approach) அணுகுமுறையும், ஆசிரியர் புலப்படுத்தும் மகளிர் பற்றிக் கண்டறிய பெண்ணிய அணுகுமுறையும் (Faministic Approach) இவ்வாய்வுக்குரிய அணுகுமுறைகளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

## கருதுகோள்

பேராசிரியர் அய்க்கண் அவர்கள் அடிப்படையில் தமிழுணர்வும் தமிழின உணர்வும் கொண்டவர். தமிழ்ச்சமுதாய இயங்கு நிலைகளையும் அவலங்களையும் பொதுமைக்கூறுகள் மற்றும் வட்டாரத் தன்மையுடன் புலப்படுத்தும் எழுத்தாளரான இவரின் சமூக நோக்கும் வெளிப்பாட்டுத்தன்மைகளும் தனித்தன்மை பெற்றவைகளாக இருக்கக்கூடும் என்பது இவ்வாய்வின் கருதுகோளாகும்.

## ஆய்வுப்பகுப்பு

இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஆறு இயல்களாகக் கட்டமைக்கப்பெற்றுள்ளது.

ஆய்வு முன்னுரையில் ஆய்வு நோக்கம், ஆய்வுத் தலைப்பு, கருதுகோள், சான்றாதாரங்கள், அணுகுமுறைகள், ஆய்வு எல்லை, ஆய்வுப் பயன் ஆகியவை இடம்பெற்றுள்ளன.

'**படைப்பாசிரியரும் படைப்புகளும்**' என்னும் முதலாமியலில் பேரா. அய்க்கண்ணின் பிறப்பு, வளர்ப்பு, பணிகள், இலக்கிய, சமூகத் தொண்டுகள், பெற்ற பரிசுகள், பாராட்டுக்கள், தனித்திறமைகள் மற்றும் ஆய்வுப் புதினங்களின் கதைச் சுருக்கம், புதினங்களைப் பற்றி பிற அறிஞர்கள் தருகின்ற விளக்கங்கள் போன்றவை சுட்டப்படுகின்றன.

'**புதினங்கள் காட்டும் சமுதாயம்**' எனும் இரண்டாவது இயலில் அய்க்கண்ணின் சமூகப் புதினங்கள் சுட்டும் கருத்துக்கள் தொகுக்கப்பட்டு ஆராயப்பட்டுள்ளன. சமூகத்தில் ஆண், பெண் இருபாலருக்கும் நிகழ்கின்ற காதல் வாழ்க்கை, அதனால் ஏற்படும் நன்மைகள், தீமைகள் தொடங்கி சமூகத்தின் அனைத்து வகையான அவல நிலையையும் எடுத்துக்காட்டி பிரச்சினைகளுக்குத் தீர்வு தருவதும் நோக்கப்பெற்றுள்ளது.

அகம், புறம், அகப்புறம் என முப்பரிமாணங்களில் சமூகத்தில் நிகழ்கின்ற கருத்துக்களை அய்க்கண் தந்த விதம் குறித்தும் விளக்கப்படுகின்றன. குறிப்பாக காதல், தியாகம், ஜாதி, மத, வர்க்க ரீதியான சிக்கல்கள் கொண்ட அகமன உறவுகளின் நிலைப்பாடு, அகமனச் செயல்கள், புற நிலைகளில் நிகழும் கற்பியல் கருத்துக்கள், கலப்பு மணம், குடும்பத்தினரின் பாச, வேச உணர்ச்சிகள், ஏழை பணக்காரர் என்ற பாகுபாடு களைதல், போலி அரசியல்வாதிகளை விட்டு விட்டு படித்தவர்களை அரசியல் சக்தியாக உருவெடுத்தல், நாட்டுப்பற்று எனப் பல அடிப்படைப் பிரச்சினைகள் அய்க்கண்ணின் கதைகளின் வாயிலாக எடுத்துக்காட்டப்பெறுகின்றன.

**'புதினங்களில் பாத்திரப்படைப்பு'** மூன்றாம் இயலாக அமைக்கப்பட்டுள்ளது. ஒரு புதினத்திற்குக் கதைக்கரு எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் பாத்திரப்படைப்பு ஆகும். பாத்திரங்களின் பொருத்தப்பாட்டிற்கு ஏற்பவே புதினங்களின் சிறப்பு அமையும். அத்தகு நோக்கில் அய்க்கண் பாத்திரப்படைப்புகளைப் படைத்ததில் மிகுந்த முக்கியத்துவம் பெறுகின்றார். அய்க்கண்ணின் புதினங்களில் இடம்பெறும் பாத்திரங்களை முழுநிலைப் பாத்திரம், வளர்ச்சி நிலைப் பாத்திரம், தேக்கநிலைப் பாத்திரம், ஒருநிலைப் பாத்திரம் எனப் பல்வேறு வகையான பாத்திரங்களைப் பிரித்துப் பகுப்பாய்ந்து புலப்படுத்தப் பெற்றுள்ளது.

**'புதினங்களில் பெண்கள்'** எனும் நான்காம் இயல் பெண்கள் பற்றிய படைப்பாசிரியரின் கருத்துக்களை முன் வைக்கிறது. இன்றைய சமூக வளர்ச்சி, குடும்ப வளர்ச்சி ஆகியவற்றிக்கு உறுதுணையாகப் நிற்பவர்கள் பெண்கள். இன்று பெண்கள் பல்வேறு தவறான சமூகக் கட்டுப்பாடுகளால் பாதிக்கப்பட்டு, வேதனைக்கு உள்ளாக்கப்பட்டு ஆணாதிக்கத்தால் படும் துன்பங்கள் ஏராளம். இதனை நன்குணர்ந்து அய்க்கண் தெளிந்த கருத்துநிலையோடு அமைத்துக் கதையைப் படைத்திருக்கிறார்.

பெண்ணின் பெருமைகள், சிறப்புகள் முதல் ஆணாதிக்கத்தால் பெண்கள் படும் துன்ப நிலை, அவலத்திற்குரிய காரணங்கள், வரதட்சணைக் கொடுமை, பெண் சிசுக்கொலை, ஏழைப் பெண்களின் நிலை, கைம்மை நோன்பு, விலைமகளிர்கள் சமூகத்தில் மற்ற பெண்களைப் போல தாம் மாறினாலும் அவர்களுக்கு ஏற்படும் பாதிப்புகள், பெண்ணுரிமைக் கருத்துக்கள், பெண்களுக்குரிய முன்னேற்றப் பாதைகள் எனப் பல்வேறு பரிணாமங்களில் அய்க்கண் கருத்துக்களைத் தந்துள்ளார். இதனை விரிவாக இவ்வியல் தெளிவுபடுத்துகின்றது.

மேலும் பால், பருவம், பண்பு அடிப்படையிலான பாத்திரங்கள், உத்தி முறைகளில் சமூகச் செயல்பாடுகளோடு ஒன்றி வரும் பாத்திரங்கள், கதைக்கேற்ப இணைந்து வரும் பாத்திரங்கள் எனப் பாத்திரங்களையும், பாத்திரங்களில் நேர்மறை, எதிர்மறைத் தன்மைகளையும் பாத்திரங்களின்

மூலமான கருத்துக்களையும், செய்திகளையும் இவ்வியல் எடுத்துரைக்கின்றது.

**'புதினங்களில் பண்பாட்டுக் கூறுகள்'** எனும் ஐந்தாம் இயல் தமிழ்ச் சமூகப்பண்பாடு நிகழ்வுகளை வெளிப்படுத்துவதாகவும், சமூக மாறுதலுக்கு ஏற்ப புதிய கருத்துக்களை நடைமுறைப்படுத்தவும், பண்படுத்தப்பட்ட வாழ்வியல் நிலைகளை விளக்குகிறது. மக்களின் இறை வழிபாடு, பழக்க வழக்கங்கள் நம்பிக்கைகளான குழந்தை பிறப்பு, பூப்பெய்தல், பல்வேறு சடங்கு முறைகள், மருத்துவம், கலைகள், மஞ்சு விரட்டு, ஆடுபுலி ஆட்டம், கிளித்தட்டு விளையாட்டு என சமூகத்தில் நிகழ்கின்ற, மறைந்து கிடக்கின்ற பல்வேறு வகையான பண்பாடுகளையும், மக்களின் செயல்பாடுகளையும் பொருள் சார் பண்பாடு, பொருள் சாரா பண்பாடு என மாறுபட்ட தளத்தில் இவ்வாய்வு புலப்படுத்துகின்றது.

**'புதினங்களில் புலப்பாட்டு உத்திகள்'** என்பது ஆறாவது இயலாகும். காலம் காலமாக மொழிநடைப் போக்கானது மாற்றம் பெற்று வருகின்றது. மொழிநடை மாற்றத்தில் 18ஆம் நூற்றாண்டிற்குப் பின்னராக உரைநடைப் போக்குச் சிறப்பிடம் பெற்றுத் திகழ்கின்றது. அவ்வுரைநடைப் போக்கில் அய்க்கண் தமது புதினங்கள் மூலம் சமூகத்தைச் சீரிமை செய்திருக்கிறார்.

தமது புதினங்களில் மொழிநடையின் போக்காக, பேச்சு வழக்கு, வட்டார வழக்கு, ஒலி குறிப்புச் சொற்கள், உவமை, உருவகம், வருணனை, பழமொழி, நாட்டுப்புறப் பாடல்கள், இலக்கிய மேற்கோள்கள், அறிஞர்களின் கருத்துக்கள், விஞ்ஞானக் கருத்துக்கள் எனப் பல்வேறு விதமாகப் படைத்துள்ளார். மொழிநடையை நடைமுறைப் போக்கோடு அமைத்திருக்கிறார்.

ஒவ்வொரு இயலின் முடிவிலும் ஆய்வுக் கருத்துக்கள் தொகுக்கப்பெற்று தொகுப்புரையாகத் தரப்பட்டுள்ளன. முடிவுரை இறுதியாக அமைக்கப்பட்டுள்ளது.

'பழையன கழிதலும், புதியன புகுதலும்' எனும் நன்னூலாரின் வாக்கிற்கு ஏற்ப சமூகம் மாற்றம் பெறுவது திண்ணம். நாமும் அச்சமூகத்தோடு சென்று நல்ல செய்திகளை, கண்டு கற்றுணர்ந்து புரிந்து செயல்பட வேண்டும் என்பது அய்க்கண் அவர்களின் கருத்துக்களாகும். சமூக அவலங்களைப் பதிவு செய்து அது மாறுவதற்குரிய வழிகளையும் தந்துள்ளார். அக வாழ்வியல் சிக்கல்களைத் தெளிவுற உணர்த்தும் ஆசிரியர், புற நிகழ்வில் நடக்கும் சமூக உறவுகள், சமூகச் சிக்கல்கள், ஊழல் அரசியல்வாதிகள் நிலை போன்ற பெரும்பான்மையான சமூகப் பிரச்சினைகளைத் தமது புதினங்களின் மூலம் வெளிப்படுத்துகிறார். குறிப்பாக மக்களைச் செம்மைப்படுத்தும் நோக்கோடும், மக்கள் நல்வாழ்வு வாழ்வதற்குரிய வழிமுறைகளையும் விவரிக்கிறார். தமிழ்ச்சமூகம் நன்னெறியோடு வாழ வழி செய்யும் புதினங்களில் அய்க்கண்ணின் சமூக நாவல்கள் அமையும்.

இயல் – 1

# படைப்பாசிரியரும் படைப்புகளும்

## முன்னுரை

ஆங்கிலேயர் வருகையால் தமிழுக்குக் கிடைத்த வடிவங்களில் ஒன்று புதினம். தமிழில் தொடக்கக் காலம் முதல் இன்று வரை நோக்கும்பொழுது வடிவ அடிப்படையில் உள்ளடக்கக் கூறுகள் அடிப்படையில், சமூகப் புதினங்கள், வட்டாரப் புதினங்கள், வரலாற்றுப் புதினங்கள், துப்பறியும் புதினங்கள் என பல வகை படைப்பாசிரியர்களைக் காண முடிகிறது. பேராசிரியர் அய்க்கண் அவர்கள் சமூக, வட்டாரப் புதினங்கள், சிறுகதைகள் படைப்பதில் தனிச்சிறப்பு வாய்ந்தவராகக் காணப்படுகிறார். அவரின் படைப்புகள் குறித்து ஆய்வு நோக்கில் இங்குத் தெளிவுப்படுத்தப்பட்டுள்ளது.

## ஆசிரியர் அறிமுகம்

இலக்கியம் காலந்தோறும் பல்வேறு மாற்றங்களைத் தாங்கி வெளி வருகின்றது என்பது மறுக்க இயலாத ஒன்று. சமுதாயச் சூழலுக்கும் உணர்வுகளுக்கும் உருவம் தரும் வகையில் இலக்கிய வகைகள் பிறக்கின்றன. இருபதாம் நூற்றாண்டு இலக்கிய வகையில் புதின இலக்கியத்திற்குச் சிறப்பான இடமுண்டு. புதினங்கள் இலக்கியச் சுவை தருவன மட்டுமல்ல; அவ்வக்காலச் சமுதாயம், மானுடவியல், உளவியல். வரலாறு ஆகியவற்றை வெளிப்படுத்திக் காட்டும் சான்றுகளாகும்.

> "புதினம் என்பது அது எழுதப்பட்ட காலத்தின் உண்மையான வாழ்க்கையைத் தெரிவிக்க முயல்வதோடு மக்களின் தேவைக்கு ஏற்ப அதில் மாறுதல்களையும் புகுத்தும் எண்ணம் கொண்டது"[1]

புதின இலக்கியத்தின் பொற்காலம் இருபதாம் நூற்றாண்டாகும். புதின இலக்கியம் இன்றுவரை அனைவராலும் விரும்பி ஏற்றுக்கொள்ளும்

வகையில் அமைந்துள்ளது. அத்தகு புதின இலக்கியத்தைப் படைத்து, படைப்புலகில் வெற்றி கண்டவர் அய்க்கண்.

படைப்பாளர் தம் படைப்புகளை ஆராய்கின்ற ஆராய்ச்சியில் படைப்பாசிரியரையும்,அவர்தம் படைப்புகளையும், வாழ்வியல் சூழல்களையும், பற்றித் தெரிந்து கொள்வது மிகவும் அவசியமாகிறது. அவரையும், அவர்தம் படைப்புகளையும் இணைத்து ஆராய்ச்சி செய்வதால் அப்படைப்புகள் வெளிவந்தமைக்கான காரணங்களையும், அப்படைப்புகள் உருவான சூழல்களையும், அது தொடர்பான செய்திகளையும் நாம் அறிய முடியும்.

படைப்பாளரின் ஊர், இனம், மொழி, வாழ்வியல் செய்திகளைப் பற்றி அறிந்து கொள்ளும் போது, படைப்பாளரின் வாழ்வியல் தான் படைப்புகளில் பிரதிபலிக்கின்றதா? இல்லை, தாம் கேட்டு அனுபவித்த செய்திகளைப் புதினமாகப் புனைந்திருக்கிறாரா? என்பதை அறிந்து கொள்ள முடியும். எனவே படைப்பாசிரியரின் படைப்புகளின் வாயிலாக, ஆசிரியரைப் பற்றிக் கண்டறிந்து, அவரது படைப்புகளைச் சுட்டும் வகையில் இவ்வியல் அமைத்துக் கொள்ளப்பெற்றுள்ளது.

## பிறப்பும் வளர்ப்பும்

அய்யாக்கண்ணு என்ற அய்க்கண் நாடறிந்த சிறந்த எழுத்தாளர். தமிழிலக்கியப் படைப்பாளர்கள் வரிசையில் முன்னணியில் திகழ்பவர் இவரின் தந்தை முத்தையா அம்பலம், தாய் அழகம்மை அம்மையார், சிவகங்கை மாவட்டத்தில் கம்பன் புகழ்பாடும் காரைக்குடியில் வாழ்ந்தாலும், காரைக்குடிக்கு அருகில் உள்ள கண்டனூரே இவரது பூர்வீகமாகும். 01.09.1935இல் கோட்டையூரில் மிகச் சாதாரண விவசாயக் குடும்பத்தில் பிறந்தவர். வாழ்க்கை வசதிகள் நிறைந்த அளவில் இல்லாத போதும் வறுமையிலும் செம்மையாய் வாழ்ந்த குடும்பம்.

தகப்பனார் பர்மா நாட்டுக்குப் போனதால், பள்ளத்தூரில் அவருடைய தாயாரின் பராமரிப்பிலும், சிறிய தாயார் விசாலாட்சி அம்மையார் அரவணைப்பிலும், சிட்டாள் ஆயாவின் ஆதரவிலும் வளர்ந்தவர். 1940ஆம் ஆண்டு கோட்டையூரில் ரெங்கசாமி வாத்தியார் திண்ணைப் பள்ளிக்கூடத்தில் ஐந்தாம் வகுப்பு வரை படித்தார். அதற்கு மேல் படிக்க பொருளாதார வசதியில்லாத காரணத்தால் தொடர்ந்து படிக்காமல், பள்ளத்தூரில் ஓர் ஆண்டு காலம், காசுக்கடையில் மாதம் நான்கு ரூபாய் சம்பளத்தில் வேலை பார்த்து வந்தார்.

## இளமைப் பருவம்

> "பிறந்த போது இருந்த செல்வ வசதி, நினைவு தெரிந்த போது இல்லை. சிறுவயதிலிருந்தே வறுமைதான் நினைவிருக்கிறது. குடும்பச் சூழல் வேளாண்மைக் குடும்பம்தான். படிப்பு, கல்வி, பட்டம், உத்தியோகங்கள் எல்லாம் வெகுதூரம். பள்ளிப் படிப்புக்கே ஊர்விட்டு ஊர், 6,7 கிலோ மீட்டர் நடந்து போய்ப் படித்தேன். படிக்க வேண்டாம் என்பதே என் குடும்பத்தாரின் தொடர்ந்த அறிவுரை"[2]

என்கிறார் அய்க்கண்.

## இளமைக் கல்வி

> "படிப்பதற்கு வசதி வாய்ப்புகள் இல்லையென்றாலும், படிக்க வேண்டும் என்ற ஆர்வத்தோடு இருந்தவர். இலவசக் கல்வியைத் தேடிக்கொண்டிருந்தக் காலத்தில், கோட்டையூரில் கல்வி வள்ளல் அழகப்ப செட்டியார் அவர்களால் District Board School துவக்கப்பட்டது. 5ஆம் வகுப்பில் சேர்ந்து

படிக்கலானார். அது சமயம் பள்ளத்தூரில் இருந்து தினமும் நடந்து கோட்டையூர் வந்து படித்துத் திரும்புவார். 8ஆம் வகுப்பு வரை படித்து தேர்ச்சி பெற்றார். பள்ளத்தூர் அருணாசலம் செட்டியார் மேல்நிலைப்பள்ளியில் 9,10,11 ஆம் வகுப்பு வரைப் படித்து, S.S.L.C. பரீட்சையில் முதல் மாணவராகத் தேர்ச்சி பெற்று ஆசிரியர்களால், பாராட்டுப் பெற்றார். பள்ளியில் நடைபெற்ற கட்டுரைப் போட்டி, பேச்சுப்போட்டிகளில் கலந்து கொண்டு, பரிசுகள் பெற்றார். கட்டபொம்மன் நாடகத்தை அவரே எழுதி மேடை ஏற்றி, நடித்து, சிறப்பாக வசனங்கள் பேசியும் புகழ் பெற்றார். பள்ளியின் கால்பந்து குழுவில் இடம் பெற்று விளையாடிப் பரிசுகள் பெற்றார்”[3]

## கல்லூரிப் படிப்பு

“காலேஜ் படிப்பெல்லாம் வேண்டாம், ஏதாச்சும் வேலை பார்க்கப்போ...” என்று பெற்றோர்கள் உறுதியாகச் சொன்னாலும், உறவுக்காரப் பெரியவர் இராமசாமி சேர்வை தந்த நூறு ரூபாய் பணத்தை வைத்துத்தான் அழகப்பா கல்லூரியில் புகுமுக வகுப்பில் சேர்ந்தார். ஆசிரியர் தனது கல்லூரிப் படிப்பைப் பற்றிக் கூறும் போது,

“கல்லூரியில் சேர வெறும் 100 ரூபாய் (அந்தக் காலத்தைச் சொல்கிறேன்) இல்லாமல், வெளியூர் சென்று என் உறவினர்களிடம் கடன் பெற்று வந்து பெற்றோரின் பெரும் எதிர்ப்புக்கிடையே, கல்லூரியில் சேர்ந்தேன். கல்லூரியில் எல்லோருமே என்னைவிட, வசதியானவர்கள், பணக்காரர்களாகக் காட்சியளித்தார்கள். வசதி மட்டுமல்லாமல், தோற்றத்தாலும் என் ஏழ்மை பளிச்சிட்டது, என்றாலும், வகுப்புப் பாடங்களில் முதல் தர மாணவனாக இருந்த

> ‘கல்விச் செருக்கு’ என் கல்லூரி வாழ்க்கையில் முத்திரை பதிக்கத் தவறவில்லை. தமிழ் வகுப்பிலே, முதல் கட்டுரையிலேயே (அந்தக் காலத்தில் தமிழ்வகுப்பில் வாரந்தோறும், கட்டுரை, மொழிபெயர்ப்புப் பயிற்சிகள் உண்டு) கல்லூரியில் ஆசிரியர் மாணவர் ஆகியோரின் ஆங்கில மோகத்தையும், நாகரிகத்தையும் கண்டித்துக் காரசாரமாக எழுதிவிட்டேன். அதைப் படித்த ஆசிரியர் திரு.உ.பாலசுப்பிரமணியம் அவர்கள், அந்தக் கட்டுரையை எல்லோருக்கும் வாசித்துக் காட்டிவிட்டு, அவர்களது ஒட்டு மொத்த வெறுப்புக்கு நான் ஆளாகி விடக்கூடாது என்ற நல்ல எண்ணத்தில் என் பெயரை மறைத்துவிட்டார். எனினும், உண்மை வெளிவந்து, நான் கல்லூரியில் ‘ஹீரோ’ ஆகிவிட்டேன். அதனால், முதலாண்டு மாணவர் சார்பாளர் பதவித் தேர்தலிலேயே என் நண்பர்கள் என்னை வேட்பாளராக்கி, தம் சொந்தச் செலவில் விளம்பரத் துண்டுப் பிரச்சாரம் (துண்டு என்றால் மிகச் சிறிய துண்டு அதுதான்) அச்சடித்து விநியோகம் செய்து விட்டார்கள். அதைப் பார்த்து அஞ்சிய பணக்கார வேட்பாளர்கள், என் நண்பர்கள் மூலம் என்னைப் பயமுறுத்தி, போட்டியலிருந்து, விலகச் செய்து விட்டார்கள்”[4]

கல்லூரியில் சேர்ந்து படித்துத் தேர்வில் நல்ல மதிப்பெண் பெற்று வெற்றி பெற்றார். அவர் பெற்ற மதிப்பெண்ணுக்கு பொறியியற் கல்லூரியில் சுலபமாகச் சேர்ந்திருக்கலாம். ஆனால் அவர் அழகப்பா கலைக்கல்லூரியில் பி.ஏ. புள்ளியியலும், கணிதமும் படித்தார். ஆசிரியர் பயிற்சி (பி.எட்.) முடித்து ஆசிரியராக ஆர்வம் கொண்டு, அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் சேர்ந்து படித்து வெற்றிக்கண்டார். காரைக்குடி

நகராட்சி முத்துக் கருப்பன் விசாலாட்சி நினைவுப் பள்ளியில் கணக்காசிரியராகப் பணியாற்றும் வாய்ப்பு அவருக்குக் கிடைத்தது. தமிழாசிரியராக வேண்டும் என்ற ஆர்வத்தால், முதுகலைத் தமிழ் (M.A.) படித்து, அதற்கான தேர்வு எழுதி, முதல் வகுப்பிலேயே தேறி வெற்றி பெற்றார். திருப்பத்தூர் வள்ளல் ஆறுமுகம்பிள்ளை, சீதையம்மாள் கல்லூரியில் தமிழ்த்துறையில் 1966இல் சேர்ந்தார். சேர்ந்த நாள் முதல் மாணவர்களுக்குப் பாடம் பயிற்றுவிப்பதிலும், ஆண்டு விழாக்கள் சிறப்பாக நடத்துவதிலும், விழா மலர் தயாரிப்பதிலும் மிகுந்த ஆர்வத்தோடு செயல்பட்டதால், கல்லூரி நிர்வாகத்தினர் பாராட்டைப் பெற்று, தமிழ்ப் பேராசிரியராகவும், தமிழ்த்துறைத் தலைவராகவும், தேர்வு பெற்றுச் சிறப்பாகப் பணியாற்றி ஓய்வு பெற்றார். கல்லூரிப் பணியிலிருந்து ஓய்வு பெற்ற பின்பும், இன்று வரை சமுதாயத் தொண்டில் ஈடுபட்டு வருகின்றார்.

## இல்லற வாழ்வு

கோட்டையூரில் 20 ஆண்டுகளுக்கு மேல் பேரூராட்சித் தலைவராக, சேர்மனாக இருந்த அருணாசலம் அம்பலத்தின் செல்ல மகள் திருமதி.வசந்தா. திருமதி. வசந்தா வாயில் வெள்ளிக் கரண்டியோடு பிறந்தவர். செல்வாக்கான, செல்வம் நிறைந்த குடும்பம்.

பள்ளி ஆசிரியராகப் பணியாற்றிய திருமதி.வசந்தா அவர்களைத் திருமணம் செய்து கொண்டார். திருமதி.வசந்தா அவர்கள் ஆசிரியரின் வாழ்க்கையில் பெயருக்கு ஏற்றாற் போல் வசந்த வரவாக வந்தவர். படைப்பாசிரியர் துணைவியாரின் துணையோடு வாழ்க்கையில் உயர்ந்த நிலைக்கு வந்தவர் என்பது மட்டும் உறுதி. ஆசிரியர் தமது திருமணத்தைப் பற்றிக் கூறும்போது,

> "என்னுடைய விருப்பத்திற்கு எதிராக கல்லூரியில் நான் படித்துக் கொண்டிருந்தபோது நடந்தது. பொருளாதார வசதி என்பதே இல்லாமல், முற்றிலும் மாமனார் தயவிலே குடும்பம் நடத்தும் வேதனை

இருந்தாலும், மனைவியின் அன்பும், பாசமும் ஆதரவும், என்னைப் பட்டதாரியாக்கி, வாழ்க்கையில் உயர்த்திக்கொண்டே சென்றன. ஒருவேளை அந்தத் திருமணம் நடந்திராவிட்டால், நான் இந்த நிலைக்கு உயர்ந்திருக்க மாட்டேன் என்று இப்போது எனக்கு ஞானோதயம் ஏற்பட்டிருக்கிறது"[5]

வாழ்க்கை என்பது ஒருவரைத் தவிர்த்து ஒருவர் இல்லை. இருவரின் கூட்டு முயற்சிதான் வாழ்க்கையின் வெற்றி என்பதற்கு இவர்களின் வாழ்க்கை ஒரு சிறந்த முழுமையான எடுத்துக்காட்டாகும். ஒவ்வொரு ஆணின் வெற்றிக்குப் பின்னால், ஒரு பெண் இருக்கிறாள் என்பது ஆன்றோர் வாக்கு. அந்த வகையில் வசந்தா அம்மையார் அவர்கள், வள்ளுவர் கூறும் இல்லறப் பண்பில் வழுவாது, விருந்தினர், உறவினர், நண்பர்கள் அனைவரையும் அன்பால் உபசரித்து இல்லறக் கடமைகளை ஆற்றியதோடு தன் கணவருக்கு ஊக்கமும், உதவியும் செய்து சிறந்த நூல்களைப் படைப்பதற்கு உறுதுணையாக இருந்தவர். படைப்பாசிரியரின் இல்லற வாழ்வு சிறப்பாக இருந்தது என்பதற்கு அடையாளமாக அவரின் இரு கண்களாக இலங்கும் திருமகள்கள் இருவர். திருமகள்களுக்கு ஏற்ற மருமகன்கள், பேர்சொல்லப் பேரன்களைப் பெற்று நல்லதொரு குடும்பம் பல்கலைக்கழகமாகப் படைப்பாசிரியரின் இல்லறம் விளங்கியது என்பதில் சிறிதும் ஐயமில்லை.

## படைப்பாசிரியர் பணியாற்றிய நிறுவனங்கள்

படைப்பாசிரியர் பேராசிரியராகப் பணியாற்றியதோடல்லாமல், பல நிறுவனங்களுக்கும், சங்கங்களுக்கும், அமைப்புகளுக்கும் தலைவராகவும், உறுப்பினராகவும் பணியாற்றியுள்ளார்.

1. புதுடில்லி, இந்தி நூலாசிரியர் பெருமன்றத்தின் (Authors Guild of India) உறுப்பினர்

2. சென்னை, தமிழ்நாடு, தொடர்கல்வி வாரியத்தின் (Tamilnadu Board of Continuing Education) ஆட்சிக்குழு உறுப்பினர்.

3. சிவகங்கை மாவட்டத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் தலைவர்

4. மத்திய மின் வேதியல் ஆய்வு நிலையத்தின் (CECRI) மனித மேம்பாட்டு அறிவியல் அமைப்பின் (FASOHD) துணைத் தலைவர்

5. சிவகங்கை மாவட்ட நுகர்வோர் கழகத்தின் துணைத்தலைவர்

6. சிவகங்கை மாவட்டத் திருக்குறள் பேரவையின் துணைத் தலைவர்

7. அழகப்பா அரசு கலைக்கல்லூரி முன்னாள் மாணவர் பேரவையின் துணைத் தலைவர்

8. திருப்புத்தூர்ச் தமிழ்ச் சங்கத்தின் செயற்குழு உறுப்பினர்.

9. காரைக்குடி தமிழ் இசைச் சங்கத்தின் செயற்குழு உறுப்பினர்

10. வள்ளல் அழகப்பா தமிழ் இலக்கியப் பேரவையின் புரவலர்

11. சாக்கோட்டை வட்டாரக் கல்விக்குழுவின் உறுப்பினர்

12. கோட்டையூர்–வேலங்குடி தஞ்சாவூர் அருணாசலம் செட்டியார் அரசு மேல்நிலைப் பள்ளியின் மேம்பாட்டுக் குழுத் தலைவர்

13. தமிழ்நாடு வல்லம்பர் சங்கத்தின் பொதுச் செயலாளர்

14. பாலைய நாட்டு வல்லம்பர் கல்வி அறநிலையின் செயலாளர்

15. SPR கல்வி அறநிலையின் செயலாளர்

16. பழனி ஸ்ரீ சண்முக சேவா நாட்டார் அறக்கட்டளையின் நிர்வாக அறங்காவலர்

17. கோட்டையூர்–வேலங்குடி புளூஸ் கால்பந்துக் கழகத்தின் பொதுச்செயலாளர்

## விருதுகள்–பரிசுகள்

எழுத்தாளர் அய்க்கண் தமது திறமையாலும் படைப்பாற்றலினாலும் பல்வேறு விருதுகளையும் பரிசுகளையும் பெற்று, சமுதாயத்தில் சிறந்து விளங்குகிறார்.

- தவத்திரு குன்றக்குடி அடிகளார் இவருக்கு 'நற்கதைநம்பி' என்ற விருதும் பதக்கமும் வழங்கிப் பாராட்டியுள்ளார்.

- காஞ்சி காமகோடி பீடம் ஜெகத்குரு ஜெயேந்திர சுவாமிகள் 67வது ஜெயந்தி விழாவில் 'ஸ்ரீ ஜெயேந்திரர் இலக்கியப் பரிசு' வழங்கிப் பாராட்டி விருது வழங்கியுள்ளார்.

- இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றமும், அழகப்பா பல்கலைக்கழகமும், இவருக்குப் 'புதின இலக்கியச் செல்வர்' பட்டமும், மத்திய நிதி அமைச்சர் மாண்புமிகு ப.சிதம்பரம் அவர்கள் 'எழுத்து வேந்தர்' பட்டமும், சென்னை வி.ஜி.பி. நிறுவனம் இலக்கிய விருதும் வழங்கியுள்ளனர்.

- தமிழ்நாட்டில் 100 சிறந்த சாதனையாளர்களில் ஒருவராகத் தேர்ந்தெடுக்கப் பெற்று, சென்னையில் 'முகம்' பத்திரிக்கை, முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ.விசுவநாதம் அவர்கள் தலைமையில் நடத்திய விழாவில், திரு.V.G.சந்தோஷம் அவர்களால் பரிசிலும் பொன்னாடையும் வழங்கிப் பாராட்டப் பெற்றுள்ளார்.

- 11.12.2005 அன்று புதுக்கோட்டை அருள்மிகு சாயிமாதா சிவபிருந்தா தேவி நிறுவிய திலகவதியார் திருவருள் ஆதீனத்தின் சார்பில் தவத்திரு தயானந்த சந்திரசேகர அடிகளார், நடத்திய திருமந்திர ஆய்வு மாநாடு, ஆய்வுரைக் களஞ்சியம் நூல் வெளியீட்டு விழாவில், பேரூர் ஆதீனம் தவத்திரு மருதாசல அடிகளார், முன்னாள், கல்வி, செய்தி, அறநிலையத்துறை அமைச்சர், அருளாளர் இராம.வீரப்பன் அவர்கள்

கோவை காமாட்சிபுரி ஆதீனம் சாக்த ஸ்ரீ சிவலிங்கேஸ்வர சுவாமிகள் ஆகியோர் கலந்து கொண்ட நிகழ்ச்சிகளில் பேராசிரியர் அய்க்கண் அவர்களுக்கு "திருமந்திரத்திலகம்" என்னும் பட்டமும், விருதும் வழங்கப்பெற்றது.

- தமிழக அரசு, ஆங்கிலம் முதலிய 22 மொழிகளில் மொழி பெயர்த்து வெளியிடுவதற்காக, இதுவரை தமிழில் வெளிவந்த சிறந்த 16 கதைகள் தேர்ந்தெடுக்கப் பெற்றதில், பேரறிஞர் அண்ணா, மூதறிஞர் ராஜாஜி, புதுமைப்பித்தன், கு.அழகிரிசாமி, ஜெயகாந்தன், ஆர்.சூடாமணி, சுஜாதா, முதலியோரின் கதைகளோடு இவரது கதையும் இடம் பெற்றுள்ளது.

- அனைத்து உலகத்தமிழ் எழுத்தாளர்களிடையே, மலேசியா–கோலாலம்பூர் உலகத்தமிழ்மறை ஆராய்ச்சி மாநாடு (2005) நடத்திய சிறுகதைப் போட்டியில் இவரது கதை முதற்பரிசு பெற்றது.

- உத்தரப்பிரதேஷ் அரசு நிறுவனமான இந்தி சமஸ்தான் ஆர்தர்ஸ் கில்டு ஆப் இந்தியா (Authors Guild of India) மூலம், தென் மாநிலங்களான தமிழகம், கேரளா, ஆந்திரம், கர்நாடகா எழுத்தாளர்களிடையே நடத்திய சிறுகதைப் போட்டியில் இவரது கதை முதற்பரிசு பெற்றது.

- டெல்லி சாகித்ய அகாடெமி தொகுத்துள்ள பெண்ணியச் சிறுகதைகள் நூலில் இவரது கதையும் தேர்ந்தெடுக்கப்பெற்றுள்ளது.

- 'தினமணிகதிர்' வரலாற்று நாவல் போட்டி, 'கல்கி'யின் சிறுகதைப் போட்டி, (2 முறை முதற்பரிசு) கலைமகள், அமுதசுரபி குறுநாவல் போட்டிகளில் முதற்பரிசுகள் பெற்றுள்ளார்.

- புதுடெல்லி அனைத்து இந்திய வானொலி நடத்திய நாடகப் போட்டியில் முதல்பரிசு பெற்ற இவரது நாடகம், 19 தேசிய மொழிகளிலும் மொழிப்பெயர்த்து ஒலிபரப்பப்பட்டது.

- தமிழக அரசின் முதற் பரிசுகளை மூன்று முறை 'ஏணி' என்ற நாடகத்திற்காகவும், 'பிற்பகல்' 'சக்தி' என்னும் சிறுகதைத் தொகுப்புக்களுக்காகவும் பெற்றுள்ளார்.

- ஹைதராபாத் South Central Railways–ன் லலித கலா நிலையம் நடத்திய நாடகப் போட்டியிலும், தமிழக அரசின் சிறுசேமிப்புத்துறை நடத்திய நாடகப் போட்டியிலும், 'தினமணி' நடத்திய திரைக்கதை வசனப் போட்டியிலும் முதற்பரிசுகள் பெற்றுள்ளார்.

- தொலைக்காட்சியில் 'சீதா', 'ஒரு பெண் மனைவியாகிறாள்' முதலிய தொடர்களும், பல நாடகங்களும், வானொலியில் பல நாடகங்களும் வெளியாகியுள்ளன.

- சென்னையில் இவருடைய நாடகங்கள், மேடை நாடகங்களாக நடிக்கப்பெற்றன.

- Institute of Asian Studies நிறுவனம், ஆங்கிலத்தில் வெளியிட்டுள்ள தமிழ் இலக்கியம் பற்றிய கலைக்களஞ்சியத்தில் Encyclopaedia இவரைப் பற்றிய மதிப்பீட்டுக் கட்டுரை எழுதப்பெற்றுள்ளது.

- இவருடைய கதைகள் சிலவற்றை ஹிந்தியில் மொழி பெயர்த்து, பத்ரஜன் என்ற புத்தகமாக, சென்னை Forum For Science And Culture என்ற நிறுவனம் வெளியிட்டிருக்கிறது.

- இவருடைய புத்தகங்கள், சென்னை, மதுரை, கோவை, திருச்சிப் பல்கலைக்கழங்களிலும், தன்னாட்சிக் கல்லூரிகளிலும், சிங்கப்பூர்ப் பள்ளிகளிலும் பாடநூல்களாக வைக்கப்பெற்றுள்ளன.

- தமிழக அரசின் ப்ளஸ்–டூ வகுப்புத் தமிழ்த் துணைப்பாடநூலில் இவருடைய கதைகள் பாடமாகச் சேர்க்கப்பெற்றுள்ளன.

- ஆங்கிலம், இந்தி, வங்காளி, மலையாளம், கன்னடம், தெலுங்கு, ஒரியா, மொழிகளில் இவரது கதைகள் மொழி பெயர்க்கப்பெற்றுள்ளன.

- ஆனந்தவிகடன், கல்கி, குமுதம், குங்குமம், ஓம்சக்தி, ராணி, தினமலர், அமுதசுரபி, கலைமகள் முதலிய தமிழகத்துப் பத்திரிக்கைகளிலும், மும்பை BOLD INDIA TAMIL NEWS மலேசியா, சிங்கப்பூர், தமிழ்மலர், லண்டன், லண்டன் முரசு முதலிய பத்திரிக்கைகளிலும் ஏறத்தாழ 1000 சிறுகதைகளும் நாவல்களும், நாடகங்களும் எழுதியுள்ளார்.

- மலேசியா, சிங்கப்பூர் நாடுகளுக்கு இரண்டு முறை இலக்கியப் பயணம் மேற்கொண்டிருக்கிறார்.

- AUTHORS GUILD OF INDIA இரண்டும் இணைந்து ஜம்மு(காஷ்மீர்)வில் நடத்திய கருத்தரங்கிலும், அ.இ.தமிழ் எழுத்தாளர் சங்கம், மவுண்ட் அபு (ராஜஸ்தான் மாநிலம்)வில் Brahma Kumaris World Spiritual Universityயில் நடத்திய கருத்தரங்கிலும் பங்கேற்றுள்ளார்.

- இவருடைய படைப்புக்களைப் பேராசிரியர்களும், மாணவர்களும் Ph.D. M.Phil. பட்டங்களுக்காக ஆய்வு செய்த வருகின்றனர்.

## பிறர் மதிப்பீடுகள்

இவருடைய படைப்புகள் பல பதிப்பகத்தின் வழி வெளி வந்துள்ளன. மணிவாசகர் பதிப்பகத்தின் உரிமையாளர் ச.மெய்யப்பன் பின் வருமாறு இவரைக் குறித்து மதிப்பீடு செய்துள்ளார்.

> "கிராமங்களின் நிறைவான பண்பு நலன்களை உயர்த்திக் காட்டுகின்ற ஆசிரியர் அந்த வட்டாரத்தின் குறைகளையும் சுட்டிக் காட்டி, அவற்றை நீக்குவதற்கான தீர்வுகளையும், குறிப்பிட்டுத்

தெருட்டியிருப்பது, அவருடைய ஆக்கப்பூர்வமான கண்ணோட்டத்தை உறுதி செய்கிறது. 'ரியலிஸம்' 'நடைமுறை இயல்பு' என்ற போர்வைகளிலே நிகழ்காலக் கேடுகளை மட்டும் பூதக்கண்ணாடி வைத்துக் காட்டாமல், எதிர்கால உயர்வுக்கான நெறிகளையும், கூறியிருக்கும் ஆசிரியரின் சமுதாய அக்கறையை நாம் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம்"[6]

பழம் நீ பதிப்பகத்தார்

"கதைகள் என்பது கற்பனைப் பாத்திரங்கள் மட்டுமல்ல, ஒரு சிலரின் வாழ்வில் நடந்த நிகழ்ச்சிகளை இந்நூலிலே அழகாகப் படம் பிடித்துக் காட்டுகிறார் ஆசிரியர், அவர் படைத்துள்ள பாத்திரப் படைப்புகள் நம் கண்முன்னே நின்று நிழலாடும் உயிருள்ள ஜீவன்கள்"[7]

தமிழாலய பதிப்பகத்தார் தமது பதிப்புரையில்

"நூலாசிரியர் அவர்களின் கதை சொல்லும்திறன் அழுத்தமான, கருத்தைக் கூட அழகாக, எளிமையாக வலியுறுத்தி இருக்கிறது. சமுதாயத்தில் பெண்களின் நிலை உயர்வடைய வேண்டும் என்ற நோக்கத்திற்காக எழுதப்பட்டதே இந்த நாவல்"[8]

கலைமாமணி டாக்டர் விக்ரமன் அவர்களின் பாராட்டுரையில்

"வாழ்வில் சோம்பியிருக்காமல் உழைத்தால் உயரலாம் என்ற உன்னதக் கருத்து, நூலெங்கும் இழையோடிச் செல்வது இன்றைய

> இளந்தலைமுறையினருக்குத் தேவையான இன்றிமையாத ஒரு கருத்தாகும்”[9]

மணிவாசகர் பதிப்பகம் மெ.மீனாட்சி சோமசுந்தரம் அவர்கள் குறிப்பிடுகையில்,

> “இவருடைய கதைகள் தென் பாண்டித்தமிழில் எளிய தமிழில், பேச்சு நடையில், உரைநடையை அமைத்து வாசகர்கள் படிக்குமாறு செய்து வருபவர், இவர் சொற்களால் புலப்படுத்தும் செய்திகளோடு இவர் சொல்லாமல் சொல்லும் குறிப்புகளும் நம்மைச் சிந்திக்க வைக்கும்”[10]

குன்றக்குடி குருமகா சந்நிதானம் பொன்னம்பல அடிகளார்,

> “ ‘நற்கதை நம்பி’ பழகுவதற்கு இனிய பண்பாளர், சிறந்த தமிழ் அறிஞர், ஆற்றல் வாய்ந்த எழுத்தாளர், வாழ்வாங்கு வாழ்ந்த சிறந்த மாமனிதர், தமிழ்மொழிக்குப் புதிய ஆக்கம் சேர்த்தவர், இவருடைய படைப்புகள், சமுதாய மேம்பாட்டிற்கும் தமிழ் பண்பாட்டு வளர்ச்சிக்கும் பெரிதும் அரண் செய்பவை. மானுடத்தை உயர்த்திப் பிடித்தவை, வரலாற்றுக்கு ஒளி ஊட்டுபவை”[11]

முன்னாள் நாடாளுமன்ற முன்னாள் உறுப்பினர், கல்வி வள்ளல் பி.சுப்பையா அம்பலம் குறிப்பிடும்பொழுது,

> “முயற்சியுடையார் இகழ்ச்சி அடைவதில்லை” என்பது உலக நியதி. அதற்கு எடுத்துக்காட்டாக நம் அயக்கண் அவர்கள் விளங்குகிறார். அவர்கள் எல்லா செல்வங்களும் பெற்று நீடுழிவாழ வாழ்த்தி இறைவனை வணங்கிப் பிரார்த்திக்கின்றேன்”[12]

தமிழ்நாடு வல்லம்பர் சங்கத் தலைவர் அறமனச்செம்மல் பழ.படிக்காசு அவர்கள் தமது வாழ்த்துரையில்,

> "உலகம் போற்றும் ஓர் எழுத்து வேந்தனை ஈன்று தந்தது எங்கள் சமுதாயம் என்று நாங்கள் பெருமை கொள்கிறோம். வீரமகனை ஈன்ற புறநானூற்றுத்தாய் பெருமை கொண்டது போல பேராசிரியரை எழுத்து உலகுக்குத் தந்த நாங்கள் பெருமை கொள்கிறோம்"[13]

இந்து மதாபிமான சங்கத்தலைவர், அழகப்பா பல்கலைக்கழக ஆட்சிக்குழு உறுப்பினர் சக்தி அ.திருநாவுக்கரசு அவர்கள் கூறுகையில்,

> "திறமையான எழுத்தாளர், அளவான பேச்சாளர், எல்லோருடைய அன்புக்கட்டளைகளையும் ஏற்றுச் செயல்படும் ஆற்றல் மிக்கவர். தமிழால் தன்னையும் வளர்த்துக்கொண்டு தன்னால் தமிழை வளர்க்கும் பெருந்தகை"[14]

தொழில்வணிகக் கழகத் தலைவர் குருதிக் கொடைமணி முத்துபழனியப்பன் தமது பாராட்டுரையில்,

> "எண்ணம் போல நிறைவான வாழ்க்கை வாழும் பேராசிரியர் பிறந்து வளர்ந்த மண்ணை நேசித்து, பிறந்த மண்ணுக்கும் பெருமை சேர்த்த தகைமையாளர், அவருடைய எழுத்துக்கள் காலத்தால் அழியாதவை"[15]

காரைக்குடி கம்பன் அறநிலை நவயுக நா.மெய்யப்பன் அவர்கள்

> "பேரறிஞர் அண்ணாவால் சிறுகதை மன்னன் என்று பாராட்டப்பெற்ற திருக்கோட்டியூர் தென்னரசுவின் மறைவுக்குப்பின் அந்த இடத்தை நிரப்பிய சிறுகதை

மன்னன்தான் இவர். அண்ணாவின் வழியில் சிறுகதை எழுதிச் சிந்தனையைத் தூண்டி வருகிறார்"[16]

சட்டமன்ற முன்னாள் உறுப்பினர் சுப.துரைராஜ் அவர்கள் தமது வாழ்த்துரையில்,

> "டாக்டர் அய்க்கண் சிறந்த எழுத்தாளர். சிற்றூரில் பிறந்து கல்விப் பணியோடு, சமுதாயப் பணிகளிலும் ஈடுபட்டு, நம்செட்டிநாட்டுப் பகுதியின் கலாச்சாரம், பண்பாட்டினைத் தமது பேனாமுனை மூலமாக அகில உலகத்திற்கும் எடுத்துக்காட்டி நமது தமிழ் மொழிக்கும் பெருமை சேர்த்தவர்"[17]

ஆறுமுகம் பிள்ளை சீதையம்மாள் கல்லூரி செயலர் நா.ஆறு.நாகராசன் அவர்கள்

> "திரு.அய்க்கண் அவர்கள் சிறந்த எழுத்தாளர். புதுமைச் சிந்தனையாளர். கதைக்கு அவர் எடுக்கின்ற கருவும், அதற்கு கொடுக்கின்ற உருவும், அதைத் தொடுக்கின்ற முறையும் ஆங்காங்கு சிதறி விழும் கருத்துக்களும், அவர் ஒரு புதுமைச் சிந்தனையாளர் என்பதைத் தெளிவாகக் காட்டும்"[18]

ஆறுமுகம் பிள்ளை சீதையம்மாள் கல்லூரி முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர் பா.நமச்சிவாயம் தமது பாராட்டுரையில்,

> "காலத்துக்கேற்ற கதைகளையும், காலத்தின் போக்கினையும் மாற்றிக் காலத்தை வெல்கின்ற கதைகளையும், படைக்கும் எழுத்தாளர்களுள் அய்க்கண்ணும் ஒருவர். புதிய அடிப்படையின் மேல்

பொலிவுமிக்க நல்ல கதை மாளிகையைக் கட்டும் திறன்மிக்கவர்"[19]

## ஆசிரியரின் விருது படைப்புகள்

| தலைப்பு | விருதுப் பெயர் விவரம் |
| --- | --- |
| 1. விடைதவறிய கணக்குகள் (குறும்புதினம்) | வாரப்பத்திரிக்கை ஒன்றில் தொடராக வெளிவந்தது |
| 2. இரண்டாவது ஆகஸ்டு 15 | இலக்கிய பீடம் நடத்திய திருமதி. ரங்கநாயகி அம்மாள் நினைவு நாவல் போட்டியில் 2002ஆம் ஆண்டுக்கான பரிசு ரூ.5000 பெற்ற சமூகப் புதினம். |
| 3. விடிவெள்ளி | உலகப் புத்தக நாள் வெளியீடு |
| 4. மறுபக்கம் | மணிவிழா வெளியீடு |

அய்க்கண் எழுத்தாளர் ஆனதற்குரிய காரணங்களை அவரே கூறுகின்றார்.

> "தொடக்கப்பள்ளியில் தொடங்கிய எழுத்தார்வம் இங்கு வளர்ந்து பரிணமித்தது. பள்ளி வரலாற்றிலேயே முதல் சாதனையாக ஜெயக்கொடி என்ற பெயரில் ஒரு கையெழுத்துப் பத்திரிக்கை தொடங்கினோம், முட்டாள் என்ற புனைப்பெயருடன் பரபரப்பான தொடர்கதை எழுதினேன்"[20]

> "தொடக்கப்பள்ளி, பள்ளிக் காலங்களில் பள்ளி இலக்கிய மன்றங்களின் செயலாளனாக நான்தான் இருப்பேன். வாரந்தோறும், அல்லது ஆண்டு விழாக்களில் நாடகம் நடிக்க, நாடகங்கள் தேவை.

பாடப்புத்தகங்களில் உள்ள நாடகங்கள் தீர்ந்து போனபிறகு, புதிதாக நாடகம் எழுத வேண்டிய அவசியம், அவசரம் என்னை எழுத்தாளனாக ஆக்கிவிட்டன"[21]

"அழகப்பா கல்லூரியில் எனக்கு ஆசிரியராக வாய்த்த தமிழறிஞர் கவிஞர்.கோ.க.தேசிகன் அவர்கள் என் படைப்புத் திறமையிலே நிறைந்த நம்பிக்கை உடையவர். நான் எழுதும் கதைகளையெல்லாம் அவ்வப்போது படித்துப் பாராட்டி ஊக்குவிப்பவர். 'பேர்ள்எஸ்பக்' எழுதிய நல்லபூமி போல, நீயும் உன் வட்டாரத்து மக்கள் பண்பாட்டையும், கலாச்சாரத்தையும் பின்புலமாக வைத்து, நாவல் எழுது.. உன்னை விட்டால் வேறு யாரும் இல்லை. நீதான் எழுத வேண்டும் என்று அடிக்கடி என்னிடம் அறிவுறுத்திக் கொண்டேயிருப்பார்"[22]

இவருடைய முதல் சிறுகதை 'ஆனந்த விகடனில்' பிரசுரமானது. சிறுகதைகள் நிறைய எழுதியிருந்தாலும், புதினங்களும், நாடகங்களும் எழுதி உள்ளார். சிறுகதை எழுதிய அவர் புதினம் எழுதுவதற்கான காரணத்தையும் அவரே சொல்கிறார்.

"நாம் சொல்ல விரும்பும் கருத்தோ, நிகழ்வோ சிறுகதைக்குள் அடங்காத நிலை ஏற்படும்போது, புதினத்தைக் களனாக எடுத்துக்கொள்கிறேன். ஓவியன் தான் வரையவிருக்கும் பொருளின் அளவையும் எண்ணிக்கையையும் பொறுத்துத் திரைச்சீலையைத் தெரிவு செய்து கொள்வதைப் போலதான்"[23]

> “தன்னுடைய புதினங்களுக்கு கருவாக, ஒரு நிகழ்ச்சியின் தொடர்ச்சியோ, பல நிகழ்வுகளின் பாதிப்போ அல்லது வெவ்வேறான நகிழ்வுகளின் ஒருங்கிணைவோ, அமைகின்றன. ‘விடிவெள்ளி’ என்ற புதினத்தில் ஒரு சமுதாயத்தின் கலாச்சாரத்தையே கலைபூர்வமாக வெளிப்படுத்தி அதன் பிரச்சினைகளுக்குத் தீர்வு சொல்லி முன்னேற்ற வேண்டும் என்ற அகத் தூண்டுதலே கருவாக அமைந்தது எனலாம்”[24]

புதினங்களின் தலைப்புகள் பெரும்பாலும் கருவின் அடிப்படையில் தான் அமைத்துள்ளார்.

> “கருவின் அழுத்தத்தை நேரடியாகவோ, அல்லது குறிப்பாகவோ உருவகமாகவோ, அல்லது புகழ்பெற்ற தொடர்களாகவோ அமைப்பது வழக்கம். தலைப்புகள் சிலசமயம், சம்பந்தம் இல்லாமல் இருப்பது போல தோன்றினாலும், ஆழ்ந்த நோக்கில் பொருத்தம் இருப்பதை ஊகிக்கலாம். ‘ஜல்லிகட்டில் பசுமாடுகள்’ என்ற தலைப்பு மேற்போக்காக முரணமாக இருந்தாலும், புதினத்தைப் படித்து முடித்ததும், அதன் தலைப்பு சமுதாய நிலைமையைப் பளிச்சென துலக்குவதாக அமைந்திருப்பதை உணரலாம்”[25]

> “புதினங்களின் கதாப்பாத்திரங்கள் யாவையுமே, ‘கதாபாத்திரங்கள் அல்ல, உண்மைப் பாத்திரங்களே’, பெயர், ஊர், தோற்றம் ஆகியவை மாற்றங்களுக்கு உள்ளாகியிருந்தாலும், அவை நிஜ வாழ்க்கையில் எங்கேயோ, நம் கண்ணில்படும் படியாகவோ, அல்லது தூரத்திலோ வாழ்பவைதாம். கதாசிரியர்

பார்வையில் பட்டவர்களே பாத்திரங்களாகப் பரிணமிக்கிறார்கள்"[28]

என்கிறார் ஆசிரியர்.

புதினங்களில் படைத்திருக்கும் பல்வேறு கதாபாத்திரங்களில் பெண் கதாபாத்திரங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்துள்ளார். பெண்மைக் கதாபாத்திரங்களுக்கு முன்னுரிமை தந்தமைக்கான காரணத்தை ஆசிரியரே கூறுகிறார்.

> "நாம் சந்திக்கும் பாத்திரங்களில் ஆணோ, பெண்ணோ, யார் நம்மைப் பாதிக்கிறார்களோ, அவர்களை நாம் முன்னிலைப்படுத்துகிறோம். ஆண் உயர்ந்தவன் 'பெண் அடிமை' என்ற கொள்கையை நான் ஏற்காமல் உதவித் தள்ளுவதில் உறுதியாக இருக்கிறேன். பெண்ணை அடிமைப்படுத்தி எந்தச் சமுதாயமும் வாழ முடியாது, உயர முடியாது, முன்னேற முடியாது என்பதில் அழுத்தமான நம்பிக்கை கொண்டிருக்கிறேன். பெண்ணைத் தாழ்த்தும் எந்த நாடும் வாழ்ந்ததில்லை. பெண்ணை உயர்த்தும் எந்த நாடும் வீழ்ந்ததில்லை. இறைவன் படைப்பிலே, பெண்ணைத்தான் போற்றிப் படைத்திருக்கிறான். பெண்மையிலே தான் மானுடம் தெய்வத்தன்மை பெறுகிறது என்று நம்புகிறேன்"[27]

படைப்பாசிரியர் தமது புதினங்களுக்கு முன்னுரை முடிவுரை, அறிமுகவுரை தந்திருக்கிறார். சில புதினங்களில் தாம் புதினம் படைத்ததற்கான சூழல்களையும், காரணங்களையும் கூறுகிறார்.

> "பொதுவாகத் தமிழகத்தையே படைப்புக்களமாகக் கொண்டு தமிழ் இனம், தமிழ் இலக்கியம், தமிழ்ப் பண்பாடு, தமிழ்க்கலாச்சாரம் என்ற பெரிய

பின்புலத்தில், என்னுடைய பேனாவை நீண்ட காலமாக நடமாடவிட்டிருக்கிறேன். இடையிடையே சில வட்டாரங்களில் வாழும் இனத்தவர் சிலரின் வியப்புக்குரிய பண்பாட்டிலே மனம் தாக்கத்திற்குள்ளாகி வேறுபட்ட சில கதைகள் எழுதியிருக்கிறேன்.

செட்டிநாடு வட்டாரத்தில் நகரத்தாரோடு இணைந்து வாழும் வல்லம்பர் என்னும் அம்பலகாரர்களின் அரிய பண்புகளைப் பற்றியும் சில சிறுகதைகள் எழுதியிருக்கிறேன். கல்தோன்றி மண்தோன்றா முன் தோன்றி மூத்த குடிகளாய், மண்ணின் மைந்தர்களாக இந்த வட்டார ஊர்களில் அம்பலகாரர்களாக, தலைமையும், காவலும் நீதி நிர்வாகமும் அமைய வாழ்ந்த பாரம்பரியத்தை ஒரு பெரிய நாவல் திரையில் சித்தரிக்க விரும்பி இந்த 'விடிவெள்ளி'யைப் புலர வைத்திருக்கிறேன்'' 'கிராமத்துப் பெண்கள்' என்றாலே ஆணாதிக்கத்தின் அடிமைகளாய் இயங்கும், ஊமைப் பொம்மைகள் என்று நாகரீகவாதிகள் நினைத்துக் கொண்டிருக்கும் பட்டிக்காட்டுப் பொம்பிளைகள் எத்தகைய சிந்தனை வளமும், மன உறுதியும், செயல்திறனும் உடையவர்களாய் ஆண்களுக்குச் சமமாய், ஏன் சில சமயங்களில் – ஆண்களுக்கே வழிகாட்டுபவர்களாய் உயர்ந்து நிற்கிறார்கள் என்ற நிதர்சன உண்மையை இந்த நாவலில் சத்யவூர்மாய்ப் புலப்படுத்தியிருக்கிறேன்"[28]

"சுதந்திர இந்தியாவின் வரலாற்றிலே ஒரு திருப்பமாக 1965இல் இந்திய–பாகிஸ்தான் போர் ஏற்பட்டது. அப்போரின் நடப்பிலும், ஆயத்தத்திலும்,

விளைவுகளிலும் நாட்டு மக்கள் அனைவரும் ஆர்வமும் பொறுப்பும் உணர்ச்சியூட்டமும் பெற்றனர். இந்தப் போரின் பின்னணியிலே இக்கதையை எழுதியுள்ளேன். ஏறத்தாழ எல்லா நிகழ்ச்சிகளுமே போர்க்களத்தில் நடப்பதாக அமைந்திருப்பதால், போரின் தோற்றம், போக்கு, திட்டம், செயல், நடைமுறை, பயன் முதலிய எல்லாவற்றையும் செய்தித்தாள்கள், இராணுவ நூல்கள் மூலம் படித்தறிந்ததோடு, இந்திய ராணுவத்தில் பணியாற்றிய வீரர்கள் சிலரிடமே நேரடியாகச் சில நிகழ்ச்சிகளைக் கேட்டுத் தெரிந்து கொண்டு இந்நாவலை உருவாக்கியுள்ளேன்"[29]

"என்னுடைய பேராசையின் வெளிப்பாடாக ஒரு கிராமத்தின் குடும்பத்தை, இன்டெலெச்சுவல்–களாக உயர்த்தி, அவர்களை அமெரிக்க அதிகாரியாகவும், பிரான்ஸின் விஞ்ஞானியாகவும், டில்லி மத்திய அரசின் ஐ.ஏ.எஸ்.அதிகாரியாகவும், பெங்களூரில் ஸ்பெஷலிஸ்ட் டாக்டராகவும் உருவாக்கி மகிழ்ச்சியடைந்திருக்கிறேன். நம்நாட்டுத் தமிழர்கள் மம்மி–டாடி கலாசாரத்தில் மூழ்கி தமிழ்ப் பண்பாடுகளை மெல்ல, மெல்ல–இல்லை; வேகமாகக் குழிதோண்டிப் புதைத்துக் கொண்டிருக்கும் காலக் கட்டத்தில், தமிழ்ப்பண்பாட்டு அருமையை உணர்ந்து, தமிழ் பேசும் மேனாட்டுப் பெண்ணைக் கிராமத்துக்கு அழைத்து வந்து இன்னொரு கனவை மெய்ப்பட வைத்திருக்கிறேன்"[30]

"என் அன்புக்கும் மதிப்புக்கும் உரிய தமிழறிஞர் டாக்டர் சி.பா. அவர்கள் எனக்கு அளித்த ஊக்கமே

இந்த ஆக்கத்துக்கு உரமாக அமைந்தது. முற்றிலும் கிராமிய மணம் கமழும் நாவலாக இதை எழுதியுள்ளேன்.

இந்நூல் வெளிவருவதில் எனக்கு இரட்டை மகிழ்ச்சி. ஒன்று எங்கள் தலைவர் கலைமாமணி விக்கிரமன் அவர்கள் இதை ஏற்று வெளியிடும் பெருமை. இரண்டாவது சிறந்த எழுத்தாளர் ஆர்.சூடாமணி இதைப் படித்துப் பார்த்துப் பாராட்டியதாக கலைமாமணி விக்கிரமன் அவர்கள் சொன்ன செய்தி, பெருமக்கள் இருவருக்கும் எளியோனின் மனமார்ந்த நன்றி"[31]

"திருப்பத்தூர் ஆறுமுகம் பிள்ளையின் புதல்வர் உயர்திரு.நாகராசன் அவர்கள் அவருக்குள்ள பல்வேறு வேலைகளுக்கிடையே அவர் இப்புத்தகத்துக்கு அணிந்துரை வழங்கியுள்ளார். அவர் என்னிடத்துக் காட்டும் அன்புக்கு நான் எவ்வாறு நன்றி சொல்லப் போகிறேன். நன்றி முழுவதையும் எடுத்துக்காட்ட, சொற்களால் முடியாது; நன்றி என்பது வாய்ப்பேச்சா? எழுத்தா? இல்லை... அது உள்ளத்தில் ஊறும் உணர்ச்சித் துடிப்பு, ஊமைத் தொடர்பு.. இது போல் கல்லூரி முதல்வர் பேராசிரியர் பா.நமச்சிவாயம், பொற்கிழிக் கவிஞர் ச.சவகர்லால், நண்பர் மு.வேலாயுதம் (மீனாட்சி பதிப்பகம், புதுக்கோட்டை) அனைவருக்கும் நன்றியைத் தெரிவித்துள்ளார். எனக்குத் துணையாகவும், தூண்டுதலாகவும் இருந்து வரும் நல்லவர்களுக்கும் இப்புத்தகத்தை ஏற்று ஆதரிக்கும் அன்பர்களுக்கும் என் பணிவான நன்றி; வணக்கம்"[32]

## ஆய்வு ஆதாரங்களான அய்க்கண்ணின் புதினங்கள்

1. உயிர் – 1972
2. மாபெரும் நாடு மாபெரும் மக்கள் – 1972
3. வயல் – 1979
4. கரையைத் தேடும் அலைகள் – 1985
5. இதோ ஒரு சாவித்ரி – 1985
6. நெஞ்சில் நெருடும் நினைவுகள் – 1985
7. என் மகன் – 1989
8. மண்ணின் மலர்கள் – 1991
9. விடை தவறிய கணக்குகள் – 1991
10. ஜல்லிக்கட்டில் பசுமாடுகள் – 1993
11. தீர்க்க சுமங்கலி – 1993
12. வெள்ளைத் தாமரை – 1994
13. ஒரு பெண் மனைவியாகிறாள் – 1995
14. நிழலில் நிற்கும் நிஜங்கள் – 1995
15. பெண் என்பது உடம்பு அல்ல – 1995
16. நெஞ்சில் ஓர் நெருஞ்சி – 1995
17. மறுபக்கம் – 1995
18. அவனுக்காக மழை பெய்கிறது – 2004
19. விடிவெள்ளி – 2004
20. இரண்டாவது ஆகஸ்ட் 15 – 2005

ஆய்வு ஆதாரங்களாக அமைந்த மேற்கூறிய புதினங்களில் ஆறு குறும்புதினங்கள் காணப்படுகின்றன.

மாபெரும் நாடு மாபெரும் மக்கள், விடை தவறிய கணக்குகள், பெண் என்பது உடம்பு அல்ல, கரையைத் தேடும் அலைகள், இதோ ஒரு சாவித்திரி, நெஞ்சில் நெருடும் நினைவுகள் ஆகிய ஆறும் குறும்புதினங்களாகும். இவைத் தவிர பிற பதினான்கும் நெடும் புதினங்களாகும்.

**உயிர் (1972)**

புதினம், சிறுகதை எனப் பல்வேறு இலக்கிய வடிவங்களில் தனக்கென்று ஒரு சிறப்பு நிலையையும், தனிப்பாதையையும் வகுத்துக்கொண்டவர் அய்க்கண்.

'உயிர்' என்னும் புதினம் 1972–ஆம் ஆண்டு வெளியிடப்பெற்றது. மனிதனுடைய 'மரணம்' எப்படிப்பட்டது விஞ்ஞான உலகம் எவ்வளவோ புதிய முயற்சியை எடுத்து வெற்றி பெறுகின்ற பொழுதில் மரணத்தை ஏன் தடுக்க முடியவில்லை என்பதை மையமாகக் கொண்டு எழுதப்பட்ட நாவல் இது.

ஆராய்ச்சி ஆராய்ச்சி என்று திரிகின்ற கண்ணன், சமூகத்தில் நிகழும் கொடுமையான மரணத்தைத் தடுக்கப் பல்வேறு முயற்சி மேற்கொள்வதும் இறுதியில் தன் முயற்சிக்கு இறைவனையே வேண்டுவதாகக் கதை அமைகின்றது.

அது மட்டுமின்றி ஆராய்ச்சியோடு முழுமையும் இணைத்துக்கொண்டு மீனா அவனை விரும்புவதும், ஆனால் கண்ணன் வேறு பெண்ணைத் திருமணம் செய்து கொண்டு வாழ்வதும், மீனாவின் இறப்பின் போது கண்ணன் புலம்புவதுமாய் கதைக்களமானது உணர்ச்சிகரமாய் அமைந்துள்ளது.

> “மீனா, இந்தக் கதையிலே தோன்றி இயங்கி மறைகின்ற வரையிலும் நம் அனுதாபத்தையும் மெல்ல மெல்லச் சம்பாதித்துக் கொண்டே செல்கிறாள். அவள் வாழ்வாங்கு வாழ்ந்து மறைந்து மரணத்தை வெல்கிறாள்.
>
> உள்ளபடியே மரணத்தை வெல்ல கங்கணங்கட்டிக் கொண்டு பாடுபட்ட மருத்துவர் கண்ணன், தன் முயற்சிக்கு உதவுமாறு சிவபெருமானிடம்

வேண்டுவதாக ஆசிரியர் படைத்திருப்பது மிகச் சிறந்த உத்தியாகும்"[33]

என்று பா.நமச்சிவாயம் தமது மதிப்புரையில் தெளிவுற விளக்குவதைப் போல அய்க்கண் அவர்களும் கதையை அமைத்திருக்கிறார்.

> "இதுவரை கண்டுபிடிக்கப்படாத இனிமேல் கண்டுபிடிக்கக்கூடிய விஞ்ஞான உண்மைகளை பின்புலமாகக் கொண்டு கற்பனைக்கதைகள் எழுதுவதை அறிவியற் கற்பனை என்பர். இம்முறையில் எச்.ஜி.வெல்ஸ், ஜீல்ஸ் வொன், காரல்காபெக் முதலிய பல மேனாட்டு எழுத்தாளர்கள் அரிய நாவல் படைத்திருக்கிறார்கள். ஆனால் தமிழில் இத்தகைய கற்பனை இலக்கியங்கள் மிகக் குறைவு.
>
> 'அமுத சுரபி'யில் பரிசு பெற்ற இந்நாவல், ஓர் அறிவியற்கற்பனையாகப் புனைந்து எழுதப்பட்டுள்ளது. பல விஞ்ஞான நூல்களையும் நோபல் பரிசு சம்பந்தமான நடைமுறைகளையும் படித்தறிந்த பின்னரே, இக்கதையின் கட்டுக்கோப்பை அமைத்தேன்"[34]

என்று அய்க்கண் புதினம் படைத்ததற்குரிய காரணங்களை விளக்குகின்றார்.

மனிதர்கள் திடீரென இறந்துவிடுவதால், அவர்களது குடும்பம் அனைத்துப் பாதிப்புகளுக்கும் உள்ளாகுகின்ற சூழலைக் கண்டு துடித்துப் போகின்றனர்.

> "பாஸ்டியர், நோய்க் கிருமிகளின் செயலைக் கண்டுபிடித்து மருத்துவத்துறையிலே புதுவழி காட்டியவர். இன்று நூற்றுக்கணக்காக

மருந்துகளைக் கண்டுபிடிப்பதற்கு ஆதாரமான உண்மையை ஆராய்ந்து கண்டு, இலட்சக்கணக்கான நோயாளிக்கு உயிர் கொடுத்த விஞ்ஞானி பாஸ்டியர். கண்ணனுடைய சிந்தையில் புதிய திருப்பத்தை அப்படம் ஏற்படுத்தியது.

'கடவுள் இரக்கமில்லாதவர் அல்லர். மனிதன்தான் முயற்சியில்லாதவன். நோய்களைத் தடுக்கும் வழிகளைக் கண்டுபிடித்தது போல், சாவையும் ஏன் தடுக்கக்கூடாது?"[35]

என்று பல்வேறு வகையான முயற்சியில் ஈடுபட்டு ஒரு நிமிடம், இரண்டு நிமிடம் பிழைப்பதற்குரிய மருந்தைக் கண்டுபிடிக்கிறான். அம்மருந்தை வெளிநாடுகளுக்கு அனுப்புகின்றான். உடல்நிலைக் கோளாறு ஏற்பட்டு மீனா இறந்து போகிறாள்,

"கண்ணனும் முரளியும் கீழே இறங்குவதற்கும், பாக்கியம் "ஐயோ மீனா!" என்று அலறுவதற்கும் சரியாக இருந்தது. மீனா போய்விட்டாள்! பிணத்தின் மீது விழுந்து கதறினான் கண்ணன்,

'மீனா!... ஐயோ, என் சகோதரி போய்விட்டாள்! என் தாய் போய்விட்டாள்!... என் காதலி போய்விட்டாள்!...

முரளி கண்ணனைத் தூக்கி நிறுத்தினான். அவனைக் கட்டிக் கொண்டு தேம்பினான் கண்ணன்....

நெஞ்சிலே வலி மிகுதியாகக் கொண்டேயிருந்தது.

"சார், தந்தி!" என்ற குரல் கேட்டு, வாசலுக்குச் சென்றான் முரளி. தந்தியை வாங்கிப் படித்தான், படித்ததும் மகிழ்ச்சியால் துள்ளிக் குதித்தான்.

> கண்ணனுடைய ஆராய்ச்சிக்காக, அந்த ஆண்டின் விஞ்ஞான நோபல் பரிசு வழங்கப்பட்டிருப்பதாக, ஸ்வீடனிலிருந்து தந்தி வந்திருந்தது. உள்ளே மகிழ்ச்சியோடு ஒடி வந்த முரளி, கண்ணனைப் பார்த்ததும் திடுக்கிட்டான். கண்ணனும் போய்விட்டான்! சாவை வெல்வதற்கு ஆயுதம் கண்டுபிடித்த வீரன் சாவினிடமே சரணடைந்துவிட்டான்"[36]

என்று அய்க்கண் புதினத்தை முடிக்கின்றார். பிற மனிதர்கள் இறந்து போவதைக் கண்டு 'மரணத்தை' வெல்லும் மாமருந்தைக் கண்டுபிடித்த கண்ணன், தன் உறவுகளான சகோதரி, தாய், காதலி ஆகியோர் இறந்ததால் வேதனையுற்று கண்ணனும் இறந்து விடுகிறான். அவன் இறந்ததும் அவன் கண்டுபிடித்த மருந்துக்காக நோபல் பரிசு கிடைப்பதாகக் கதையை முடிக்கின்றார் ஆசிரியர் அய்க்கண்.

விஞ்ஞானக் கற்பனையோடு எழுதப்பெற்ற 'உயிர்' புதினம் வாழ்வியல் தொடர்போடு அமைக்கப்பெற்றிருப்பது சிறப்பிற்குரியதாகும்.

## மாபெரும் நாடு மாபெரும் மக்கள்

இந்நாடும், இந்நாட்டைச் சேர்ந்த மக்களும் நலமுடனும், பாதுகாப்புடனும் வாழ்வதற்கு நாட்டில் படையம்சங்களே சிறப்பிற்குரியதாகும். அதன் அடிப்படையில் சுதந்திர இந்தியாவின் வரலாற்றுத் திருப்புமுனையாக அமைந்த, 1965ஆம் ஆண்டு நடைபெற்ற இந்திய – பாகிஸ்தான் யுத்தத்தை மையமாகக் கொண்டு எழுதப்பட்ட புதினம் இது.

> "சுதந்திர இந்தியாவின் வரலாற்றிலே ஒரு திருப்பமாக 1965ல் இந்தியா – பாகிஸ்தான் போர் ஏற்பட்டது. அப்போரின் நடப்பிலும், ஆயத்தத்திலும், விளைவுகளிலும் நாட்டுமக்கள் அனைவரும் ஆர்வமும்

> பொறுப்பும் உணர்ச்சியூட்டமும் பெற்றனர். இந்தப்போரின் பின்னணியிலே இக்கதையை எழுதியுள்ளேன்.
>
> ஏறத்தாழ எல்லா நிகழ்ச்சிகளுமே போர்க்களத்தில் நடப்பதாக அமைந்திருப்பதால் போரின் தோற்றம், போக்கு, திட்டம், செயல், நடைமுறை, பயன் முதலிய எல்லாவற்றையும் செய்தித்தாள்கள், இராணுவ நூல்கள் மூலம் படித்தறிந்ததோடு, இந்திய ராணுவத்தில் பணியாற்றிய வீரர்கள் சிலரிடமே நேரடியாகச் சில நிகழ்ச்சிகளைக் கேட்டுத் தெரிந்து கொண்டு இந்நாவலை உருவாக்கியுள்ளேன்"[37]

என்று குறிப்பிடுகின்றார்.

திருமணம் நிகழவிருக்கின்ற நேரத்தில் தந்தி வர, சரவணன் உடனடியாகப் போருக்குச் செல்கிறான். சரவணன், குமார், சுப்பு, உத்தம்குமார் ஆகிய நான்கு பேரும் மிகச் சிறந்த நண்பர்களாவர். போரில் ஒவ்வொருவரும் தனித்தனி தகுதியுடன் போரிட்டு, போரில் தன்னுயிரை மாய்த்துக் கொள்கின்றனர். அய்க்கண் அவர்கள் போரின் யுத்தத் தந்திரங்களை மிகத் தெளிவுபட நுணுகி ஆய்வு செய்து வெளிப்படுத்தியுள்ளார்.

**போர்த் தந்திரம்**

ஒரு படையை மற்றொரு படை வீழ்த்தும் முறையானது படையின் சிறப்பம்சம். குறிப்பாகப் போர்த்தந்திரமாகும். இதனை அய்க்கண் கதையில்,

> "புர்ர்.... என்று புறப்பட்டது 'நாட்' என்ற பூச்சி! வாள் போன்ற 'சேபர்' ஜெட்டை வீழ்த்தப் புறப்பட்டது, பூச்சி போன்ற 'நாட்'. சிறிது நேரத்தில் பாகிஸ்தான் ஜெட

ஒன்று சீறி வருவதை அப்துல்லா கண்டான். எதிரி விமானம் பல மைல் தூரத்தில் வரும்போதே மோப்பம் பிடிக்கும் கருவிகளெல்லாம் உடைய நவீனமான விமானம் சேபர்ஜெட், 'நாட்' வருவது தெரிந்ததும், ஜெட்டின் பெரிய பீரங்கிகள் குண்டுகளைப் பொழிந்தன. வேகமாகப் பாய்ந்து வந்த அப்துல்லா உடனே விமானத்தைச் சிறிது உயர்த்தி 'ஜெட்'டுக்கு மேலாகப் பறந்தான். ஜெட்டும் மேலே ஏற முயன்றது. ஆனால் பூதாகரமான யானை போன்ற உடலையுடைய ஜெட், மேலே ஏறுவதற்கோ இறங்குவதற்கோ, திரும்புவதற்கோ, சில வினாடிகள் ஆகும். அதற்குள்ளாக, வண்டு போன்ற 'நாட்' சட்டெனக் கீழே இறங்கி ஜெட்டின் கீழே பறந்தது.

இதைப் பார்த்ததும் 'ஜெட்டும்' கீழே இறங்க ஆரம்பித்தது. சரியான சமயத்தைப் பார்த்திருந்த அப்துல்லா உடனே 'ஜெட்'டின் பின்புறத்திற்கு வந்துவிட்டான். இப்பொழுது வாய்ப்பான நேரம் கிடைத்ததும் தன்னுடைய இரண்டு பீரங்கிகளாலும் சேபர் ஜெட்டின் அடிப்பாகத்தைச் சுட்டுத் துளைத்தான்"[39]

என்று போர்த்தந்திர முறையில் இந்தியப் படையின் சிறப்பம்சத்தையும் யுத்த முறைகளையும் தெளிவுபட நேரில் கண்டது போல, தன்னுடைய நுண்ணிய ஆய்வு நிலையில் ஆசிரியர் வெளிப்படுத்துகிறார்.

## போரில் மரணம்

தன்னுயிரை மாய்த்துக் கொள்கின்ற வீரர்கள் ஏராளம். அத்தகைய வீரர்கள் நாட்டுப்பற்றை மட்டுமே எண்ணிக் கொண்டு எதிரிகளை வீழ்த்துவர். சில நேரங்களில் அவர்களும் இறந்து போவது உண்டு. அந்நிகழ்வை இப்புதினத்தில் உணர்த்துகின்றார்.

"அழகப்பன் பொழிந்த குண்டு மாரியில், எதிரிகளே திகைத்து விட்டார்கள்! திடீரென்று ஒரு 'ட்ரூப்' வந்து தாக்குகிறதோ என்று இவர்கள் நினைக்குமளவுக்கு அழகப்பன் ஆக்ரோஷமாகச் சுட்டுக் கொண்டிருந்தான்.... அழகப்பன்... அங்கே இரத்த வெள்ளத்தில் அழகப்பன் கிடந்து புரண்டு கொண்டிருந்தான். ஓடிப்போய் அவனைத் தூக்கி மடியில் கிடத்திக் கொண்டார் ஜமேதார்.

என்ன, அழகப்பன் இப்படி முட்டாள்தனமாகச் செய்து விட்டாயே" என்று துடித்தார் கிருஷ்ணன் நாயர்.

அழகப்பன் தன் இடுப்பிலிருந்த மூவண்ணக் கொடியை எடுத்து ஜமேதாரிடம் கொடுத்தான்.

'சார்! இந்தக் கொடியைப் போஸ்ட்'டில் பறக்க விடுங்கள். அதை பார்த்தப் பிறகு தான் நான் சாக வேண்டும்!"...

...அவனுடைய மூவண்ணக் கொடி, நிலையத்தின் உச்சியில் பறக்கவிடப்பட்டது. வீரர்கள் அணிவகுத்து நின்று கொடி வணக்கம் செய்தனர். இந்தக் காட்சியைக் கண்குளிரப் பார்த்துக் கொண்டே அழகப்பன், சிரித்த முகத்தோடு அவனுடைய உயிர் பிரிந்தது."[40]

தேச விடுதலைக்காக பாடுபட்ட வ.உ.சி. அவர்களை ஆங்கிலப் படை தாக்கிய பொழுதும், கொடி கீழே விழாமல், கையில் கொடியைப் பிடித்துக் கொண்டு இன்னுயிர் நீத்தார். அதுபோன்ற நிகழ்வைப் போரில் வீரன் ஒருவன் செய்யும் செயலை அய்க்கண் உணர்த்துகின்றார்.

மேற்கூறியது போலவே பல்வேறுவிதமான போர்க் கருத்துக்களையும் திறம்பட விளக்கி, இந்திய தேசப் படைகளின்

பெருமைகளையும், வீரர்கள், கமாண்டோக்கள், போன்றோர்களின் தனிச்சிறப்புக்களையும் விவரித்துள்ளார்.

## வயல்

சிற்றூர்களில் நிகழ்கின்ற எதார்த்தப் பதிவுகளை அப்படியே நம் மனக்கண் கொண்டு உணர்த்தும் புதினம் 'வயல்' ஆகும். நமது நாடு வேளாண் நாடாகும். அதனைக் கருதியே 'இந்திய நாட்டின் முதுகெலும்பு கிராமங்கள்' என்பர். அத்தகைய சிற்றூரின் மண்வாசனையை இவரது படைப்புகள் அப்படியே நுகர்ந்து உணர்த்துகின்றன. குறிப்பாக 'கந்தன்' என்னும் ஏழை உழவனின் வாழ்க்கை நிலைகள், அவரைச் சார்ந்த சூழல், அவருக்கு ஏற்படுகின்ற பிரச்சினைகள் எனக் கதை அவரை மையமிட்டே நகர்கின்றது. இக்கதையை உருவாக்குவதற்குரிய காரணமாக,

> "என் நாவலில் வரும் ஏழை உழவனை நான் தமிழகத்துக் கந்தனாகப் படைத்திருந்தாலும், இந்த ஏழை உழவன் உலகெங்கும் நடமாடுகிறான் என்பதில் ஐயமில்லை. அவன் இஸ்மாயிலாக, ஸென்–லீ–யாக, ஹென்றியாக, மோ–தாண்ட் ஆக, பீட்டராக, கினும்பாவாக... உலகெங்கும் வாழத்தான் செய்கிறான். எனவே என்னுடைய கந்தனையும், அவனுடைய பிரச்சினைகளையும் எல்லோரும் புரிந்து கொள்ள முடியும்.
>
> கிராமங்களில் இயல்பாகவுள்ள உழைப்பு, ஒற்றுமை, அன்பு, பாசம், வெறுப்பு, போட்டி,பொறாமை முதலிய பண்புகளும், புதிய நாகரிகத்தின் வளர்ச்சி கிராமங்களில் நுழையும்போது ஏற்படும் சலசலப்பும் சலனங்களும், உலகத்தில் எல்லா நாடுகளும் பொருந்தும் என்பதும் என் நம்பிக்கை"[41]

என்று புதினத்தின் முதன்மைப் பாத்திரமான கந்தனைப் பற்றியும், சிற்றூர் சூழலைப் பற்றியும் புதினாசிரியர் குறிப்பிடுகிறார்.

ஐந்து காணி நிலம் மட்டுமே நம்பி வாழ்கின்ற ஏழை விவசாயி கந்தன். அவருக்கு முத்து, மாணிக்கம் என்ற இரண்டு மகனும், பூங்கோதை என்ற ஒரு மகளும் உள்ளனர். மாணிக்கம் நகரத்தில் கல்லூரியில் படிக்கிறான். ராமசாமி பண்ணையார் கந்தனின் நிலத்தை எப்படியாவது பிடுங்கிவிட வேண்டுமென துடிக்கின்றார். ஆனால் இறுதி வரையிலும் அவரால் வெற்றி பெற முடியவில்லை.

முத்து சிறந்த விவசாயியாய் விளங்கி, இறுதியில் ராமசாமி பண்ணையாரின் மகளான மல்லிகாவைத் திருமணம் செய்து கொள்வதும், பூங்கோதை அவ்வூரில் இருக்கும் வருவாய் ஆய்வாளர் (ரெவின்யூ இன்ஸ்பெக்டர்) 'அழகப்பனை' திருமணம் செய்து கொள்வதும் கதையின் உச்சம், எதார்த்தமான, நிகழ்வுகளோடு கதைக்களன் அமைக்கப்பட்டுள்ளது.

## சிற்றூர்க் கட்டமைப்பு

உழவிற்கான முதன்மைக் கருவியாய் விளங்குவது மாடுகள். அதனால் மாடுகளை வணங்கும் பொருட்டாக விழாக்கள் நடைபெறுவதை நாம் காணலாம். இக்கதையில் நகரத்தில் படித்த மாணிக்கம் மாடுகளை வணங்குவதை இழிவானதாக எண்ணுகிறான்.

மாணிக்கத்திற்கு மன எரிச்சல் 'என்ன? மாடுகளை கும்பிடுறதா?.... நான்சென்ஸ்! மகனுடைய பேச்சைக் கேட்டு மனம் வருந்தினான் கந்தன். டேய் அதெல்லாம் மாடுகளில்லைடா! அதுதான் நமக்குச் சோறு போடுற தெய்வங்கள். அந்த மாடுகள் கழுத்திலே ஏர் பூட்டி உழாது போனால் நம்ம வீட்டு அடுப்பிலே பூனை உறங்க வேண்டியது தான்... காளைகளுக்குப்

பொட்டு வச்சுக் கும்பிடுடா என்று எதிரே நின்று கொண்டிருந்த காளைகளைக் காட்டினான் கந்தன். என்ன, மாடுகளுக்கு நான் பொட்டு வைக்கணுமா? பொட்டு வைக்காவிட்டால் இந்த பிணங்களுக்கு அழகு குறைந்திடுமா? மாணிக்கம், 'பிணங்கள்' என்று காளைகளைக் கூறியதும் கந்தன் ஆத்திரங்கொண்டு மாணிக்கத்தை அறைந்துவிட்டான்.

சிற்றூர் முழுமையும் விவசாயத்தைச் சார்ந்தது. ஆகையால், அவ்விவசாயத்திற்குப் பயன்படும் மாடுகளை அவர்கள் இன்று வரை தெய்வங்களாக வணங்குவதைக் காண முடியும். தை இரண்டாம் நாளன்று மாடுகளைக் குளிக்க வைத்துப் பொங்கலிட்டு சிறப்புச் செய்வதை இன்றும் நாட்டுபுறங்களில் காணமுடிகிறது. இது போன்று புதினாசிரியர் பல்வேறு நாட்டுப்புற நடப்புகளையும் உணர்த்துகின்றார்.

## இயற்கையும் மனிதனும்

இயற்கையோடு ஒத்து வாழ்பவனே மனிதன்.

> "நிலத்திற்கு உரியவன் நிலத்தைச் சென்று பார்க்காமல் வாளா இருந்தால் அந்நிலம் அவனுடைய மனைவியை போல வெறுத்து அவனோடு பிணங்கிவிடும் என்றார் திருவள்ளுவர். கந்தனும், முத்துவும் நிலத்தை மனைவி போல் மட்டுமல்ல; தாயைப் போல், தெய்வத்தைப் போல் போற்றி கவனித்துப் பாடுபட்டதால், நிலத்தாய் 'கலகல' என்று கதிர்களின் நெல் கொத்துக்களிலே சிரித்துக் கொண்டிருந்தாள்"[42]

என்று இயற்கையைச் சிறப்புற வருணிக்கிறார்.

## கதையின் முடிவு

முழுவதும் கந்தனின் நிலத்திற்காக பண்ணையார் சண்டையிட இறுதியில் கந்தனின் வயற்காட்டினைப் பண்ணையார் தீயிட்டுக்

கொளுத்துவதும், இறுதியில் பூங்கோதைக்கும், அழகப்பனுக்கும் திருமணம் செய்விக்கத் தீர்மானிப்பது போன்ற நிகழ்வுகள் ஒருபுறமிருக்க, இறுதியாகச் சிரமப்பட்டுப் பாதுகாத்த அந்நிலத்தினில் எஃகுத் தொழிற்சாலை உருவாக்க முற்படுவதும், பொதுமை நோக்கோடு கதை அமைக்கப்பட்டதும் சிறப்பு.

> "அரசாங்கத்தின் இரும்பு எஃகுத் தொழிற்சாலைக்காக நிலத்தைத் தானம் செய்யக் கந்தன் உறுதி செய்த பிறகும் அவன் மனம் குழம்பிக் கொண்டேயிருந்தது.
>
> தன் குடும்பத்தாரையும், பரம்பரையையும் வாழ வைத்த நிலத்தைப் பிரிவது, அவன் மனத்தைப் பிழிந்தது. சாவு மற்றொரு புறம் அவனை நெருங்கிக் கொண்டிருந்தது.
>
> வயலின் உரிமையைக் காப்பதற்காக வயலிலேயே இரத்தம் சிந்தி மாண்ட தந்தையின் நினைவு எழுந்தது. வயல் தனக்கு செய்த உதவிக்கு அவனால் என்ன கைம்மாறு செய்ய முடியும்? தன்னை வளர்த்த தாய் போன்ற வயலின் மடியிலே உயிர்விட வேண்டுமென்று விரும்பியது அவனுள்ளம்"[43]

என்ற வயல் மீதான ஈர்ப்பினை, ஆழத்தை விவசாயிகளின் மண் மீதான பாச உணர்வை 'வயல்' புதினத்தின் மூலம் வெளிப்படுத்துகிறார்.

## கரையைத் தேடும் அலைகள்

ஒரு பெண்ணானவள் தன் வாழ்க்கையில் சுமந்த நிகழ்வுகளின் பதிவுகளே 'கரையைத் தேடும் அலைகள்' எனும் புதினத்தின் கருவாகும். கடலில் தத்தளித்த வாழ்க்கைப் பாதிப்பிலிருந்து விடுபடாமல் 'கரை' என்ற இன்ப வாழ்க்கையை நுகராது பாதிப்புகளைச் சுமந்தே நிற்கும் பெண்ணின் வாழ்வியல் இப்புதினமாகும்.

தாய், தந்தை இறந்ததும் மூத்த மகளான 'லதா' குமாஸ்தா வேலைக்குச் சென்று தனது தங்கைகள் சுமத்ரா, விஜயா, தம்பி மோகன் ஆகியோரைப் படிக்க வைத்து எல்லோருக்கும் திருமணம் செய்து வைக்கிறாள். லதாவிற்கு வயதாகிய பின் பேராசிரியர் ராமநாதனைத் திருமணம் செய்து கொள்கிறாள். சிறிது காலத்திலே ராமநாதன் இறந்து போகிறார். அதனால் மீண்டும் இராமநாதனின் தம்பிகள் மூர்த்தி, சேகர், தங்கை ஜெயந்தி ஆகியோரின் வாழ்க்கைகாக எழுத்தர் வேலைக்கே மீண்டும் செல்லத் தொடங்கி, வாழ்வின் இறுதி வரையும் போராட்டக் களமாகவே வாழ்க்கை அமைந்துவிடுவதாய் கதை அமைந்துள்ளது.

> "அக்கா! எங்க பாட்னி ஃப்ரெஃபஸர் ஊட்டி பொட்டானிகல் கார்டனுக்கு எங்களை டூர் கூட்டிக்கிட்டுப் போறார் அதுக்கு நூறு ரூபாய் பணம் கட்டணும்" என்று சொல்லிக் கொண்டே லதா முன் வந்து நின்றாள் விஜயா.
>
> "அக்கா! அடுத்த வாரக் கடைசியிலே மைக்ரோ எக்கானமிக்ஸிலே ஒரு முக்கியமான டெஸ்ட் அதுக்கு ஒரு புத்தகம் வாங்கணும் முப்பது ரூபாய் வேணும்" என்று கோரிக்கை மனு சமர்பித்தாள் சுபத்ரா.
>
> லதாவின் பக்கத்தில் வந்து நின்று தலையைச் சொறிந்தபடி மோகன்!
>
> அக்கா நேத்து என்னோட டி.ஸ்கொயர் கீழே விழுந்து ஒடைஞ்சு போச்சு. புதுசு ஒண்ணு வாங்கணும்......
>
> மாண்புமிகு அமைச்சரிடம் கோரிக்கை மனுக்களைக் கொடுத்துவிட்டு அவருடைய பதிலுக்காகக் காத்திருக்கும் 'இந்நாட்டு மன்னர்கள்' போல் லதாவின்

> முகத்தை ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள் அவர்கள்"[44]

தம்பி, தங்கைகள், எல்லோரும் சேர்ந்து கொண்டு கேட்டதும், எல்லோரும் கேட்டதைத் தருகிறேன் என்று லதா கூறுகின்றாள். இத்தகு வாழ்க்கை வாழும் அவள் முதிர்கன்னியாகிறாள். எல்லோருக்கும் திருமணம் முடிந்து தமக்கெனத் திருமண ஏற்பாடு செய்ய, திருமண நாள் நிகழ்வில்,

> "திருமண ஆண்டு விழாவுக்கு வழங்கப்பட்ட பூமாலைகள் ராமநாதனின் இறுதி யாத்திரைக்குப் பயன்பட்டன.
>
> அதிர்ச்சியில் கருச்சிதைவு ஏற்பட்டு மருத்துவமனைக்கு எடுத்து செல்லப்பட்ட லதா பத்து நாள் கழித்து வீடு திரும்பினாள்...,
>
> பழைய நினைவுகளால் கீறப்பட்டுப பொங்கி எழுந்த துயரத்தில் நனைந்த கண்களில் நீர் ததும்பிக் கசிய, தன் முன்னால் நின்ற பிள்ளைகளைப் பார்க்கிறாள் லதா, .....
>
> கைநீட்டி, அந்த பிள்ளைகளைப் பக்கத்தில் பிடித்து இழுத்து உட்கார வைத்துக்கொள்கிறாள் லதா"[45]

வாழ்வின் தொடக்கம் முதல் இறுதி வரையிலும் பிறருக்காகவே தனது வாழ்க்கையைச் செலவிடுகிறாள் 'லதா'. பெண்கள் குடும்பத்தை எவ்வாறெல்லாம் தாங்கி நிற்கின்றனர் என்பதை மையமாகக் கொண்டு இக்கதை படைக்கப்பட்டுள்ள குறிப்பிடத்தக்கதாகும்.

## இதோ ஒரு சாவித்திரி

துணையில்லாத பெண் ஆசிரியருக்கு ஏற்படும் இன்னல்களும், அதனைத் தவிர்ப்பதற்குத் தம்மைப் பாதுகாத்தவரையே திருமணம் செய்து கொண்டு வாழும் கதை. இக்கதையின் முக்கியத்துவம் திருமணமாகி குழந்தை பிறந்து, பின் மனைவி இறந்த பிறகு ஆண்மையை இழந்தவரையே சிறந்த கணவனாக ஏற்றுக்கொள்ளுவது சிறந்த படைப்பாகும்.

> "ஒரு பெண்ணோட உடம்பைத் திருப்திப்படுத்தவறன் தான் கணவனா? இல்லை பெண்ணோட மனசிலே கம்பீரமான பௌருஷத்தோட, கண்ணியமான குணாதியசங்களோட இடம் புடிக்கிறவன் தான் புருஷன். நீங்க படிச்சிருப்பேளே, தனக்கு நிச்சயம் பண்ணின கலிப்பகையார், போர்க்களத்தில் செத்த பிறகு, அவரையே தன் புருஷனாய் நெனைச்சு திலகவதி விதவையாய் வாழலியா? சோழ ராஜகுமாரனையோ உதறிவிட்டு மணிமேகலை துறவியாய் வாழலியா? ஏன் நம்ம காலத்திலே சாரதாமணிதேவி, சந்நியாசினியாய் வாழலியா? இவங்க மாதிரி நாட்டிலே எத்தனையோ பேர் வாழ்ந்துண்டிருக்கா, ஏன் உங்களுக்கு ஆண்மைப் போன பிறகும் உங்க மனைவி உங்களோட மனைவியாய் சாகிறவரை வாழலியா?"[46]

என்று ஆண்மையிழந்தவன் என்றும் பாராமல் பிடித்தவரோடு வாழும் தெய்வத்தன்மை கொண்ட சிறந்த ஒழுக்கநெறியுடைய பெண்ணாய் 'சாவித்ரி'யை இக்கதையில் வெளிப்படுத்துகிறார்.

## நெஞ்சில் நெருடும் நினைவுகள்

இன்றைய சமூகத்தில் பாலியல் தவறுகள் ஏகபோகமாய்

நடந்துக்கொண்டிருப்பது கண்கூடாய் காணும் நிகழ்வாகும். இதனை மையப்படுத்தி அமைக்கப்பட்ட கதையே 'நெஞ்சில் நெருடும் நினைவுகள்'.

சுந்தர், ராதா இருவரும் காதலிக்கின்றனர். ராதா களத்ர தோஷம் கொண்டவளாய் இருக்கிறாள். அதனால் சுந்தரம் குடும்பம் திருமணத்தை மறுக்க, சுந்தரே தன் நண்பன் மூலம் பெங்களூரில் உள்ள குமரேசனுக்கு அவனே முன்னின்று திருமணம் செய்து வைக்கிறான். நாளடைவில் சுந்தருக்குக் குமரேசனும், ராதாவும் சேர்ந்து அனுராதா என்பவளைத் திருமணம் செய்து வைக்கிறார்கள்.

ஒரு நாள், குமரேசன் இல்லாதபோது, ராதாவிற்கும், சுந்தருக்கும் தவறான பாலியல் உறவு ஏற்படுகிறது. தவறு செய்த பின்னர் நெஞ்சம் தவிக்க, சுந்தருக்கு என ஒரு அதிர்ச்சிக் காத்திருக்கிறது. சுந்தரத்தின் வீட்டில் நுழைந்த திருடன்,

> "நகை, பணம் மட்டும் போயிருந்தால் அவைகளைத் திரும்பச் சம்பாதிச்சுடலாம். ஆனால் அந்தத் திருடன் – சுந்தரம் அவளைக் கூர்ந்து பார்த்தான். "ராதா! என்ன சொல்றே?"
>
> சட்டென்று படுக்கையில் விழுந்து அழுதாள் அவள், "நான் இழக்கக் கூடாததையும் இழந்திட்டேங்க அந்தப் பாவி என்னையும்,
>
> சுந்தரத்தின் தலைக்கு மேலே ஓர் பயங்கர இடிந்து விழுந்து உறுமியது....
>
> ....
>
> கடவுளே எவ்வளவு சீக்கிரம் எனக்குத் தண்டனை கொடுத்திட்டே!... என்று தன்னை மறந்து! எண்ணத்தை முணுமுணுத்தப்படி தலையில் கை வைத்துக்கொண்டு உட்கார்ந்தான் சுந்தரம்"[47]

சுந்தரம் தவறான ஒழுக்கத்தில் ஈடுபட்ட அதே நேரத்தில், சுந்தரின் மனைவி அனுராதாவை வேறொருவன் கற்பழித்ததாகக் கதையை அமைத்துள்ளார். வினைக்கு எதிர்வினை என்பது போலவும், தவறு செய்தவன் அதற்குரிய தண்டனையைப் பெற்றே தீருவான் என்பதையும் மையமாகக் கொண்டு கதை அமைக்கப்பட்டுள்ளது.

## வாழ்க்கை முடிவு

குமரேசன் மனைவி சுந்தரின் அணுவைக் கருவில் சுமந்து கொண்டிருக்க, சுந்தரின் மனைவியோ வேறு எவனோ ஒருவனின் அணுவைக் கருவில் சுமந்து நிற்கிறாள்,. ‘நெஞ்சில் நெருடும் நினைவுகள்’ அழிவில்லாததாய் நிற்கிறது. அதற்கு முடிவாக ஆசிரியர் அய்க்கண்,

> “சில பேருடைய வாழ்க்கையைப் பார்க்கிறப்போ,
> செத்துகிட்டே வாழறதைவிட, வாழந்திட்டுச்
> செத்துடறது தேவலைனு தோணுது!...”[48]

என்று அய்க்கண் துணைப் பாத்திரங்கள் வழியாகக் கருத்தை உணர்த்திக் கதையை நிறைவு செய்கின்றார். தவறுகளுக்குத் தண்டனை கிடைத்தே தீரும் என்பதே ‘நெஞ்சில் நெருடும் நினைவுகள்’ மூலம் அய்க்கண் உலகிற்கு உணர்த்தும் கருத்தாக அமைகின்றது.

## என் மகன்

எந்த ஒரு மனிதனும் சூழ்நிலையினாலேயே தவறு செய்கின்றான். அவன் தேவைகள் பூர்த்தியாயின், அவன் திருந்தியே வாழ்வான் என்பதை மையமிட்ட கதை, நீதிபதியின் மகன் திருடனாய் இருப்பதும், திருடனின் மகன் நீதிபதியாகவும் இருக்கலாம் என்பதை உலகிற்கு உணர்த்தும் புதினம் ’என் மகன்’ ஆகும்.

இக்கதையின் முதன்மைப் பாத்திரம் செல்வம் ஆவான். வானதி ஏ.திருநாவுக்கரசு ‘என் மகன்’ புதின பதிப்புரையில்,

“நல்லவன் என்ற பெயரெடுக்க நாளாகும். கெட்டவன் என்று நிமிஷத்தில் பெயரெடுத்துவிடலாம். அப்படிப பெயர்பெற்ற ஒருவன் எத்தனை தான் நன்மைகள் செய்து நல்லவனாக முற்பட்டாலும் சுலபத்தில் அது முடிவதில்லை, ஒரு பெரும் அக்னிப் பிரவேசத்திற்குப் பிறகே அது சாத்தியமாகிறது.

மகத்தான சமூகப் பிரச்சினை ஒன்றைபெயடுத்துக் கொண்டு மிக நுட்பமாக ஆராய்ந்து நாவலை நடத்தி செல்கிறார் ஆசிரியர் திரு.அய்க்கண்”[49]

என்று குறிப்பிடுகின்றார்.

## திருடனின் மனநிலை

திருடுவதற்குரிய காரணங்கள் ஏராளமாய் இருக்கின்றன. பசிக்குத் திருடுபவர்களும் உண்டு, வசதி வாய்ப்போடு வாழ வேண்டும் என்பதற்காகத் திருடுபவர்களும் உண்டு. (மிகுந்த வசதி வாய்ப்புகளைப் பெற்று வாழ தவறு செய்பவர்களும் உண்டு,) பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம் அவர்கள் இதனாலேயே ‘திருடனாய் பார்த்துத் திருந்தாவிட்டால் திருட்டை ஒழிக்க முடியாது’ என்பார். இக்கதையின் திருடன், பசிக்காகத் திருடுபவனாய் படைக்கப்பட்டிருக்கிறான்.

“ஸார்! திருடுறது என்கிறது, மனநோய் கூட இல்லே, ஸார்!.... எங்களுக்கு பசிதான் நோய். அந்த பசியைப் போக்கிக்கத்தான் நாங்க திருட வேண்டியாயிடுது..... எல்லாத் திருடனுமே வயித்துப் பசிக்காகத்தான் முதலிலே திருட ஆரம்பிக்கிறான். அப்படி ஆரம்பிக்கும் போதே கூட, ‘இதுதான் கடைசித் தடவை! இனிமே திருடக்கூடாது’னு தீர்மானம் பண்ணிக்கிட்டுத்தான் திருடுறோம். ஆனால் மறுபடியும் அதே நிலைதான். ஒரு தடவை,சந்தர்ப்பவசத்தால் பசிக் கொடுமையாலே

> திருடிட்டா, அதிலிருந்து மீள்வதற்கு வழியே இல்லை...
> திருடன் திருடன்னு அவனுக்குப் பெயர் வச்சு ஒதுக்கித்
> தள்ளிடறாங்க"[50]

என்று திருடன் பேசும் இக்கதையில் மிகச் சிறந்த அறிவுடையோனாகவும் படைக்கப்பட்டிருக்கின்ற சமூக நோக்கு ஆசிரியரைச் சிறந்த சமூகவாதியாய் அடையாளப்படுத்துகின்றது.

இப்புதினம் முழுவதும் செல்வம் 'தியாகு'வால் அனைத்து வகைகளிலும் திருந்துவதும், சமூகம் அவனைத் திருடனாகவே பார்ப்பதும், இறுதியில் சிறந்த நீதிபதியின் மகனாகவே வலம் வருவதும் கதையின் சிறப்பம்சங்களாகும்.

## மண்ணின் மலர்கள்

மண்ணின் மலர்களில் புதுமைப் பெண்ணாகவும், பெண்ணுரிமைப் போராளியாக வலம் வரும் சுகந்தா, செய்யும் தொழில் தெய்வம் என்று நினைக்கும் சேகர் அதுமட்டுமின்றி, மனைவியின் தவறைக் கூட அங்கீகரிக்கும் சிறந்த மனிதர் என இவர்களை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்ட சிறந்த சமூகக் கதைக்களம்.

> "பெண்களை அடுப்பூதும் வேலையில் அடக்கி வைத்து குழந்தை பெறும் இயந்திரமாய் வைத்திருந்த காலம் மலையேறிவிட்டது. இன்று மாபெரும் நாட்டை ஆட்சி செய்யும் செங்கோலே ஒரு பெண்ணிடம் வந்துவிட்டது. 'பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும் பாரினில் பெண்கள் நடத்த வந்தோம்'– என்று பாரதி பாடிய புதுமைப் பெண்கள் 'வெறும் தேன் புஷ்பங்கள் அல்ல; யுகபுஷ்பங்கள். ஆணுக்குப் பெண் இனி இங்கே இளைப்பில்லை என்பதை இன்றைய சமுதாயம் புரிந்துக்கொள்ள வேண்டும்....

என்று முழங்கினாள் அந்த மாணவி"[51]

என்று பெண்ணுரிமை வாதியாய் சுகந்தா – படைக்கப்பட்டிருக்கிறாள்.

சேகர் சுகந்தாவைத் திருமணம் செய்து கொண்டு வாழ சந்திரன் என்பவன் இடையில் புகுந்து சுகந்தாவைத் தவறான பாலியல் ஒழுக்கத்திற்கு உட்படுத்துகின்றான். அதனைச் சேகர் கண்டு விடுகிறான். எனினும் தவறை மறந்து மன்னித்தும் மனைவியை அங்கீகரிக்கும் சிறந்த சீர்த்திருத்தவாதியாய் காணப்படுகிறான் சேகர்.

> "எந்த மனிதனும் நிதானத்தை இழந்து குமுறும் அந்தச் சூழ்நிலையில், சிறிதும் உணர்ச்சி வசப்படாமல் பிரச்சினையை அறிவுப் பூர்வமாகச் சிந்தித்தான் சேகர்.
>
> "ஒரு பிரச்சனையை ஒரு தீர்வினால்தான் தீர்க்க வேண்டுமே ஒழிய, மற்றொரு பிரச்சனையால் தீர்க்க முடியாது.... சுகந்தா! நீ செய்த குற்றத்தை நான் மன்னிக்கத் தயார்.... நீ இந்த வீட்டிலேயே என் மனைவியாக நீடித்திருக்க எனக்குப் பரிபூரண சம்மதம்"[52]

என்று மனைவி செய்த தவறைக் கண்டு, திருந்தி வாழ்வதற்குச் சந்தர்ப்பம் கொடுக்கின்ற சிறந்த பாத்திரம் சேகர். இறுதியில் புரிந்து கொண்டு வாழும் சிறந்த மனைவியாய் குடும்பத்தின் நெருடல்களை வெகு இயல்பாக ஆசிரியர் உணர்த்தியிருக்கும் சிறந்த புதினம் 'மண்ணின் மலர்களே'யாகும்.

## விடை தவறிய கணக்குகள்

மண்ணின் மலர்கள் புதினத்தினுள்ளே காணப்படும் புதினம் 'விடை தவறிய கணக்குகள்'

விடை தவறிய கணக்குகளுக்குரிய தீர்வுகளே கதை நகர்வு. தொழில் தொடங்கி சம்பாதிக்க, இருவரின் பிரிவில் ஒரு குடும்பம் நன்கு

வளர்ச்சி பெற்று வருகிறது. இன்னொரு குடும்பம் வறுமைக்கு உட்படுகிறது. அதற்குப் பிரயச்சித்தமாக வளர்ச்சியடைந்த சுந்தரம், சேகரின் குடும்பத்தில் அனைத்து உறவுகளையும் ஏற்படுத்தும் பாச உணர்வையும், உறவின் ஆழத்தையும் உணர்த்தும் நாவல்.

பம்பாயிலிருந்து கோட்டைக்குடிக்கு வந்த சுந்தரம், சேகரின் தங்கையைக் காதலித்துத் திருமணம் செய்கிறான். அதே நாளில் சுந்தரம் தன் தங்கையைச் சேகருக்குத் திருமணம் செய்து வைக்கிறான். சுந்தரம் சேகரின் தங்கையையும், அவன் குடும்பத்தையும் தன் குடும்பம் போல ஏற்று அனைத்து வசதி வாய்ப்புகளையும் ஏற்படுத்திக் கொடுக்கிறான். ஆனால் சேகரோ, சுந்தரத்தின் தங்கையையோ மிகுந்த கொடுமைக்கு உள்ளாக்குகின்றான். காரணத்தை ஆராய்கையில் சேகரின் குடும்பம் அனைத்துப் பாதிப்புகளுக்கும் உள்ளானது சுந்தரத்தின் தந்தையே என்ற தவறான எண்ணத்தில் சேகர் இருக்கிறான்.

> “நீ சொன்ன மாதிரி, எங்க அப்பா, உன் அப்பா வரைந்திருந்த டிராயிங்க்ஸ் எல்லாம் எடுத்துக்கொண்டு வந்தது உண்மைதான். ஆனால் அதனாலேதான் என் அப்பா பணக்காரரானார் என்பதும், உன் அப்பா ஏழையானார் என்பதும் முழு உண்மை இல்லை.... புரிகிறதா? என்றாலும், தன் குடிகார நண்பனைத் தனியே விட்டுட்டு வந்திட்டோம் என்ற மன – உறுத்தலினால் தான், என் அப்பா சாகும்போது என்னிடம் நடந்ததையெல்லாம் சொல்லி, தன் நண்பனின் குடும்பத்துக்கு உதவியளிக்கச் சொன்னார்.... ஒரு வேலை, தான் செய்தது பாவமாயிருந்தால் அந்தப் பாவத்துக்கான தண்டனை, தன் பிள்ளைகளுக்கு வந்துவிடக்கூடாதுன்னு நினைச்சு, பரிகாரமாக உங்க குடும்பத்துக்கு உதவி செய்ய சொன்னார்”[53]

என்று நட்பின் ஆழத்தை உணர்த்தும் சிறந்த புதினமாக ‘விடை தவறிய

கணக்குகள்' அமைகின்றது.

## ஜல்லிக்கட்டில் பசுமாடுகள்

ஜல்லிகட்டு என்பது காளைகளுக்கு உரியது. குறியீட்டுத் தலைப்பாய் ஜல்லிக்கட்டு எனும் சமூகத்தில் பசுமாடுகளாய் 'பெண்கள்' மாட்டிக் கொண்டு நிற்கும் சமூக இன்னல்களை அய்க்கண் உணர்த்துகிறார், பெண்களுக்குச் சமூகத்தில் ஏற்படும் பிரச்சினைகளையும், அதற்குரிய தீர்வுகளையும் அய்க்கண் படைத்துள்ளார்.

## மகளிர் சிந்தனை

இன்று 'கற்பு' என்ற அடிப்படையில் பெண்கள் பல இன்னல்களுக்கு உள்ளாகுகின்றார்கள். சமூகத்தில் பெண்களைப் பற்றிய பார்வை,

> "கந்தர்வனோட நிழலைப் பார்த்து சலனமடைந்ததாலே, ரேணுகாவோட கற்பு களங்கப்பட்டுச்சாம், எப்படியிருக்கு கதை?.... இந்த கற்பின் ஸ்கேலை வச்சு, இந்தக் காலத்துப் பெண்களின் கற்பை அளந்தால், எத்தனை பெண்கள் கற்புள்ளவங்கனு தேறுவாங்க?' என்று சிரித்துக் கொண்டே கேட்டார் – சிவப்பிரகாசம்"
>
> .... இன்னிக்கு காலேஜ்களிலே, ஆபிஸ்களிலே, தொழிற்சாலைகளிலே, ஒவ்வொரு பொண்ணும் எத்தனையோ ஆண்களைப் பார்த்து, நினைத்து பேசி ஒருத்தனைக் காதலிச்சுப்பழகக் கூட செய்கிறாங்க... அதனாலே காதல் நிறைவேறாத பெண்களையெல்லாம் கற்பு இழந்தவங்கனு சொல்லிட முடியுமா?'' என்று சற்றே கோபமாகக் கேட்டார் அவர்"[54]

என்று கதை முழுவதும் பெண்கள் பற்றிய சமூகச் சூழல்கள், பெண்களின் இன்றைய போக்கு என்பதை மையமிட்டதாகவே படைக்கப்பட்டிருக்கின்ற சிறந்த 'பெண்ணியப் புதினம்.

'சீதா' சிறந்த பெண்ணியவாதியாகக் காணப்படுகிறாள். மேலும் ஆண் பிள்ளைகயைவிட பெண் பிள்ளையின் வளர்ச்சியே முக்கியத்துவம் வாய்ந்ததாகும் என்பதை,

> "சீதாவும் நாம் பெற்ற பிள்ளைதான்னு நினைச்சு அவளையும் செலவழிச்சி, நல்லா படிக்க வச்சிருக்கனும். சட்டப்படி அவளுக்கும் சொத்திலே பங்கு இருக்கிறப்போ அவளுக்கும் பையன்களுக்குச் செலவழிச்ச மாதிரி செலவழிச்சிருக்கனும்"[55]

என்ற கருத்தையும் ஆணித்தரமாக அய்க்கண் பதிவு செய்திருக்கின்றார். ஆண் பிள்ளைகள் ஏமாற்றித் தன் குடும்பம் பிள்ளை என்று சென்றுவிட, தந்தை இறந்ததும் பெண்ணே மந்திரம் சொல்லி கொல்லி வைத்துச் சடங்கு செய்யும் சிறந்த பெண்ணியப் படைப்பு 'ஜல்லிகட்டில் பசுமாடுகள்' புதினமாகும்.

## தீர்க்க சுமங்கலி

சமூகத்தில் மூட நம்பிக்கைகள் நிறைந்து கிடக்கின்றன. அத்தகைய மூட நம்பிக்கைகளை எதிர்க்கும் பிரச்சாரமாக, தமது எழுத்தாயுதத்தால் ஜாதகப் பார்வையை அய்க்கண் திறம்பட விளக்குகிறார்.

ஏழைக் குடும்பத்தில் பிறந்த லலிதாவிற்குக் களத்ர தோஷம் என்று மக்கள் எல்லோரும் அவளை துர்பாக்கியவதி என்று திட்டித் தீர்க்கின்றனர். இறுதியாக அவள் திருமணம் செய்து கொண்டு தன் பிள்ளைகளை மிகப்பெரிய ஆளாக மாற்றியும், தீர்க்க சுமங்கலியாகவே காலம் முழுவதும் வாழும் சிறந்த கதை,

> "இல்லேம்மா....! அந்த பணத்தை நான் வாங்கிக்க மாட்டேன். நீயே வச்சுக்கோ."
>
> "ஐயா நான் துக்கிரிதான். ஆனா பிச்சைக்காரி இல்லே!"
>
> லலிதாவின் வார்த்தைகளைக் கேட்டதும் துணுக் என்று திடுக்கிட்டுப் போன தேசிகர், பத்து ரூபாயைக் கைநீட்டி வாங்கிக்கொண்டு 'நான் வர்றேம்மா!' என்று புறப்பட்டார்."[56]

இது போன்று பல்வேறு பாதிப்புகளுக்கு உள்ளாக்கப்பட்ட லலிதா சுந்தரம் என்பவரைத் திருமணம் செய்து கொண்டு தீர்க்க சுமங்கலியாகக் கதையில் பரிணமிக்கிறாள்.

> "ஜாதகத்திலே களத்தர தோஷம் என்று ஏற்பட்ட துரதிர்ஷ்டத்தையும் பொறுத்துக்கொண்டு, காதலாலே ஏற்பட்ட எதிர்ப்புகளையும், சோதனைகளையும் எதிர்த்து நின்று, வறுமை, கஷ்டம் எல்லாவற்றையும் சமாளித்து உழைத்துப் பாடுபட்டு குழந்தைகளை வளர்த்துப் படிக்க வைத்து உருவாக்கி – ஓ! லலிதா! நீ எத்தனைப் போராட்டக் களங்களில் நின்று ஜெயித்திருக்கிறாய் அம்மா!...."[57]

என்று இறுதி வரையில் அனைத்துத் துன்பங்களையும் கடந்து வெற்றி பெறுகின்ற சிறந்த படைப்பாக 'தீர்க்க சுமங்கலி'யில் 'லதா' வலம் வருகிறாள்.

## வெள்ளைத் தாமரை

பரத்தைத் தொழிலில் ஈடுபட்ட குடும்பத்தில் பிறந்த பெண், சராசரிப் பெண்ணாய் ஒழுக்க நெறியோடு வாழ முற்படும் போது ஏற்படும் இடர்ப்பாடுகளை 'வெள்ளைத் தாமரை' புதினம் உணர்த்துகின்றது. அது

மட்டுமின்றி அப்பெண் திருமணம் செய்து கொண்டு வாழ்கின்றாள். கணவன் இறந்துவிட, 'விதவை' கோலம் பூணுவதை மறுத்த சிறந்த சீர்த்திருத்தவாதியாய்க் காணப்படுகிறாள்.

> "கல்யாணி! நீ விதவையாக மறுத்திட்டதனாலே, நீ பழைய குடும்பத் தொழிலுக்கே போகப்போறேன்னு ஊரிலே எல்லோரும் பேசிக்கிறாங்க... ஆனா எனக்குத் தெரியும் – ஊரிலே எந்தக் குடும்பத்துப் பெண்ணையும் விட, நீ தாழ்ந்தவ இல்லே.... நீ தவறிக்கூடப் பழைய சாக்கடையிலே விழமாட்டேனு எனக்கு நம்பிக்கையிருக்கு' என்ற அம்பலக்காரரின் பேச்சு, அவளிதயத்திற்குள் ஆழமாக சென்று தைத்தது"[58]

கல்யாணியை அம்பலக்காரர் மதிக்கின்ற சூழலால் கதையில் முக்கியத்துவம் அமைகின்றது.

மைனர் வேடப்பன் எப்படியோ அவளை (கல்யாணி) அடைய முயற்சி செய்கிறான். அவன் முன்னிலையில் ஒருவனைத் திருமணம் செய்துவித்து முதலிரவில் வேடப்பன் உட்கார்ந்திருக்கின்றான். பாலியலில் ஈனத்தனமாக புத்தி கொண்டவனின் எண்ணங்களைத் தகர்த்தெறிந்து சிறந்த வாழக்கை வாழும் பெண்ணியக் கதையாய் வெள்ளைத் தாமரை படைக்கப்பட்டிருப்பது சிறப்புடையது.

## ஒரு பெண் மனைவியாகிறாள்

காதலித்துத் திருமணம் செய்து கொண்டு வரதட்சணைக் கொடுமையால் காதல் கணவனை விட்டொழிந்து உண்மையான ஆண் மகனைத் திருமணம் செய்துகொள்ளும் சிறந்த சீர்த்திருத்தப் புதினம் 'ஒரு பெண் மனைவியாகிறாள்' என்பது ஆண்மையில்லாமல் போனாலும் சிறந்த மனிதநேயமிக்க தகுதியுடைய ஆண்மகன் என்பது இக்கதையின் அடிப்படைக் கருவாகும்.

> "தாயின் பேச்சைக் கேட்டு கேவலம் பணத்துக்காகத் தாலி கட்டிய மனைவியை விரட்டியடித்த அந்தக் கோழைக்காக, ஒரு ஜென்டில்மேனை இம்பொட்டன்ட் என்று பகிரங்கமாகக் கூறிக் கேவலப்படுத்த நான் விரும்பலே சார்! அப்படியே நான் உங்களைப்பற்றி சொல்லியிருந்தாலும், அவர் இன்பொட்டன்ட்னு உனக்கு எப்படித் தெரிஞ்சிச்சி, எப்போ தெரிஞ்சிச்சினு கேட்டிருப்பான் அந்த பேடி?"[59]

என்று தன் கணவனை மறுத்து ஆண்மையிழந்தாலும் சிறந்த ஆண்மகனை அங்கீகரிக்கும் சமூகப் புதினமாய் அமைந்துள்ளது.

## நிழலில் நிற்கும் நிஜங்கள்

'நிழலில் நிற்கும் நிஜங்கள்' எனும் குறியீட்டுத் தலைப்புக் கொண்ட இப்புதினமானது, சினிமாத் துறையில் பெண்களுக்குரிய மதிப்பீடு என்ன? கலைத் துறையில் அவர்களின் வாழ்வியல் எப்படியெல்லாம் சீரழிக்கப்படுகிறது என்பதை மையமாகக் கொண்டு படைக்கப்பட்டுள்ளது.

குறிப்பாகப் பரத்தைத் தொழிலை மறுத்த ரஞ்சனாவை, தன் தாயே பாலியல் தவறுக்கு உட்படுத்தும் சூழலை ஆசிரியர் பதிவு செய்கின்றார். அது மட்டுமின்றி இயக்குநர்கள், திரைப்படத்துறையில் தயாரிப்பாளர் சிலரின் நோக்கங்களையும் சுட்டிக் காட்டுகின்றார்.

> "அது சரி.. நேத்து ராத்திரி எங்க ப்ரொட்யூசர் என்கிட்டே..." என்று தயங்கிக் கொண்டு ஆழமாக அவளுடைய அழகிய கண்களைப் பார்த்தான்
>
> "ஆமா... என்னை நடிகையாக்குகிறேன்னு ஆசைக்காட்டி, என்னைக் கெடுக்கப்பார்த்தான் அவன்"[60]

என்று நடிகையாக்குகிறேன் என்று கூறி பாலியலுக்கு உட்படுத்தும் தவறான நிலைகளையும் சுட்டிக் காட்டுகிறார்.

மேலும், காதலன் இறந்துவிட, காதலனுக்காக நடிகையாகி கற்பை இழந்து காதலன் குடும்பத்தை வாழ வைக்கும் சிறந்த 'காதல்' கலந்த புதினம், 'நிழலில் நிற்கும் நிஜங்கள்' ஆகும்.

## பெண் என்பது உடம்பு அல்ல

திருமணம் செய்து வாழும் தம்பதியர்கள் ஆணாதிக்கத்தின்னால் பெண்மைத்தன்மையைச் சந்தேகப்படும் ஆண்களுக்குப், பெண்களின் உண்மைத் தன்மையை உணர்த்தும் பெண்ணியப் புதினம் இது.

> "இந்தக் காலத்தில் காலேஜ்களிலே இளைஞர்களும், இளம் பெண்களும் கலந்து படிக்கிறாங்க, பல பொருளாதார அவசியங்களாலே பெண்களும் ஆபிஸ்களில் ஆண்களோடு சேர்ந்து வேலை பார்க்க வேண்டியிருக்கு. இன்னிக்குப் பல பொது இடங்களிலும் ஆண்களும், பெண்களும் பேசிப்பழகி ஒன்றாக நடமாட வேண்டியிருக்கு... பல பேர் காதலில் தோல்வியடைந்து இன்னொருத்தரை மணந்து வாழ்கிறாங்க. இவர்களெல்லாம் கற்பிழந்தவங்கன்னு சொல்லிட முடியுமா?"[61]

என்று சந்தேகப்படும் ஆணாதிக்கத்திற்கு முற்றுப்புள்ளி வைக்கும் புதினமாக 'பெண் என்பது உடம்பு அல்ல' புதினத்தை ஆசிரியர் படைத்திருப்பது சிறப்பு.

## நெஞ்சில் ஓர் நெருஞ்சி

ஓர் ஏழைக்கும், பணக்காரப் பெண்ணுக்கும் காதல் உறவால் ஏற்படும் நிகழ்வுகள் கதையின் மையமாகும்.

முத்து தமது ஏழ்மை நிலையால் மூன்று சக்கர வாகனம்(ரிக்ஷா) ஓட்டியும், செய்தித்தாள் போட்டும் பிழைப்பு நடத்துகிறான். லதா பணக்காரப் பெண், ஒரே கல்லூரியில் படிக்கின்றபொழுது இருவருக்குமான உறவு மேலோங்கி பாலியல் உறவு வரை செல்கிறது. லதாவின் தந்தையிடம் நன்கு பழகுவதால் முத்து பணக்காரனாய் ஆன பிறகு திருமணம் செய்து கொள்கிறேன் என்கிறான்.

இதற்கிடையில் லதாவின் தந்தை மகாலிங்கம் மாரடைப்பால் அமெரிக்காவிற்கு அழைத்து செல்கின்றனர். அங்கு ராஜா என்பவன் மனைவியை இழந்து குழந்தைகளோடு வசிக்கிறான். மகாலிங்கம் இறக்கும் பொழுது ராஜாவின் தந்தை, மகாலிங்கத்திற்குச் செய்த உதவியால் ராஜாவிற்கும் லதாவிற்கும் திருமணம் செய்து வைக்கின்றனர்.

தாம்பத்ய உறவைக் கண்டாலே லதா பயப்படுகிறாள். அதனால் மனநல மருத்துவரான தன் நண்பரிடம் ஆலோசனைப்பெற ராஜா செல்கிறான். ஆலோசனையில் மருத்துவர்,

> "ஒன்று லதா யாரையோ காதலித்து உடலுறவுக்குப்பின் அவனால் கைவிடப்பட்டவளாயிருக்கலாம் அல்லது அவள் விரும்பிக் காதலித்து, உடலுறவு கொள்ளும் அளவு பழகி பின்பு, அவரைக் கல்யாணம் செய்து கொள்ள முடியாத சூழ்நிலை ஏற்பட்டிருக்கலாம்"[62]

என்று கூறுகின்றனர். பிறகு முத்துவைக் காதலித்ததைக் கண்டுபிடித்து அவனுக்கே லதாவைத் திருமணம் செய்து வைக்க ராஜா, மோகன் இருவரும் திட்டமிடுகின்றனர். திடீரென ராஜா விபத்தில் இறந்து விடுகிறான். ராஜாவின் குழந்தைகளைச் சுமந்து கொண்டு விதவைக் கோலம் பூண்டு, 'நெஞ்சில் ஓர் நெருஞ்சியாய்' தன் வாழ்க்கையை லதா நகர்த்துவதாகக் கதை அமைக்கப்பட்டிருப்பது சிறப்புடையது.

## மறுபக்கம்

ஏழை பணக்காரனாக மாறுவதும், பணக்காரன் ஏழையாக ஆவதும் விதியாகும் என்பதை மையமிட்டு நண்பர்கள் இருவருக்குள்ள முரண்பாடுகள், தனிமனித உழைப்பு, அதனால் கிடைக்கும் செல்வம் போன்ற பல நிகழ்வை 'மறுபக்கம்' உணர்த்துகிறது.

## மறுபக்கத்தில் காதலின் ஆழம்

தந்தையே காதலை ஆமோதிப்பதை,

> "உன்னை ஒரு சாதாரண இளைஞனாக நினைத்தேன். ஆனால் நீயோ பணத்தை துச்சமாகத் தூக்கி எறியும் லட்சிய இளைஞன் என்று இப்போது புரிந்து கொண்டுவிட்டேன். சேது...! இப்படிப்பட்ட ஒரு நல்ல இளைஞனை என் மகள் காதலித்தற்காக நான் பெருமைப்படுகிறேன்"[63]

என்று காதலின் ஆழம் உணர்ந்து, பெண்ணின் தந்தையே ஆதரிக்கும் நிலையையும் வெளிப்படுத்துகிறார்.

நட்பின் ஆழத்தை தெளிவுற கதையில் உணர்த்துகிறார். ஒன்றாகப் படித்த சேது, மணிமாறன் இருவரின் நகர்வே 'மறுபக்கம்' மணிமாறன் பணக்காரனாய் இருந்ததால் பல்வேறு வகையான இடர்ப்பாடுகளை, அழிவுகளை உருவாக்கியும், மன்னிக்கும் மாண்பு கொண்ட சிறந்த பாத்திரமாய் 'சேது' வலம் வருகிறான்.

## அவனுக்காக மழை பெய்கிறது

சிறந்த மனிதனை அடையாளப்படுத்தும் கதை, அவனைப் போன்றோர்களால்தான் மழையே பெய்கிறது என்பதைச் சிறந்த கருத்தியலோடு அய்க்கண் சுட்டியுள்ளார். கதையின் நாயகனாக அனாதைத் தம்பியாய் வலம் வரும் 'அவன்' அம்பலக்காரரின் மகனென

தெரிந்த பின்னரும், அம்பலக்காரரின் குடும்ப நல்வாழ்வுக்காக மீண்டும் அனாதையாய்ப் போகும் சிறந்த 'மாமனிதனின்' கதையே இந்நாவல்,

> "இத்தனை நாளும், ஊருக்கெல்லாம் வேலைக்காரனாக அலைந்து தெருவில் கிடந்த உனக்கு, அம்பலக்காரரின் மகன் என்கிற உரிமை வாழ்வும் செதியான வீடும் கிடைத்தது. ஆனால் நீ, உடன்பிறக்காத உன் தங்கைகளுக்காக அந்த சுகத்தையெல்லாம் தியாகம் செய்துவிட்டு, மறுபடி தெருவுக்கு வந்து விட்டாயே, உன் பண்பை எப்படிப் போற்றுவதென்றே எனக்குத் தெரியவில்லையப்பா"[64]

என்று பிறர் பண்பைப் போற்றும், பிறரின் பழியை, பாவங்களைச் சுமந்து நிற்கும் வெகுளியாக உலகின் உண்மையான மனிதன் இக்கதையின் கதாநாயகன் ஆவான். அவனைச் சுற்றியே கதை முழுவதும் அமைகிறது. பிறருக்காகவே வாழ்வில் அனைத்துத் துன்பங்களையும் தாங்கிக் கொள்ளும் சிறந்த பாத்திரம்.

## விடிவெள்ளி

தன் கணவன் இறந்த பிறகும், அவன் குடும்பத்தைக் காக்க மறுமணம் செய்து கொண்டு வாழும் சிறந்த பாத்திரமான 'மீனாட்சியை' சுற்றி பின்னப்பட்ட புதினம் இது.

> "அப்பா! ஒண்ணு – உங்க சாதி வழக்கப்படி, நான் இன்னொருத்தரைக் கட்டிகிட்டு வாழணும்; இன்னொன்னு – இந்த கொழுந்தனுக்கு மனைவியாய் வர்றவ, என் மாதிரி இந்தக் குழந்தைகளுக்குத் தாயாக இருக்கணும் – இதுதானே? இந்த இரண்டும் நடக்கிற மாதிரி இந்தக் கொழுந்தனுக்கு மனைவியாகிட்டா?"[65]

என்று சமூகத்தின் வழக்கப்படி நின்றும், தன் கணவனின் குடும்ப நலத்தை

முன்னிறுத்தியும் நிற்கும் விடிவெள்ளி மீனாட்சி. அப்பெண்ணைச் சுற்றி நிகழும் சிறந்த சீர்திருத்தப் புதினம்,

## இரண்டாவது ஆகஸ்ட் 15

சிற்றூரை நன்கு வளர்ச்சி பெற வைத்து, சமூகத்தின் நலன்களுக்காகவே தம்மை அர்ப்பணித்து சட்டமன்ற உறுப்பினராகி, சமூகத்தை வளப்படுத்தும் அரசு ஊழியனின் கதையே – இரண்டாவது ஆக்ஸ்ட 15. இக்கதை ‘இலக்கிய பீடம்’ நடத்திய புதினம் போட்டியில் 2002ஆம் ஆண்டுக்கான பரிசு பெற்ற புதினம்.

> “ஒரு நேர்மையான ஏழைச்சமுதாயத்தொண்டர், தேர்தலில் போட்டியிட்டு எம்.எல்.ஏ. ஆவதாகக் காட்டியிருக்கிறேன்.
>
> இதை நீங்கள் நம்ப மாட்டீர்கள். ஆனாலும், நம் குடியரசுத் தலைவர் ‘அப்துல் கலாம்’ அவர்களின் ‘2020ஆம் ஆண்டு இந்தியக் கனவு’ போல என் கனவையும் நீங்கள் ஏற்றுக்கொள்வீர்கள் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது”[66]

என்று பதிப்புரையில் தம் கனவைச் சமூகத்திற்காகவே தந்திருக்கிறார் அய்க்கண்.

சமூக வளர்ச்சியின் தடையை எண்ணி,

> “இந்தியா, ‘ஜனநாயகத்துக்கான தகுதி பெற நூறாண்டுகளுக்கு மேல் ஆகும்’ என்று வின்ஸ்டன் சர்ச்சில் அன்று சொன்னது தீர்க்க தரிசனமாகிவிடுமோ என்று நினைத்து குமைந்து போனார் அழகப்பன்”[67]

மக்களின் நிலையைக் கண்டு சிற்றூர் மக்கள் எல்லோரையும் ஒன்று திரட்டி சமூக வளர்ச்சியை உருவாக்கும் சிறந்த சீர்திருத்தவாதியாகவும் அழகப்பனை ஆசிரியர் வெளிக்காட்டுகின்றார்.

> "அரசாங்கத் திட்டங்களின் பயன்கள் எல்லாம் ஏன் இந்தக் கிராமத்துக்கு வந்து சேலை என்கிறதைத் தெரிஞ்சுக்கிறதுக்காக, நேற்று பி.டி.ஓ. அலுவலகத்துக்குப்போய் விசாரித்தேன். அங்கே அதிகாரிகள், ஃபைல்களைக் காட்டினாங்க. நம்ம கிராமத்திலே நிறையக் கிணறுகள், ஆடுமாடுகள், கோழிப் பண்ணைகள், சிறுதொழில்கள், எல்லாம் இருப்பதாக ஃபைல்களில் காட்டினாங்க. ஆனா உண்மையிலேயே இங்கே எதுவுமே இல்லை. இந்த வேடிக்கையான – வேதனையான நிலைமைக்கு யார் காரணம்? நெல்லுக்கு வந்திருக்க வேண்டிய தண்ணீர் வயலுக்கு வராமல் போனதுக்கு யார் காரணம்? என்று உணர்ச்சி கொப்பளிக்க, முகமெல்லாம் சிவந்து துடிக்க, அழகப்பன் கேட்டதும், ஊர்மக்கள் திகைத்தவர்களாய் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டார்கள்"[68]

என்று சிற்றூர் வளர்ச்சிக்குரிய அனைத்துப் புத்தாக்கங்களையும், புதிய சிந்தனையை உருவாக்கி செப்பனிடும் சிறந்த சமூக அரசியல்வாதியாக ஆசிரியர் படைத்திருக்கிறார். இக்கதைக் களமானது அய்க்கணின் மாறுபட்ட 'அரசியல் தளப் புதினமாய்' பரிணமிக்கிறது.

## தொகுப்புரை

ஆசிரியர் பிறப்பு, வளர்ப்பு, இளமைப் பருவம், கல்லூரிப் படிப்பு, பணியாற்றிய நிறுவனங்கள் போன்ற செய்திகள் கூறப்பட்டுள்ளன.

ஆசிரியரைப் பற்றி பிற படைப்பாளர்கள், பதிப்பகத்தார், ஆன்மீக வாதிகள், அரசியல் வாதிகள், அறிஞர்களின் மதிப்பீடுகள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

ஆசிரியரின் மன உணர்வு, புதினம் எழுதுவதற்கான சூழல்கள், காரணங்கள் பற்றிச் சுட்டப்பட்டுள்ளன.

ஆசிரியர் பெற்ற விருதுகளும், பரிசுகளும், அவருடைய படைப்புகளும் இடம்பெற்றுள்ளன.

ஆசிரியர் சில புதினங்களில் அறிமுக உரையும், நன்றியுரை கூறியுள்ளது பற்றியும் கூறப்பட்டுள்ளன.

## சான்றெண் விளக்கம்

1. கண்ணகி துரைசாமி, வை.மு.கோதைநாயகி அம்மாள் புதினங்களில் பெண்கள், ப.10

2. மு.அய்க்கண், நேர்காணல், நாள் 18.10.2011

3. பி.சுப்பையா அம்பலம், முப்பெரும் விழா சிறப்புமலர், ப.22.

4. மு.அய்க்கண், நேர்காணல், நாள் 18.10.2011

5. மேலது

6. மு.அய்க்கண், விடிவெள்ளி, பதிப்புரை

7. மு.அய்க்கண், கரையைத் தேடும் அலைகள், பதிப்புரை

8. மு.அய்க்கண், ஜல்லிகட்டில் பசுமாடுகள், பதிப்புரை

9. மு.அய்க்கண், மறுபக்கம், பாராட்டுரை

10. மெ.மீனாட்சிசுந்தரம், முப்பெரும்விழா சிறப்புமலர், ப.20

11. குன்றக்குடி பொன்னம்பல அடிகளார், முப்பெரும் விழா சிறப்புமலர், ப.1

12. பி.சுப்பையா அம்பலம், முப்பெரும் விழா சிறப்புமலர், ப.23

13. பழ.படிக்காசு, முப்பெரும் விழா சிறப்புமலர், ப.26

14. சக்தி அ.திருநாவுக்கரசு, முப்பெரும்விழா சிறப்பு மலர், ப.27.

15. முத்துபழனியப்பன், முப்பெரும்விழா சிறப்புமலர், ப.28

16. நவயுக நா.மெய்யப்பன், முப்பெரும்விழா சிறப்புமலர், ப.30

17. சுப.துரைராஜ், முப்பெரும்விழா சிறப்பு மலர், ப.33.

18. மு.அய்க்கண். உயிர், அணிந்துரை.

19. மேலது

20. அய்க்கண் இம்மைமாறி மறுமை ஆயினும்..... பக்.29, 30

21. மு.அய்க்கண், நேர்காணல், நாள் 18.10.2011

22. மு.அய்க்கண், உயிர், அறிமுகவுரை

23. மு.அய்க்கண், நேர்காணல், நாள் 18.10.2011

24. மேலது

25. மேலது

26. மேலது

27. மேலது

28. மு.அய்க்கண், விடிவெள்ளி, ப.32.

29. மு.அய்க்கண், மாபெரும் நாடு மாபெரும் மக்கள், ப.32.

30. மு.அய்க்கண், அவனுக்காக மழை பெய்கிறது, ப.45.

31. மு.அய்க்கண், இரண்டாவது ஆகஸ்டு 15, ப.18

32. மேலது, ப.7.

33. அய்க்கண், உயிர், ப.5.

34. அய்க்கண், உயிர், ப.11.

35. அய்க்கண், உயிர், ப.16.

36. அய்க்கண், உயிர், ப.88.

37. அய்க்கண், உயிர், ப.89.

38. அய்க்கண், உயிர், பக்.117–118.

39. அய்க்கண், உயிர், பக்.166–167.

40. அய்க்கண், வயல், ப.4.

41. அய்க்கண், வயல், ப.134.

42. அய்க்கண், வயல், ப.196.

43. அய்க்கண், வயல், ப.244.

44. அய்க்கண், கரையை தேடும் அலைகள், ப.2.

45. அய்க்கண், கரையை தேடும் அலைகள், ப.39.

46. அய்க்கண், கரையை தேடும் அலைகள், ப.75.

47. அய்க்கண், கரையை தேடும் அலைகள், பக்.206–207.

48. அய்க்கண், கரையை தேடும் அலைகள், ப.236.

49. அய்க்கண், என் மகன், ப.4.

50. அய்க்கண், என் மகன், ப.31.

51. அய்க்கண், மண்ணின் மலர்கள், ப.17.

52. அய்க்கண், மண்ணின் மலர்கள், பக். 55–56.

53. அய்க்கண், மண்ணின் மலர்கள், ப.200.

54. அய்க்கண், ஜல்லிகட்டில் பசுமாடுகள், ப.87.

55. அய்க்கண், ஜல்லிக்கட்டில் பசுமாடுகள், பக்.112–113.

56. அய்க்கண், தீர்க்க சுமங்கலி, பக் 54–55.

57. அய்க்கண், தீர்க்க சுமங்கலி, ப.248.

58. அய்க்கண், வெள்ளைத்தாமரை, ப.88.

59. அய்க்கண், வெள்ளைத்தாமரை, ப.233.

60. அய்க்கண், நிழலில் நிற்கும் நிஜங்கள், ப.70.

61. அய்க்கண், நிழலில் நிற்கும் நிஜங்கள், பக். 185–186.

62. அய்க்கண், நெஞ்சில் ஓர் நெருஞ்சி, ப.242.

63. அய்க்கண், மறுபக்கம், ப.144.

64. அய்க்கண், அவனுக்காக மழை பெய்கிறது, பக். 211–212.

65. அய்க்கண், விடிவெள்ளி, ப.119.

66. அய்க்கண், இரண்டாவது ஆகஸ்ட 15, பதிப்புரை.

67. அய்க்கண், இரண்டாவது ஆகஸ்ட 15, ப.75.

68. அய்க்கண், இரண்டாவது ஆகஸ்ட 15, ப.89.

இயல் – 2

# புதினங்கள் காட்டும் சமுதாயச் சிந்தனை

## முன்னுரை

ஓர் இலக்கியம் அது தோன்றும் காலத்தையும், அக்காலச் சமுதாயத்தையும் ளிப்படுத்தும் பிரதி என்பர். சமுதாயத்திலிருந்து தோன்றி அச்சமுதாயம் நன்முறையில் இயங்க வழிகாட்டுவதும் இலக்கியம் ஆகும். இலக்கியம் வெறும் கற்பனை என்று ஒதுக்கிவிட முடியாத அளவிற்குச் சமூக வரலாற்றுச் சான்றாக அமைகின்றது. அவ்வகையில் எழுத்தாளரும் பேராசிரியருமான அய்க்கண் அவர்கள் தம்காலத்துச் சமுதாயத்தைப் புதினங்கள் வழிப் பதிவு செய்திருப்பதைக் கண்டறிவது இவ்வியலின் நோக்கமாகும்.

வேட்டைக்காலச் சமூக மனிதர்கள் தங்களை இயற்கையிருந்தும் விலங்குகளிடமிருந்தும் பாதுகாத்துக்கொள்ள கூட்டமாகவாழ்க்கையை நடத்தினர். வேட்டையாடிப் பிழைக்கவும் இயற்கையில் விளைந்த உணவுகளைச் சேகரிக்கவும் தனிமனிதனுக்குப் பிறர் உதவி தேவைப்பட்டது. ஒருவருக்கொருவர் உதவி செய்ய, உயிர் காக்க, வேண்டிய கட்டாயத்தால் சமூகம் உருவானது. குறிப்பிட்ட நிலப்பகுதியில் நீண்டகாலமாக ஒன்று சேர்ந்து வாழ்வதற்காக மக்கள் கூட்டம் ஏற்படுத்திக் கொள்ளும் அமைப்பைச் சமூகம் என்பர். சமுதாயத்திற்கு

"கூட்டு வாழ்வுக்குழு, மன்னாயம், நட்புக்குழு சேர்க்கை,
தோழமை, தொகுதி, குடிமைப் பண்புடையோர் குழு"[1]

என்று ஆங்கில தமிழகராதி விளக்கம் தருகிறது.

"சமூகம் மனித வர்க்கத்தினரால் உருவானது"[2]

என்பர் சமூகவியல் அறிஞர்.

தமிழ்ச் சொல்லகராதி, சமூகம் என்ற சொல்லுக்கு

"மக்கள் திரள்"[3]

என்று பொருள் தருகிறது.

பெரிய லிப்கோ அகராதி “சமுதாயம் பொதுநல நிறுவனம், சங்கம், சமூகம், சமூகத்தில் வசதி மிக்கவர்கள்”[4] என்கிற விளக்கத்தைக் கூறுகின்றது.

சு. சக்திவேல் “சமூதாயம் என்பது மனித இனத்தின் சமூகப் பொருளாதார அரசியல் ஈடுபாடுகளின் தொடர்புகளினால் இயைந்து வரும் ஓர் அமைப்பாகும். இவ்வமைப்பு ஒரு குறிப்பிட்ட நாகரிக அமைப்பிற்குள் இயங்கி வருகின்றது”[5] என்கிறார்.

சமூகம் என்ற சொல்லுக்கு மக்கள் குழு, இனக்குழு, கூடி வாழ்வோர், பொதுநலஞ்சார்ந்தோர், அன்பு காட்டும் உள்ளம் என்றெல்லாம் அகராதிகள் விளக்கம் தருகின்றன. மொழி கலாச்சாரம், பண்பாடு கொண்டு குறிப்பிட்ட பகுதியல் வாழும் மக்கள் கூட்டம் சமுதாயம் என்பதை அறியலாம்.

“ஒவ்வொரு மனிதனும் ஏனைய மனிதனுடன் கொண்டிருக்கும் சமூக உறவுமுறைத் தொடர்புகளைத்தான் சமூகம் என்கிறோம். சமூகவியல் அல்லது சமூகம் என்பது புலனாகா உளச்சார்புடையக் கருத்தியல் பொருள் ஆகும்”[6] என்கிறார் மு.வ.

சி.சு.மறைமலை “சமுதாயம் என்பது பல்வேறு சமூக நிறுவனங்களின் ஒருங்கிணைப்போடு விளங்கும் சமூகக் கூட்டமைப்பு”[7] என்பர்.

இவ்வாறு சமூகம் என்ற சொல்லுக்கு பல்வேறு அறிஞர்கள் பல்வேறு கருத்துக்களைக் கூறியுள்ளனர்.

## சமுதாயத்தின் தோற்றமும் வளர்ச்சியும்

திருமணம் என்னும் சடங்கின் மூலம் இணையும் குடும்பத்தலைவன், குடும்பத்தலைவியால் ஏற்படும் குடும்ப அமைப்பு ஏற்பட்டது முதல் சமுதாயம் உண்டாயிற்று.

"சங்க காலத்திலும், சங்க முற்காலத்திலும் இனக்குழு
வாழ்க்கை தமிழகத்தில் நிலவி வந்தது"[8]

என்று கா.சுப்பிரமணியன் குறிப்பிடுகிறார்.

மனிதர்கள் தேவையின் காரணமாகத்தான் தங்களுக்குள் ஒரு சமூக அமைப்பை ஏற்படுத்திக் கொண்டு கூடி வாழ்கிறார்கள் என்று பிளேட்டோ, புனித தாமசு, அக்கினாசு ஆகியோர் கூறுகின்ற கருத்தைக் கா.சுப்பிரமணியன் தனது நூலில், "இயற்கையிலேயே இருக்கின்ற இந்தச் சமூகவியல்பு காரணமாக அவன் பிறரோடு கூடிப் பழகுகிறான் அவ்வாறு பழக முற்படும் போது சமூகம் தோன்றிவிடுகிறது"[9] என்று குறிப்பிடுகிறார்.

ஒரு சமூகத்தில் சமூகவியல்பைத் தூண்டி விடுதல் என்பது தேவையாக உள்ளது. அந்தத் தேவையும் சமூகவியல்பும் இணையும் போது சமூகம் தோன்றிவிடுகிறது. இவ்வாறு தோன்றிய பின்னர் சமூகம் மெல்ல வளரத்தொடங்கி அதற்குரிய பண்பாட்டு வளர்ச்சிக்கேற்ற வண்ணம் சமூகம் வளர்ந்து இன்றைய நாகரிக நிலையை அடைந்துள்ளது.

## இலக்கியமும் சமுதாயமும்

இலக்கியம் அது தோன்றும் காலத்தின், சமூகத்தின் பிரதி என்பர். சமுதாயத்தின் நிகழ்வுகளைக் கண்டு தாக்கமுற்ற படைப்பாளன் தாக்கத்தின் விளைவால் படைப்புகளை ஆக்குகின்றான். எனவே சமுதாயத்திலிருந்தே இலக்கியம் தோன்றுகிறது. குறிப்பிட்ட காலகட்டத்தில் சமுதாயம் எவ்வாறிருந்தது என்பதை அறிவதற்கு அக்கால இலக்கியப் படைப்பாளர்கள் படைத்த இலக்கியங்கள் பயன்படுகின்றன.

"மனித வாழ்க்கைக் களத்தில் வாழ்க்கையுடன் போராடி வாழ்ந்து காட்டுபவனே பாத்திர சிருஷ்டிப்புக்கு முழுமுதல் மூலவனும், முதல்வனுமாவான்"[10] என்னும் ஜீவாவின் கருத்து இங்கு நோக்கத்தக்கது.

அகிலன், "எழுத்தாளனுடைய சொந்த வாழ்க்கைக்கும் அவனதுஎழுத்துக்கும் உள்ள உறவு நெருக்கமானது. அவனது சொந்த வாழ்க்கை அனுபவம் அவன் எழுத்துக்களின் மூலத்தைத் தருகின்றது. அதன் வளர்ச்சிக்கு ஊன்று கோலாகவும் பயன்படுகிறது"[11] என்கிறார்.

"ஒரு சமுதாயம் வாழ்ந்த வாழ்வினைக் காணவும் மேற்கொண்ட லட்சியத்தை அடையவும், பழகி வந்த பண்பாட்டையும், நாகரிகத்தையும் தெரியவும் அவர்களுடைய நெடுங்காலமாக வளர்ந்துள்ள கலைகளும் பெரிதும் துணை"[12] எனக் க.த.திருநாவுக்கரசு குறிப்பிடுகின்றார்.

இத்தகைய சமுதாயத்தினைப் பற்றி அறிவதற்கு இலக்கியத்தின் ஒரு பகுதியான புதினங்களும் பெரும் துணை செய்கின்றன.

## புதினமும் சமுதாயமும்

காப்பியத்தின் மறுவடிவமான புதினம் சமுதாயத்தோடு நெருங்கிய தொடர்புடையது. புதினம் தம் காலச் சமுதாயத்தை அல்லது கடந்த காலச் சமுதாயத்தை வெளிப்படுத்துகிறது. இது வாழ்க்கையுடன் நெருங்கிய தொடர்பு பெற்றிருப்பதால் சமூக எல்லைக்குள் அடையக் கூடியதாய் அறிவுப்பூர்வமானதாய் வாழ்க்கையை அமைதியாக விளக்கும் படைப்பிலக்கியமாய் அமைகிறது.

"கால எல்லையை அடிப்படையாகக் கொண்ட வாழ்க்கைச் சித்திரமாகத் திகழ்வதே நாவலின் குறிப்பிடத்தக்க பண்பு ஆகும்"[13] என்கிறார் இ.எம்.பாஸ்டர்.

"மனித வாழ்க்கையின் மதிப்புகளை வெளியிடக்கூடிய மிகத் தொன்மையான எண்ணங்கள் இலக்கியத்தில் வளர்ந்திருப்பது நாவலின் பங்கு ஆகும். படைப்பாளியின் உள்ளக் கருத்தை முழுச் சுதந்திரத்தோடு வெளியிடுவதற்கு ஏற்ற சாதனமாய் நாவல்கள் அமைகின்றன"[14] என்கிறார் இரா.தண்டாயுதம்.

## திருமணம்

திருமணம் என்பது மானுடவாழ்வில் இன்றியமையாத ஒன்றாக அமைந்துள்ளது. ஓர் ஆணும், பெண்ணும் இணைந்து வாழும் வாழ்வே திருமண வாழ்வு என்பதாகும்.

“மானுட உறவு முறைகளில் ஆழ்ந்த மிகவும் சிக்கலான ஒரு பந்தமே திருமணமாகும். இது சமுதாயத்தின் ஒரு சந்தி முறையாகவும் சமுதாய அமைப்பின் மிக முக்கியமானதொரு பகுதியாகவும் விளங்குகிறது”[15] என்று புரோமில்லா கபூர் கூறியுள்ளார்.

“மக்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒரு சடங்கின் மூலம் ஆணும், பெண்ணும் புதிய குடும்பத்தை உருவாக்கிக் கொள்ள நிறுவப்பட்ட ஒரு வினையே மணம் ஆகும். எனவே அதுவும் ஒரு நிறுவனம் ஆகும். மனத்திற்குப் பிறகு கணவன் மனைவி உறவு நிலை பெற்றதாகிறது”[16] என்பர் சமூவியலார்.

ஒட்டு மொத்த மக்களின் கூட்டமைப்பு வாழ்க்கை முறையைச் சமுதாயம் என்று அழைப்பர்.

> “அனைத்துச் சமூக உறவுகளையும் தன்னகத்தே கொண்ட ஒரு பின்னல் என்னும் பொருளில் கையாளப்படுகின்றது”[17]

என்றும்,

> “மனிதன் தேவையின் காரணமாகத் தான் தங்களுக்குள் ஒரு சமூக அமைப்பை ஏற்படுத்திக் கொண்டு கூடி வாழ்கிறார்கள். இக்கருத்தையே பிளேட்டோ (Plato) என்ற அறிஞரும் வலியுறுத்துகின்றார்.”[18]

இத்தகைய சமூக அமைப்பு தமக்கென வாழ்வியல் கூறுகள், இலக்கியம், கல்வி, பண்பாடு, பழக்கவழக்கம் எனப் பல்வேறு

நிகழ்வுகளை உருவாக்கிக் கொள்கின்றன. இவற்றில் இலக்கியங்கள் தனிச்சிறப்பிடம் பெறுகின்றன.

தமிழகத்தில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட இலக்கியங்கள் தோன்றி தமிழ்ச் சமூக வளர்ச்சியை உறுதி செய்தன. அகம், புறம் என இரு கூறுகளாய் சமூகச் செயல்பாடுகளைப் பிரித்தறிந்து வாழ்க்கையை மேம்பட்டு அமைப்பதற்குரிய வழிகளைச் செய்தது.

பழையன கழிதலும், புதியன புகுதலும் விதியாகும். ஆகையால் புதிய புதிய இலக்கியங்கள் தோன்றலாயின. அற இலக்கியங்கள், காப்பியங்கள், சிற்றலக்கியங்கள் தொடங்கி இன்று நவீன உலகில் நாடகம், புதினம், சிறுகதை, புதுக்கவிதை, ஹைக்கூ எனப் பல்வேறு வகைகளில் இலக்கியங்கள் தோன்றியுள்ளன. இவ்வகை இலக்கியங்களில் புதினங்கள் தனி முத்திரையைப் பெற்றன. இருபதாம் நூற்றாண்டின் இறுதியில் பல்வேறு புதினாசிரியர்கள் உருவாகி புதிய நோக்கில் புதினத்தைச் சமூகத்திற்குத் தந்தனர்.

## புதினம் – சொற்பொருள் விளக்கம்

Novellus என்ற இலத்தீன் சொல்லே Novel என்னும் ஆங்கிலச் சொல்லாகி, புதுமை, நவீனம் என்னும் தமிழ்ச்சொல்லாகியது.

> "நாவல் என்ற சொல் முதன் முதலில் இத்தாலியில் எழுந்தது. இதற்கு 'புதுமை' என்பது பொருள். 'டெகாமெரான்' என்ற நாவலை இத்தாலிய மொழியில் எழுதிய 'பொக்காசியோ' (1313–1375) என்பவரே நாவலின் தந்தையாக நினைக்கப்பெறுகிறார்"[19]

பிற்காலத்தில் புதினம் என்பது இயற்கையாக நடக்கும் வாழ்க்கையை உள்ளவாறு சித்திரிப்பது என்னும் பொருளிலேயே வழங்குகின்றது. சமூகத்தை நன்கு உணர்ந்து சமூகத்திற்காகப் படைக்கப்படும் நீண்ட உரைவடிவமாய், குறுங்காப்பியமாய் இப்புதினங்கள் அமைகின்றன.

## தமிழ் இலக்கியங்களில் புதினம்

அகம், புறம் என இருவேறுபட்ட தளத்தில் நின்று மக்களுக்குரிய, மக்கள் வாழ்வதற்குரிய கருத்துக்களை இயம்பியவை சங்க இலக்கியங்கள். மக்களின் உள்ளத்தை, எண்ணத்தைப் பண்படுத்தியவை அற நூல்கள், கதைகளின் ஊடாக மக்களுக்கு நற்கருத்தை வழங்கியவை காப்பியங்கள்.

காப்பியங்களின் தகுதியிலிருந்து சூழலுக்கு ஏற்ப மாறுதலடைந்து பாமர மக்களிடத்தும் உணர்த்தும் சிறு காப்பியங்களாக புதினங்கள் இடம்பெறுகின்றன.

> "ஒருவனது முழு வாழ்வையும் வெளியிட நாவலை விடச்சிறந்த துறை இல்லை. மனிதனின் அக உணர்வுகளை நுட்பமாகவும் துல்லியமாகவும் வெளிப்படுத்தும் வளமை நாவலுக்கே உண்டு"[20]

என்ற கூற்று இக்கருத்தை நிறைவு செய்கின்றது.

அ.ச.ஞானசம்பந்தன் அவர்கள்,

> "புதினத்தில் பிண்டம் என்பதே அதன் உட்பொருளாகும். இப்பிண்டம் என்பது எத்தகைய கதை மேற்கொள்ளப்பெறுகிறதோ அதற்கேற்றபடி தோன்றுவதாகும். வாழ்க்கையில் காணப்பெறும் ஆழமான உணர்ச்சிகள், போராட்டங்கள், இவைகளை அடிப்படையாகக் கொண்டு தோன்றும் புதினங்களே மிகச் சிறப்புடையன. தமிழ் மொழியளவில் தோன்றியனவும் தோன்றுகின்றனவும் ஆகிய புதினங்கள் பெரும்பாலும் இக்குறைபாடு உடையன. சென்ற பத்து ஆண்டுகளில் நூற்றுக்கணக்கான புதினங்கள் தமிழ்மொழியில் தோன்றி உள்ளன.

ஆனால் மிகச் சிலவே நம் நினைவில் அழியாத இடம் பெற்றுள்ளன."[21]

என்று புதினம் பற்றிக் குறிப்பிடுகின்றார்.

வாழ்க்கையின் அனுபவங்களையும் நிகழ்வுகளையும் படம் பிடித்துக் காட்டும் காலக் கண்ணாடியாக புதினங்கள் இடம் பெறுகின்றன. குறிப்பாக வாழ்க்கை அனுபவத்தைப் பகிர்ந்து கொள்ளும் படைப்புக் கலையாகவும், மக்களால் மக்களுக்காக உணர்த்தும் இலக்கியக் கலையாகவும் இலக்கியங்கள் காணப்படுகின்றன. அவற்றில் புதினங்கள் மக்களோடு முழுமையும் தொடர்புபடுத்திக் கொண்டவாகும்.

## புதினமும் வாழ்வும்

சமூகத்தோடு பிணைந்தவையே புதினங்கள் ஆகும். அவை தற்கால அல்லது கடந்த காலச் சமுதாயத்தை வெளிப்படுத்தும் கருவூலமாய் காணப்படுகின்றது. வாழ்க்கையில் நெருக்கமாகவும், இலக்கணங்களுக்கு உட்பட்டும் புதினங்கள் அமைகின்றன.

> "நாவல்கள் பலவும் நடப்பியல் கூறுகளையே முதன்மையாகக் கொண்டு படைக்கப்பட்டுள்ளன. அவை இன்றைய சமுதாயத்தின் வளர்ச்சியினையும், வீழ்ச்சியினையும் வெளிப்படுத்துகின்றன"[22]

எனவே வாழ்க்கைக்கு அப்பாற்பட்டதல்ல இலக்கியம். இரண்டறக் கலந்தவையே ஆகும்.

> "புதினம் சிறக்கும் பல பண்புகளில் சிறந்த மற்றொரு அது வாழ்க்கையை உள்ளவாறு கூறுவதாய் அமைதல் வேண்டும்".

> "புதினம் கட்டுக்கதைத் தானே என்ற எண்ணத்தால் இன்றைய எழுத்தாளர்கள் எதனையும் நுழைக்கத்தக்க இடமாக அதனைக் கருதுகின்றனர்"[23]

என்று கூறுவதன் மூலம் புதினமானது வாழ்க்கைத் தரத்தை மேம்படுத்த முயலுதல் வேண்டும். அவை மக்களிடத்தில் உயர்ந்த சிறப்பிடத்தைப் பெறும்.

இன்று பல்வேறு புதினங்கள் நடப்பியலை மிக அதிகமாகவும், ஆழமாகவும் வெளிப்படுத்துகின்றன. அத்தகைய புதின ஆசிரியர்களில் தலை சிறந்தவராய் 'அய்க்கண்' காணப்படுகின்றார். கதை ஓட்டம், கதையை உணர்த்தும் விதம், கருத்தோட்டத்தோடு சிறப்புப்படத் தெளிவு, செறிவு, கருத்து என்ற முற்போக்கோடு மக்களுக்குரிய வாழ்வியல் நெறிமுறைகளை ஆசிரியர் 'அய்க்கண்' உணர்த்தியுள்ளார்.

> "மனித மனம் கதையிலும், வரலாற்றிலும் ஆர்வம் காட்டுவது உணர்ச்சிகளுக்கு ஒரு வடிவம் தர வேண்டும் என்று விரும்புவது ஒருவர் வாழ்வே நாவல் எனலாம். எனவே தான் மேலைநாட்டு ஆசிரியர் ஒருவர் சாதாரண மனிதர்கூடத் தத்தம் வாழ்வினையே வடித்தெழுதினாற்கூட ஒரு நாவலாகிவிடும் எனக் கூறிப்போந்தார்"[24]

என்று புதினத்தின் சிறப்பானது வாழ்வின் அம்சமே என்று சி.பாலசுப்பிரமணியன் குறிப்பிடுவதன் மூலம் அறிய முடிகிறது.

> "பிற இலக்கிய வகைகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கையில் மிகவும் தன்னுரிமைப் பெற்ற வடிவமாக இயங்குவது நாவலாகும். உலகம் தழுவிய பொதுமைப் பண்பினை மிக விரைவாக நாவல் பெற்றுள்ளது. இப்பண்பிலும் மற்ற இலக்கியங்களைவிட நாவல் முன்னணியில் உள்ளது. எல்லா இடங்களுக்கும்

பரவவல்லதாய், அனைவர்க்கும் களிப்பூட்டுவதாய் நாவல் அமைகிறது. மக்கள் வாழும் காலம் முடிய நாவல்களும் வாழும்”[25]

என்ற கருத்தின் மூலம் மக்களோடு தொடர்புடைய, முழுமைபெற்ற இலக்கியமாய் என்றென்றும் மக்களின் வாழ்க்கையோடு நிலைத்து நிற்கும்.

## புதினத்தின் பயன்பாடு

அனைத்து வகை இலக்கியங்களும் சமூகத்திற்கு ஏதேனும் ஒரு வகையில் பயன்பட்டே வருகின்றன. புதினமும் அத்தகைய தகுதியை உடையதே. குறிப்பாகக் காப்பியங்கள் செய்த வேலையை இன்று புதினங்கள் செய்கின்றன. இதனை,

“காவியம் என்பது எவ்வாறு சிறப்புடன் ஒரு காலத்தில் விளங்கி படைக்கப்பட்டு அக்காலக் கட்டத்தைப் படம் பிடித்துக் காட்ட உதவியதோ அதே போல இன்று நாவல் பயன்பட்டு பயன்படுத்தப்பட்டு வருகிறது.”[26]

குறிப்பாக வாழ்க்கை நெறிமுறைகளையும், சூழல்களையும் உணர்த்தும் இவை பல்வேறு வகையில் பயன்படுகின்றன.

‘‘புதினங்கள் பல மனிதர்களின் வாழ்க்கையில் இருந்து பெறப்படும் சில பொதுப்பண்புகளையும், தனிப்பண்புகளையும் அவற்றிற்கான சமூகச் சூழலையும் கருப்பொருளாகக் கொள்கின்றன. நடப்பியலை மையமிட்டனவாக சமுகப் புதினங்கள் அமைகின்றன. அவை தனிமனித சார்பு, சமூகச் சார்பு என்ற இரண்டு வகையில் எழுதப்படுகின்றன.”[27]

அவை தனிமனித ஒழுக்கத்திற்கு வித்திட்டும், சமூகத்திற்கு நற்கருத்துக்களை வழங்கியும், சமூகப் பயன்பாட்டிற்குத் துணை புரிகின்றன.

## அய்க்கண்ணின் புதினங்கள் உணர்த்தும் சமூகம்

இன்றைய சமூகத்தில் காணப்பெறும் அகமன, புறமனக் கருத்துக்களையும், உளவியல் ரீதியான சிக்கல்களைத் தெளிவுற உணர்த்துகின்றார். காதல், கற்பியல் வாழ்வுகளும், அதில் ஏற்படுகின்ற முரண்கள், சிக்கல்கள், தீர்வுகளை ஒருபுறம் குறிப்பிடுகின்றார். புற நிகழ்வில் தனிமனிதர்களின் நன்மதிப்புகள், தீமைகள், குடும்ப வாழ்வியலில் நிகழும் நிகழ்வுகள், இடம்பெறுகின்றன. சமூகம் அங்கீகரிக்கின்ற, மறுக்கின்ற நிகழ்வுகள் என பல்வேறு சமூகக் கருத்துக்களை மிகத் தெளிவாகவும், நுட்பமாகவும தமது புதினங்களில் உணர்த்தியுள்ளார்.

## அகமும் புறமும்

பண்டையத் தமிழ்ச் சமூக இலக்கியங்கள் வாழ்வியலை அகம், புறம் என இரண்டாகப் பகுத்து, காதலும், வீரமுமே இரு கண்களாகப் போற்றியிருந்ததையும் இலக்கியங்களின் வழியாக அறிய முடிகிறது.

இத்தகு நோக்கில் ‘அய்க்கணின் புதினங்கள்’

1. அகமன நிலைகள்
2. புற நிலைச் சூழல்கள்

என இருவேறாக வகைப்படுத்தலாம்.

### 1. அகமன நிலைகள்

#### காதல்

பண்டைத் தமிழ் இலக்கியங்களில் பெரும்பாலான பாடல்கள் அகக் கூறு சார்ந்தவையே. இதன் மூலம் காதலுக்குரிய முக்கியத்துவத்தை

அறியலாம்.

"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரளவின்றே சாரல்
கருங்கோல் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே"[28]

என்ற காதல் நிலைகளை உணர்த்தும் இலக்கியங்களும்,

யாயும் ஞாயும் யாரா கியரோ
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளீர்
யானும் நீயும் எவ்வழி யறிதும்
செம்புலப் பெயனீர் போல
அன்புடை நெஞ்சம் தாம்கலந் தனவே"[29]

என்று காதலின் ஆழத்தை உணர்த்திய பாடல்களும் ஏராளம். விஞ்ஞான அடிப்படையில் அனைத்து உயிரினத்திற்கும் ஏற்படுகின்ற காதல் உணர்வுகள் ஹார்மோன் வயப்பட்ட செயல்பாடு என்ற பொழுதிலும், அவை முழுவதும் உணர்வு வயப்பட்டது. இயற்கையின் இன்ப ஒழுக்கத்தின் அடித்தளமாகவும் காதல் அமைகின்றது.

"காதல் அடைதல் உயிரியற்கை"[30]

என்று பாரதிதாசன் குறிப்பிடுவதால் அறியலாம்.

"காதல் காதல் காதல்
காதல் போயிற் காதல் போயிற்
சாதல் சாதல் சாதல்"[31]

என்று பாரதியார் காதலின் ஆழத்தை உணர்த்துவது போல,

"காதல் இல்லையேல் சாதல், காதல் நிறைவேறாவிட்டால், சாவதில் தான், அது ஜீவனுடையதாகிறது..."[32]

என்று காதல் பற்றி அய்க்கண் வெளிப்படுத்துகின்றார். காதல் பற்றிப் பல்வேறு அறிஞர்களும், கலை இலக்கியவாதிகளும் பல்வேறு கருத்துக்களைத் தந்திருக்கிறனர்.

'உயிர் புதினத்தில்'

> "காதல் என்பது ஓர் அபூர்வமான சக்தி
> ஆண்களின் மனத்தையும் பெண்களின்
> மனத்தையும் அது எப்படி எப்படி
> ஆட்டுவிக்கும் என்று யாராலும் கூறவோ,
> யூகிக்கவோ முடியாது"[33]

என்றும்,

> "காதல், இந்த மாதிரி ஏழை – பணக்காரர், உயர்ந்த
> ஜாதி – தாழ்ந்த ஜாதி, இந்த மதம் – அந்த மதம் என்கிற
> வித்யாசமே பார்க்கிறதில்லே... லவ் ஸ் கிரேட்"[18]

என்றும், காதலைப்பற்றி பல்வேறு நடைமுறைக் கருத்துக்களை அய்க்கண் புதினங்களின் வழியாக உணர்த்துகின்றார்.

**காதல் மறுப்பு**

இயற்கை அளவிடற்கரிய இன்ப நுகர்வுகளை அனைத்து உயிரினத்திற்கும் தந்திருக்கின்றது. அவற்றினில் மனித சமூகம் மட்டும் பல்வேறு இடர்ப்பாடுகளையும், சிக்கல்களையும் தந்து காதலை அழிப்பதற்குரிய அனைத்து விதிகளையும் கற்றுத் தேர்ந்திருக்கின்றது. இதனை ஆசிரியர் விளக்குகின்றார்.

சமூகத்தில் ஜாதகச் சிக்கல்களால் காதலும் உடைபடுகிறது என்பதனை, உணர்த்த புதினத்தில் அதற்கு முக்கியத்துவம் தந்து நகர்த்தியுள்ளார்.

> "ஏண்டா உலகத்திலே நீ காதலிக்கிறதுக்கு
> வேறொருத்தியும் கிடைக்கலியா? இந்த களத்ர

தோஷம் பிடிச்சவள் தான் கிடைச்சாளா?”[35]

என்று ஜாதகத்தினால் காதல் மறுப்பு ஏற்படுகின்ற சூழலையும்,

வெள்ளைத் தாமரை புதினத்தில்,

> “காதலில் ஈடுபட்டிருக்கிற ஒரு பெண்; இன்னொரு பெண் காதலித்தால், அதைத் தப்புன்னு கண்டிப்பாள். காதல் கல்யாணம் செஞ்சிக்கிட்ட தாய் தன் பிள்ளைகள் காதல் கல்யாணம் செஞ்சிக்க சம்மதிக்க மாட்டாள்”[36]

என்று காதல் மறுப்பின் சூத்திரத்தையும், சிக்கல்களையும் உணர்ந்து காதல் மறுப்புச் சூழலை விவரிக்கின்றார்.

**காதல் தியாகம்**

காதல் ஒரு புறமும், குடும்பம் மறுபுறமுமாய் சிக்கித் தவிக்கின்ற காதலர்களின் இடர்ப்பாடுகளை நமக்கு ’அய்க்கண்’ தந்து, குடும்ப நிலைகளைப் பார்க்கின்ற காதல் தியாகிகளையும் வெளிப்படுத்துகின்றார்.

‘கரையைத் தேடும் அலைகள்’ புதினத்தில், காதல் தியாகம் செய்தவரைப் பாராட்டும் வகையில்,

> “உலகத்திலே காதலைத் தியாகம் செய்து காதலியை மறந்து விடுகிறவர்களைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் உங்களைப் போல், காதலியின் கல்யாணத்தை முன்னின்று நடத்திக் கொடுக்கும் தியாகி ஒருவரை நான் கேள்விப்பட்டதேயில்லை....
>
> நாம் கணவன் – மனைவியாய் வாழறதுக்கு நான் புண்ணியம் பண்ணலே: என்றாலும் நம்ம உறவு

விட்டுப்போற அளவுக்கு நான் பாவம் செய்யலே... என்னுடைய வாழ்விலே, என் உள்ளத்திலே உனக்கு எப்போதும் ஓர் இடம் – அழிக்க முடியாத இடம் உண்டு"[37]

என்று காதலிக்காக காதலைத் தியாகம் செய்கின்ற சூழலைத் தெளிவுறப் புதினங்களில் குறிப்பிடுகின்றார்.

காதலால் காதலன் இறந்து விட அவனின் குடும்பத்தை முழுமையாகக் கவனிக்கத் தன்னையும், தன் கற்பையும் தியாகம் செய்கின்ற படைப்பாய் நிழலில் நிற்கும் நிஜங்களில் ரஞ்சனாவின் பாத்திரம் அமைகின்றது.

ரஞ்சனாவின் உடல் மீது ஆசை கொண்டவனின் மகன், காதலனின் தங்கையைக் காதலிக்கிறான். அவர்களின் திருமணத்திற்காக,

"சுந்தரத்துக்குக் காணிக்கையாக ஆசைப்பட்ட அந்த உடல் அவனுடைய தங்கைக்காக பலியாகிவிட்டது. அடுத்த மாதம் ஒரு சுப முகூர்த்தத்தில் சாந்தாவுக்கும், மீனாவுக்கும் கோலாகலமாக திருமணங்கள் நடந்தன."[38]

என்று தமது புதினத்தில் காதல் தியாகத்தை எல்லையில்லாமல் அய்க்கண் வெளிப்படுத்துகின்றார்.

**காதல் முரண்கள்**

பண்டையக்கால காதல் நிலைமையினையும், இன்றையச் சூழலில் காதல் மாறுபடுவதை,

"வகுப்பிலே தமிழாசிரியர் சொல்லுவார், சங்க காலத்திலே எல்லோரும் காதலிச்சு தான் கல்யாணம் பண்ணிக்குவாங்க.... இப்பவும் அப்படித்தான், ஆனா ஒரு

வித்தியாசம், அந்தக் காலத்திலே காதலிச்சவங்களையே கல்யாணம் பண்ணிக்குவாங்க, இப்போ, ஒவ்வொருத்தரும் காதலிக்கிறது ஒருத்தியை, கல்யாணம் பண்ணிக்கிறது வேறொருத்தியை”[39]

என்று பண்டைய காலக் காதல் நிகழ்வை ஒப்பிட்டும் ஆசிரியர் உணர்த்தத் தவறவில்லை.

## சாதியமும், காதலும்

“ஜாதிகள் இல்லையடி பாப்பா
குலம் தாழ்த்தி உயர்த்தி சொல்லல் பாவம்”[40]

என்றார் பாரதி. எனினும் சமூகம் சாதிப் பாகுபாட்டை வலுவாகத் தூக்கி நிறுத்தியிருக்கின்றது என்பதில் யாதொரு ஐயமுமில்லை, காதலில் கலந்த சாதியம் பல்வேறு வகையில் பல உயிர்களையும் அழித்திருக்கின்றது.

நிழலில் நிற்கும் நிஜங்களில், வேறுபட்ட சாதியைச் சார்ந்த இருவர் காதலிக்க, அக்காதலைச் சமூகத்தினர் எதிர்க்க, அவர்கள் இறந்து விடுகிறார்கள். அதனை,

“வடக்குத் தெருகோடியில் உள்ள அய்யனார் கோயில் தென்னந்தோப்புக்குள்ளே, ஒரு காதல் ஜோடி அரளி விதையைத் தின்று தற்கொலை செய்து கொண்டு விட்டார்கள்.”[41]

என்று சாதியத்தால் இறந்துபடுகிற அவலநிலையினை ஆசிரியர் பதிவு செய்துள்ளார்.

சாதிய முரண்கள் கொண்ட சிற்றூர்ச் சூழலை மையமிட்ட நிகழ்வுகளை,

‘இரண்டாவது ஆகஸ்ட் 15’ புதினத்தில்,

“என்னடா கார்த்திக்! ஜாதி விட்டு ஜாதி கல்யாணம் செய்துகிட்டா நம்ம குடும்பத்தின் கௌரவம் என்ன

ஆகிறது? என்று குமுறினாள் தாய்.

அம்மா! ஜாதி எல்லாம் இப்போ மலையேறி போயிடுச்சு, நீங்க பழைய காலத்திலேயே இருக்கீங்க. இப்போ காலம் மாறிடுச்சு'' என்று முழுங்கினான் கார்த்திக்.

காலம் மாறியிருக்கலாம்டா! ஆனா மனுஷங்க இன்னும் மாறலை, அது அப்படியே தான் இருக்கும் என்றாள்... ஏன்டா, யாரோ ஒரு வேற சாதிக்காரி நம்ம வீட்டுக்கு மருமகளாய் வந்தா, எங்களாலே வெளியே தலைகாட்ட முடியுமா? ஊரிலே சனங்க காரித்துப்புவாங்க.... டேய் கார்த்திக்! வேண்டாம்... நம்ம சாதிப் பொண்ணு, ரொம்ப நல்லப் பொண்ணு படிச்சப் பொண்ணாய் பார்த்து கட்டி வைக்கிறோம்....."[42]

என்று சமூகச் சூழல் ஒரு புறம் நிற்க, காதல் சாதியத்தால் சிக்குண்டு போவதையும், 'காதல்' அதனை எதிர்த்து நிற்பதைச் சமூக நடைமுறையிலும் நாம் காண்கின்றோம். இத்தகைய 'சாதியக்காதல்' சிக்கலுடையதாக இருப்பதை 'அய்க்கண்' புதினங்களின் வழி உணர்த்துகின்றார்.

## வர்க்கக் காதலும், சமூக முரணும்

மனித சமூகத்தில் தொடக்கக் காலத்திலேயே ஏழை, பணக்காரர் என்ற இருவகைப் போக்கு நிலவி வந்துள்ளது. மனிதர்களின் இருவகையான வேறுபாடு தோன்ற பல்வேறு எதிர்மறையான போக்குகளும் நிகழ்ந்துள்ளன.

'காதலுக்குக் கண்ணில்லை' என்பார்கள், காதலுக்குச் சாதி, மதம், ஏழை, பணக்காரன் என்ற வேறுபாடுகள் தெரிவதில்லை. இத்தகைய

ஏழை, பணக்காரர் இருவரிடத்தும் நிகழ்கின்ற காதலையும், அதனால் ஏற்படும் முரண்பாடுகளையும், சீர்த்திருத்தப் போக்கினையும் ஆசிரியர் பாத்திரங்களின் வழி வெளிப்படுத்துகின்றார்.

மறுபக்கம் புதினத்தின் கதைக்கரு ஏழை, பணக்காரர் பெண் இருவரிடத்து நிகழ்கின்ற காதல், அதைத் தடுக்கும் பணக்காரப் பெற்றோர், மறுக்கும் மகள், இறுதியில் மகளே வெற்றி பெறும் நிலை என ஒருபுறம் காதலின் ஆழத்தை உணர்த்துகின்றார் ஆசிரியர்.

> "நான் எவ்வளவோ யோசிச்சுப் பார்த்துட்டேன். ஒரு கூலித் தொழிலாளியை என் மாப்பிள்ளைன்னு சொல்றதுக்கு எனக்கு வெட்கமாயிருக்கு...."
>
> அப்படியானால், அந்த கூலித் தொழிலாளியின் மனைவியை, 'என் மகள்'னு சொல்றதுக்கும் நீங்கள் வெட்கப்படனுமே..."[43]

என்று தொழிலாளியைக் காதலித்த பெண் தந்தையின் சொல்லை மறுத்து நிற்கின்ற செயலினை வெளிப்படுத்துகின்றார்.

மேலும்,

> "ஏழ்மையையும் செல்வமும் மனசிலே தான் இருக்கு, பணத்திலே இல்லே..."[44]

என்று வர்க்க நிலைகள் தவறானது என்று சுட்டுவதையும் தன் காதலனைப் பற்றியும், ஏழையின் பண்பைப் பற்றி,

> "பணத்திலே, ஆடம்பரத்திலே செல்வாக்கிலே அவர் நம்மை விட ஏழைதான், ஆனால் படிப்பிலே, பண்பிலே, தன்மானத்திலே அவர் ஏழையில்லை... அப்பா! இந்த பங்களா, பர்னிச்சர், ஏர்கண்டிஷன், கார் எல்லாம் உலகத்திலே ஆயிரக்கணக்கான வீட்டிலே இருக்கும். ஆனால் அவர் மாதிரி லட்சத்தில் ஒருவர்

தான் இருப்பாங்க"[45]

என்று படிப்பு, பண்பு, தன்மானத்தில் ஏழை, பணக்காரர் என்ற வேறுபாடு இல்லவே இல்லை என்பதையும் அய்க்கண் தமது புதினங்களில் பதிவு செய்துள்ளார்.

காதல் என்பது இயற்கை வயப்பட்டது. சாதி, மதம், இனம், வர்க்கம் என எதுவும் காதலைப் பிரித்துவிட முடியாது என்று சாதி, மத பேதமின்றி 'காதல்' ஒன்றையே கருத்தில் கொண்டு அய்க்கண் ஆதரிக்கிறார் என்பது புலனாகிறது.

**கற்பு**

அகமன நிலைப்பாடுகளில் பெண்களுக்குரிய தனித்த தன்மையாகக் 'கற்பு' போற்றப்பட்டதைப் பண்டைய இலக்கியங்கள் உணர்த்துகின்றன. அதனடிப்படையிலே இன்றும் 'கற்பு' கோட்பாடு பல்வேறு இடங்களில் பேசப்படுவதும், பெண்ணுரிமையாளர்கள் அதனை எதிர்த்துக் குரல் கொடுப்பதையும் காணலாம்.

அய்க்கண் தமது புதினங்களில் இன்றைய சமூகத்திற்கு ஏற்றவாறு 'கற்பு' பற்றிய பார்வையை முன் வைக்கின்றார்.

"அச்சமும் மடனும் நாணும் முந்துறுதல்
நிச்சமும் பெண்பாற் குரிய"[46]

என்று தொல்காப்பிய இலக்கணம் பெண்ணிற்குரிய குணங்களைச் சுட்டும். குறிப்பாகக் கற்புடைய பெண்ணுக்கு அச்சம், நாணம், மடம் இருத்தல் அவசியம் என்று வலியுறுத்துகின்றது.

திருவள்ளுவர்,

"பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மை உண்டாகப் பெறின்"[47]

என்று குறிப்பிடுவதைக் காணலாம்.

இத்தகைய ‘கற்பு’ நிலை பல்வேறு காரணங்களுக்காக மாறுபட்டு நிகழ்வதையும் சமூகச் சிக்கல்கள் அதற்குரிய காரணங்களாக அமைந்துள்ளதையும் ஆசிரியர் எடுத்துக்காட்டுகின்றார்.

> “தன்னை மணந்த கணவனையன்றி மற்றொருவனை மனத்தால் நினைப்பதும் கற்புக்கு இழுக்கு என்பது பழந்தமிழ்க் கொள்கை. கற்பு என்பது விரிந்த பொருளை உடையது என்பர்”[48]

என்று குறிப்பிடுவதும்,

பிரபஞ்சன் அவர்கள்,

> “அந்தக் காலத்தில் பெண்கள் வீட்டை விட்டு வெளியே வரவில்லை. இப்பொழுது வெளியே வந்திருக்கிறார்கள். வேலை செய்கிறார்கள். ஆண்களுக்கு நிகராக வந்திருக்கின்றனர். பல பெண்கள் ஆண்களை விட உயர்வாக உள்ளனர். அப்படிப்பட்ட நிலையில் கற்புக்கு அர்த்தம் மாறியாக வேண்டும். ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்த கற்புக்கு அர்த்தம் வேறு, இன்று பொருள் வேறு, நாம் வாழும் காலத்திற்கு ஏற்ப ஒரு வடிவத்தை மேற்கொள்ள வேண்டியிருக்கிறது”[49]

என்று குறிப்பிடுவது, ஏற்றுக் கொள்ளக் கூடியதாக அமைகின்றது. இக்கருத்திற்கு ஒப்பவே ‘அய்க்கண்’ புதினங்கள் கற்பிற்கு முக்கியத்துவம் தந்திடினும் இன்றைய சமூகச் சூழலுக்கு ஏற்ப கதைகள் மாறுபட்டும் அமைந்துள்ளன.

விடிவெள்ளி என்ற புதினத்தில், மீனாட்சி பாத்திரம், கற்பொழுக்கத்தில் சிறந்தவளாகக் காட்டப்படுகின்றது.

“காதல் கொண்டு ஒருவனைத் திருமணம் செய்து கொண்டு வாழ்கிறாள். கணவன் இறந்துவிட ஊரார் வழக்கப்படி பெண் வீட்டிற்கு அப்பெண்ணை அழைத்துச் செல்ல நேரிடும் பொழுது, கணவனின்

தம்பிக்கே திருமணம் செய்து வைக்கிறார்கள். இக்கதைச் சூழல் சில மக்களின் பழக்கவழக்கத்திற்கு உட்பட்டது. இதனை ஆசிரியர் விரிவுர எடுத்தியம்புகின்றார்.

> "அப்பா! ஒண்ணு – உங்க சாதி வழக்கப்படி நான் இன்னொருத்தனக் கட்டிக்கிட்டு வாழணும். இன்னொன்னு இந்தக் கொழுந்தனுக்கு மனைவியா வர்றவ என் மாதிரி இந்த குழந்தைகளுக்கு தாயாக இருக்கணும் – இது தானே? இந்த இரண்டும் நடக்கிற மாதிரி, நானே இந்தக் கொழுந்தனுக்கு மனைவியாகிட்டா?....
>
> "ரொம்ப சந்தோஷம், மீனா! நீ சொல்றதும் நம் சாதி வழக்கப்படி உள்ளதுதான்...."[50]

என்று தன் கணவன் இறந்தவுடன் வேறு இடத்தில் நமக்குத் திருமணம் செய்து வைத்தால், கணவன் வீட்டுப் பிள்ளைகளை ஏனையோர் யார் பாதுகாப்பது என்ற மனவருத்தம் அவளுக்கு ஏற்படுகின்றது. சமூக வழக்கத்திற்கேற்பக் கொழுந்தனைத் திருமணம் செய்து கொள்கின்ற போக்கைக் காண முடிகிறது.

இது பண்டைய கற்பொழுக்கத்திற்கு எதிராகத் தோன்றினாலும், சில சமூகத்தில் நிலவும் எதார்த்த செயல்பாடுகளே ஆகும். இவையே குறிப்பிட்ட சில சாதி சமுதாயத்திற்குரியவையாக உள்ளது. ஆதலால் இது ஒழுக்கத்திற்கு உட்பட்டதாகவே அமைகிறது. இக்கருத்தை வலுவாக ஆசிரியர் பாத்திரங்களின் மூலம் உணர்த்தியிருக்கின்றார்.

தனது காதலனுக்காகத் தனது குடும்பத்தையும் சுயத் தகுதியையும் விடுத்து, இறந்த காதலனின் குடும்பத்தைத் தன் குடும்பமாக ஏற்றுக் கொள்கிறாள். பின் சினிமாத் துறையில் இணைந்து, தன் 'கற்பை' காதலன் குடும்பத்திற்காக இழக்கிறாள். இதனை 'நிழலில் நிற்கும் நிஜங்கள்' புதினம் வழியாக,

"சுந்தரத்துக்குக் காணிக்கையாக ஆக்கப்பட்ட அந்த
உடல் அவனுடைய தங்கைக்காக பலியாகி விட்டது"[51]

என்று கற்பைத் தன் கணவனுக்காகப் பாதுகாத்த அவள் காதலன் தங்கை திருமணத்திற்காகத் தெரிந்தே கற்பை இழக்கிறாள் என்பதாகக் கதையமைத்து 'கற்பின்' பழங்கால கோட்பாட்டுத் தளத்தை ஆசிரியர் அய்க்கண் இன்றைய சமூக நன்மை கருதி தகர்த்தெறிந்துள்ளார்.

மேற்கூறிய 'கற்பு' நிலை மட்டுமின்றி பெண்ணுரிமை சார்ந்த கருத்துக்களையும், பெண் என்பவள் குலம், சாதி, மதம் போன்ற பல்வேறு நிலைகளுக்கு உட்பட்டு இயங்குகின்றாள் என்பதையும், பண்டைய 'கற்பு' கோட்பாட்டிற்கு மாறுபட்ட சமூகச் சூழல்களும் இருக்கின்றன என்பதையும் உணர்த்துகின்றார்.

## பரத்தையர்

மனித சமுதாயம் வளர்ச்சிப் பெற்ற காலத்திலிருந்தே 'பரத்தைச் சமூகம்' தோன்றியிருக்கின்றது. அவர்களின் வாழ்க்கை நிலையானது பிற பெண்களின் நிலையிலிருந்து வேறுபட்டதாக அமைகிறது.

இத்தகைய மகளிரின் வாழ்க்கை வரலாறுகளைக் கதையில் உணர்த்துகின்றார். "திருவிழாக் காலங்களில் பத்து நாளும், மற்ற விசேஷ நாட்களிலும், கோயில் முன் உள்ள மேடையில் 'சதிர்' ஆடுவதும், திருவீதியுலா வரும் போது அம்மனுக்கு வெண் சாமரம் வீசி நடந்து வருவதும், தேவரடியாளுடைய முக்கிய கடமைகள் ஆகும். கோயில் ஊழியம் பார்ப்பதற்காக, ஆண்டுக்கு மொத்தமாக நெல்லும், சம்பளமும், தினசரி தளிகைச் சாதமும் ஊதியமாகக் கொடுப்பார்கள் என்பதையும் காட்டுகிறார்.

சுற்றுப் புறங்களில், தனியாகத் தேவரடியார் நியமித்துக் கொள்ள நிதி நிலைமை இடம் தராத சிறுகோயில்களுக்கும், கோலங்குடிக் கோயில்

நிர்வாகஸ்தர் அனுமதியுடன் போய், சதிர் ஆடி சன்மானம் பெற்றுக் கொள்வதும் உண்டு.

பின்பு காலப் போக்கில், கோயில்கள் நிலங்களையும், சொத்துக்களையும் இழந்து வருமானம் குறைந்து, 'தேவர்' செல்வாக்குக் கடினமடைந்த போது, தேவரடியார்கள் ஊரடியாள்களாக மாறும் நிலைமை ஏற்பட்டது.

> கோயில் சந்நிதியில் மட்டும் நடனமாடியவர்கள் பணக்காரர்களின் 'சவுக்கை'களில் ஆடியும் – அம்மன் இல்லாமல், தனியே 'திருவீதியுலா' வந்து தம் அழகால் இளைஞர்களின் ஆசைக்கு சாமரம் வீசியும் – வாழ ஆரம்பித்தார்கள்"[52]

என்று நாட்டுப்புறங்களில் இறைவனின் அடியவர்களாக இருந்தவர்கள் மாறிய சூழலை ஆசிரியர் உணர்த்துகின்றார்.

பாலியல் தொழிலில் அவர்கள் ஈடுபட்டிருப்பினும் அதிலிருந்து அவர்கள் தம்மை விடுவித்துக் கொள்ள முயற்சித்தாலும் சிலர் விடுவதில்லை என்பதை, ஆசிரியர் வெள்ளைத் தாமரையில்,

அவர்களின் குடும்பமே அத்தகைய தவறான ஒழுக்கத்திற்கு முற்பட வைக்கிறது என்பதனை,

> "இந்த அநியாயத்தைக் கேளுங்க, ஐயா...!
> இந்த பொண்ணு உலக நடப்பு தெரியாம
> என்னென்னமோ பேசுது...? எங்க சாதியிலே
> பொறந்த பொண்ணு, ஒருத்தனுக்கு மட்டும்
> பெண்சாதியா வாழ முடியுமா?.... நல்ல
> குடும்பத்தை சேர்ந்த எந்த மாப்பிள்ளையாவது
> எங்க வீட்டுப் பெண்ணைத் தாலிக் கட்டிப்
> பொண்டாட்டியாக்கிக்க குடும்பம் நடத்தச்

சம்மதிப்பானா?... நீங்கள் சொல்லுங்கள்
ஐயா!... என்னென்னமோ படிச்சிட்டு, ஏட்டுச்
சுரைக்காயைப் பேசுறா என் மகள், அவளுக்கு
நீங்கள் தான் புத்திமதி சொல்லித் திருத்தனும்,
இப்படியே விட்டுட்டா கெட்டுப் போயிடுவா...."[53]

என்று முறையிட்டாள் தாய், என்று பரத்தையர் குலம் நல்லொழுக்கத்தில் வாழ விரும்பும் பெண்களைக் கூட அழித்துவிடுகிற கொடுமையான சூழலை உணர்த்துகின்றார். மேலும் சமூகம் பரத்தையார் குலப் பெண்ணை இழிவு படுத்தும் சூழலை விளக்குகிறார்.

"உயர்நிலைப் பள்ளியில் சுவர்களில் வண்ண வண்ண
'சாக்பீஸ்'களால் வாக்கியங்கள் காட்சியளித்தன.

'படுத்து சம்பாதிக்கிற கல்யாணி, படித்துச் சம்பாதிக்க
வந்திருக்காளா?"

'பள்ளிக்கூடத்தை பள்ளியறையாக்க நினைக்கிறாள்
கல்யாணி'
'கவர்ச்சி காட்டி காசு சம்பாதிக்கும் கல்யாணிக்குக்
கல்வி ஏன்?"[54]

என்று பரத்தையர் தொழிலை மறுத்து கல்விக்கூடத்திற்குள் நுழைய அனுமதிக்கவில்லை. அவளைப் பல்வேறு வகையினில் கொடுமைப்படுத்துகின்ற சூழலையும், அத்தகையத் தவறான சமூகத்தை நல்வழிப் பாதையில் கொண்டு செல்லவும் அய்க்கண் தமது புதினங்கள் மூலம் உணர்த்தியுள்ளார்.

வெள்ளைத் தாமரை கதை பரத்தைத் தொழில் ஏற்பட்ட விதத்தையும், அத்தொழிலிருந்து விடுபட மறுக்கின்ற சமூகச் சிக்கல்களையும், உணர்த்துகின்றது. பரத்தைத் தொழிலை விடுத்து குடும்பப் பெண்ணாக மாறி நிற்கின்ற பாத்திரத்தையும் அறிமுகம் செய்து புதிய புரட்சியைக் கதையின் வழியாக எடுத்துணர்த்துகின்றார்.

## விதவை மணம்

பண்டையக் காலத்தில் திருமணமாகி கணவனை இழந்த பெண் தன் கணவனோடு இறந்துவிடுவதும், இல்லையெனில் விதவையாகி நோன்பு நோற்றே வாழ்க்கையை நகர்த்துவதுமாய் இருந்தது.

இக்கருத்தினைச் சமூகச் சீர்த்திருத்தவாதிகள் மறுத்து பெண்கள் கணவனை இழந்த பின்னும் திருமணம் செய்து கொள்ள பல்வேறு போராட்டங்களை நடத்தினர். தமிழகத்தில் திராவிட இயக்கங்கள் இத்தகைய கருத்தை வலியுறுத்தின.

இதனை மையமிட்டே பல்வேறு நவீன இலக்கியங்கள் இக்காலத்தில் எழுதப்பட்டன. அவற்றில் புதினங்கள் சிறப்பிடம் பெறுகின்றன. கணவனை இழந்த விதவைகள் மறுமணம் செய்து கொள்ளலாம் என்ற கருத்தை 'அய்க்கண்' ஆணித்தரமாக எடுத்துரைக்கின்றார். விதவை மணத்தை அங்கீகரித்த சில சாதிகளை விடிவெள்ளி கதையின் மூலமாகவும் விளக்குகின்றார்.

கணவன் இறந்ததும் கொழுந்தனுக்கு மனைவியாகிற பழக்கம் இருந்த நிலையை,

> "அப்பா! ஒண்ணு – உங்க சாதி வழக்கப்படி நான் இன்னொருத்தனக் கட்டிக்கிட்டு வாழணும். இன்னொன்னு இந்தக் கொழுந்தனுக்கு மனைவியா வர்றவ என் மாதிரி இந்த குழந்தைகளுக்கு தாயாக இருக்கணும் – இது தானே? இந்த இரண்டும் நடக்கிற மாதிரி, நானே இந்தக் கொழுந்தனுக்கு மனைவியாகிட்டா?....
>
> "ரொம்ப சந்தோஷம், மீனா! நீ சொல்றதும் நம் சாதி வழக்கப்படி உள்ளதுதான்...."'[55]

என்ற கருத்து நிலையும்,

"இது ஒண்ணும் புதுசில்லே, அண்ணே! எங்க அப்பா, நான் பொறந்து ரெண்டு வருஷம் கழிச்சுத்தான் காலமானார். அப்போ, எங்க ஆத்தா – இந்த மீனாட்சி மாதிரி தான் – வாழ்ந்த வீட்டை விட்டுப்போக மனசில்லாம, எங்கச் சித்தப்பாவை கட்டிக்கிச்சு; அதுக்கப்புறம் எனக்கு ரெண்டு தம்பி, ஒரு தங்கச்சிப் பொறந்தாங்க"[56]

என்று கூறும் கூற்றும் நம் தமிழ்ச் சமூகத்திலேயே விதவைக்கு மறுமணம் செய்து வைக்கின்ற பழக்கம் இருந்ததை உறுதி செய்கின்றது.

இதன் மூலம் 'விதவை மணம்' புதிதாய் நடக்கிற நிகழ்வல்ல, காலம் காலமாய் சில குறிப்பிட்ட சமுதாயத்தில் சாதாரணமாக நிகழும் நிகழ்வுகள் தான் என்று உணர்த்தி விதவை மணத்தைச் சமூக சீர்த்திருத்தவாதியாய் நின்று ஆசிரியர் அய்க்கண் தம் புதினம் மூலம் வெளிப்படுத்தியுள்ளார்.

## கலப்பு மணம்

மதக் கட்டமைப்பு, சாதிய, இனக் கட்டமைப்புகளை உடைத்தெறிந்து மனிதன் என்ற பொதுப்பார்வையில் நிகழும் திருமணமே 'கலப்பு மணம்' என்று குறிப்பிடுவர். விதவை மணம், கலப்பு மணம் இரண்டும் இன்றைய சமூகத்தில் அங்கீகரிக்கப்பட்டு நின்றாலும், சிலர் அதனைத் தடுக்கவே முயற்சி செய்கின்றனர். மேலும் சமூகமும் இத்தகைய செயலைச் செய்ய மறுக்கிறது. அய்க்கண் இக்கட்டமைப்பைத் தகர்த்தெரிந்துள்ளார்.

கலப்பு மணத்தை எதிர்க்கும் சூழலை,

"எல்லாரும், தன்னோட சாதி மதத்தை விட்டுட்டு, வேற சாதி மதத்திலே தான் சம்பந்தம் செய்துக்கிறாங்களா? அல்லது சாதி, மதம் வித்தியாசம் கிடையாதுன்னு எல்லாரும் ஒண்ணாயிட்டாங்களா? சொல்லு மத்த

> சாதிக்காரங்களைச் சகோதரர்களா ஏத்துக்கலாம். சம்பந்திகளா ஏத்துக்க மாட்டாங்க என அழுத்தமாக, உண்மையை எடுத்துச் சொன்னாள் சிகப்பி.
>
> "சாதி மதத்தைவிட குணம், பண்பு, படிப்பு எல்லாம் முக்கியமில்லையா? என்று அவன் கேட்டதும், அவளுக்குள் எரிச்சல் பொங்கிச் சூடேறியது"[57]

இத்தகைய முரண்கள் இன்றும் சமூகத்தில் நிகழ்கின்ற முதன்மையான செயல்பாடாகவே உள்ளன என்பதை ஆசிரியர் சுட்டிக்காட்டுகின்றார். இத்தகைய கருத்தை வரவேற்கும் முகமாக,

> 'அடி செகப்பி! அது அந்தக் காலம். நான் அப்போ சொன்னது சரிதான். ஆனா இப்போ காலம் ரொம்ப மாறிப்போச்சு, அதுக்கு தகுந்தாப்பலே, நாமும் மாறிக்கிடணும். மனுசங்கன்னா மாறணும். மரங்களும், மிருகங்களும் தான் மாறாம அப்படியே இருக்கும். நாம் மாறிக்கிடணும்" என அழுத்தமாகச் சொன்னாள் சின்னாயி....
>
> ஆத்தா! வேற சாதின்னாலும் பரவாயில்லை. இது வேற நாட்டு வெள்ளைக்காரர் பொண்ணு, இல்லையா?"...
>
> "அடி போடிபொச கெட்டவளே! பொண்ணுலே என்ன நம்ம நாட்டு பொண்ணு, வேற நாட்டுப் பொண்ணு?... எல்லாப் பொண்ணும் பொண்ணுதான். பொண்ணு, எந்த மண்ணிலே பொறந்தாலும் பொண்ணாத்தான் இருப்பா...."[58]

என்று கலப்பு மணத்தினைப் பழைய கோட்பாடுகளைக் கொண்ட முதியோர்களின் வழியாகவே அங்கீகரித்து புதின ஆசிரியர் அய்க்கண் மிகச் சிறந்த கருத்தோட்டத்தை உலகிற்கு எடுத்துரைத்துள்ளார்.

## புறநிலைச் சூழல்கள்

உள்ளம் சார்ந்த நிகழ்வுகளும், அதனைச் சார்ந்தவைகளை அகவுணர்வுக் கூறுகளில் அமைப்பது போல உலகினில் புறத்தே நிகழ்கின்ற பல்வேறு நிலைகளை விளக்குவது புறநிலைச் சூழல்களின் கருத்துக்கள் எனலாம். தனிமனித ஒழுக்கம் முதல் வாழ்க்கையின் அனைத்துப் புற நிகழ்வுகளையும் 'அய்க்கண்' தமது புதினங்களில் வெளிப்படுத்துகின்றார். அய்க்கணின் புறச்சூழல் சார்ந்த செய்திகளைப் பின்வருமாறு வகுக்கலாம். அவையாவன.

## தனிமனித ஒழுக்கம்

சமூகத்தின் கட்டுப்பாட்டிற்கு உட்பட்ட, சமூகம் அங்கீகரிக்கின்ற செயல்பாடுகளை ஏற்று, இயற்கை முதல் சமூகம் உள்ளிட்ட பல்வேறு நிலைகளுக்கும் தீங்கிழைக்காத உண்மையான மனிதனே சிறந்த ஒழுக்கமானவனவன்.

அத்தகு மனிதர்கள் சமுகத்தில் ஒரு சிலரே இன்று காணப்படுகின்றனர். அதனடிப்படையில் அய்க்கண், அவர்களைப் புதினத்தில் எடுத்துக்காட்டுகிறார்.

உண்மை நிலையோடு சமூகத்திற்குத் தீங்கு விளைவிக்காத வண்ணம் மனிதன் இருக்கின்ற பொழுது சமூகமும் அத்தகைய போக்கில் அமையும். அதற்கு அடிப்படையாய் தனி மனித ஒழுக்கம் முதன்மையாகின்றது.

தனி மனிதனின் நல்லொழுக்கமானது மக்களிடத்தில் நன்மதிப்பை உருவாக்குவதோடு சமூகத்தில் தனித்துவ மதிப்புகளையும் தருகின்றது. அவற்றில் மிகவும் முக்கியத்துவமானது மக்களோடு இணைந்து பழகுவது, உதவுவது, போன்றனவாகும்.

அய்க்கண்ணின் புதினங்களில் அத்தகு பாத்திரங்கள் காணப்படுகின்றனர். குறிப்பாக ‘அவனுக்காக மழை பெய்கிறது’ என்ற புதினக் கதாநாயகன் வெகுளியான, சிறந்த பாத்திரமாக அமைந்துள்ளது குறிப்பிடத் தக்கதாகும்.

ஊரில் அனாதையாக வலம் வருகின்ற ‘தம்பி’ ஊரிலுள்ள அனைத்து மக்களுக்கும் உதவுவதும், ஆண் பெண் செய்யக்கூடிய அனைத்து வேலைகளையும் செய்கின்றான். அவனுக்கு உதவுபவர்களுக்கு நன்றிக்கடனாய் பிறரின் துன்பங்களைத் தனது துன்பமாய் தாங்கிக்கொள்கின்ற ஆற்றல் உடையவனாய் படைக்கப்பட்டிருக்கிறான்.

> “என்னக்கா, ஏதாச்சும் வேலையிருக்கா?” என்று கேட்டுக்கொண்டே வந்த தம்பியிடம், தன் ஆசையை கூறினாள் லிஸி.
>
> ஒண்ணுமில்லே, தம்பி! வடை சாப்பிடனும் போல இருந்திச்சு எனக்கு... அம்மாகிட்டே சொன்னேன். நேரமில்லைனு சொல்லிட்டாங்க...”
>
> “ஆமா... பாவம், ஆத்தா ஒத்தைக்கையாளு எவ்வளவு வேலை செய்வாங்க...
>
> .... ஆத்தா! சீக்கிரம் உளுந்து எடுத்துக்குடு... அக்கா இஸ்கூலுக்குப் போறதுக்கு முன்னாடி வடை சுட்டுக் குடுக்குனும்....’ என்று பரபரப்புடன், மேரியிடம் உளுந்து வாங்கிக் கொண்டு போய், கிணற்றடியிலே கழுவி, அலசி, ஆட்டுக்கல்லில் போட்டு ஆட்டத் தொடங்கினான்”[59]

பிறகு தெருவில் நடக்கிறான். அவன் வருகையை எதிர்நோக்கி வேறொருவர் காத்திருக்கின்றார்.

"என்ன ஐயா! என்ன செய்யனும்?" என்று பணிவாக வந்து நின்று கேட்டான் தம்பி.

"கோயிலுக்குள்ளே முளைப்பாரிகளுக்குத் தண்ணி ஊத்தனும்... அதுக்குத்தான் ஆள் பாத்துக்கிட்டு நிக்கிறேன்...' என்று வாளியை அவனிடம் நீட்டினார் பூசாரி.

தலையில் கட்டியிருந்த துண்டை அவிழ்த்து இடுப்பில் இறுக்கிக் கட்டிக் கொண்டான் தம்பி.

வாளியை எடுத்துக்கொண்டு போய், கோயிலின் பக்கத்திலிருந்த கிணற்றில் தண்ணீர் இறைத்துக் கொண்டு வந்து கோயில் கர்ப்பக்கிரகத்துக்குள் போய் முளைப்பாரிகளுக்கு வரிசையாய் தண்ணீர் ஊற்றினான்"[60]

பின்னர் இராமசாமி வீட்டிற்குச் செல்கிறான். "ராமசாமிக் கோனார் வீட்டுக்கு, இரைக்க இரைக்க ஓடி வந்தான் தம்பி.

தொழுவத்தில் நிற்கும் மாடுகளை, கோனாரும் தம்பியும் அவளும் ஒவ்வொன்றாகப் பிடித்துக் கொண்டு போய், பக்கத்திலுள்ள குளத்திலே நிற்க வைத்து, வலது கையால் வைக்கோலை வைத்துத் தேய்த்துக் கொண்டும், இடது கையால் தண்ணீரை வாரித் தெளித்துக் கழுவிக் கொண்டும் குளிப்பாட்டி கொண்டிருந்தார்கள்"[61]

இப்படி எல்லோருக்கும் சேவை செய்கின்ற மனிதநேயம் மிக்கவனாகவும், தனிமனித ஒழுக்கமுடையவனாகவும் ஆசிரியர் படைத்திருக்கின்றார். பல்வேறு விதமான சிறந்த தனி மனிதர்களையும் அடையாளம் காட்டுகின்றார்.

## திருமணம்

> ‘திருமணம் என்பது ஆயிரங்காலத்து பயிர்‘ என்றும், ஆயிரம் பொய் சொல்லியாவது ஒரு கல்யாணத்தைப் பண்ணலாம் என்று மக்கள் பேசும் பழமொழிகள் உண்டு. பண்டைய தொல்காப்பிய இலக்கணத்தில்,
>
> ‘பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
> ஐயர் யாத்தனர் கரணம் என்ப”[62]

என்று பொய்களும், தவறுகளும் தோன்றிய பின்னர் அந்தணர்கள் திருமணத்தை வரையறை செய்தனர் என்று குறிப்பிடுவர்.

காலச் சூழலுக்கு ஏற்பத் திருமணமுறைகள் சில வகையில் அமைந்திருந்தாலும்; சமூகத்தில் இரு குடும்பங்களும் அங்கீகரித்துத் ஏற்றுக்கொண்டு திருமணம் செய்கின்ற முறையையும், அதற்கடுத்து ‘உடன்போக்கு’ திருமணமும் பெரும்பகுதி நிகழ்கின்றன என்பதைச் சுட்டிக் காட்டுகிறார்.

## அய்க்கண் நாவலில் திருமணம்

அய்க்கண் தம்முடைய புதினங்களில் பலதரப்பட்ட திருமணங்கள், திருமணத்தால் ஏற்படக்கூடிய இடர்பாடுகள் உள்ளிட்ட பல்வேறு கருத்துக்களை வெளிப்படுத்தியிருக்கின்றார்.

> “இல்லறம் என்னும் நல்லறம் குடும்பம், மணம் ஆகிய இரண்டையும் வெளிப்படுத்துகின்றது. குடும்பம் மணமக்களைத் தேர்ந்தெடுக்க இன்றியமையாதது. மணம் குடும்பத்தை தேற்றி வைக்க இன்றியமையாதது”[63]

என்று குறிப்பிடுவதன் மூலம் இல்லறம் என்ற நல்லறத்திலே குடும்பம் என்ற அமைப்பு முழுமை பெறுகின்றது.

இத்தகைய திருமணத்தின் முக்கியத்துவம் பெண்களுக்குத் தலைசிறந்ததாக உள்ளது. பண்டையத் தமிழ் மக்களின் வழக்கமாகத் திருமணத்திற்குப் பின்னர் கணவன் வீட்டிலேயே அடைக்கலம் புகுதல் பெண்ணிற்குரிய விதிகளாய் காணப்படுகிறது. இக்கருத்தை,

> "பெண்கள் நாற்றங்கால் பயிர் மாதிரி; பிறந்த இடத்தை விட்டு இன்னோர் இடத்திலே தான் எடுத்து நட வேண்டும். முளைத்து வளர்ந்த இடத்திலே அந்தப் பயிருக்கு வாழ்வு இல்லை! எடுத்து நடுகிற இடத்திலே தான் அதற்கு வாழ்வும் உரிமையும்...."[64]

என்று ஆசிரியர் உணர்த்துகின்றார்.

தமிழ்ச் சமூகத்தில் நிகழும் திருமணம் 'ஒருவனுக்கு ஒருத்தி' என்ற கொள்கையை உடையது. இதனை உலகமே பார்த்து வியந்து போவதை நாம் காணலாம். இக்கருத்தை 'இரண்டாவது ஆகஸ்டு 15' புதனம் மூலம் ஆசிரியர் அய்க்கண்,

> "அற்பக் காரணங்களுக்கெல்லாம் விவாகரத்துக் கோரும் அமெரிக்க ஆண்களையும் அவர்கள் நடத்தையையும் முற்றிலும் வெறுத்தவள் அவள். ஒருவனுக்கு ஒருத்தி என இதயங்களால் ஒன்று சேர்ந்து வாழும் இந்தியர்களின் மேல் அவளுக்கு எப்போதும் ஒரு மதிப்பு உண்டு"[65]

என்று மேலை நாட்டுப் பெண் நம் நாட்டுத் திருமணத்தை வரவேற்று அங்கீகரிப்பதை மேற்கூறிய கருத்தின் வழியாக அய்க்கண் வெளிப்படுத்துகிறார்.

## திருமணமும் சமூகச் சிக்கல்களும்

சமூகத்தில் அங்கீகரிக்கப்பட்ட திருமணத்தில் 'வரதட்சணை' தவிர்க்க முடியாத ஒன்றாய் இன்று மாறி நிற்கிறது. சமூக சீர்திருத்தவாதிகள் வரதட்சணையைப் பல்வேறு வகையில் எதிர்த்து

வந்தாலும், பெண் வீட்டார் வரதட்சணை கொடுக்காமலிருப்பதைக் மானப் பிரச்சினையாக எண்ணுகின்றனர். இத்தகைய சிக்கல்களை ஆழமாகக் கதையின் ஊடாகத் தருகின்றார்.

> "வரதட்சணை கொடுக்காமலிருந்தால், சமூகத்திலே என்னை ரொம்பக் கௌரவக் குறைவாக நினைப்பார்கள்; வரதட்சணை என்கிற பெயரில் ஒரு ரூபாயாவது என்னிடமிருந்து நீ வாங்கிக் கொள்ளத்தான் வேண்டும்...."[66]

என்று கூறுகின்ற பெண் வீட்டார்கள் இருக்கத்தான் செய்கின்றனர். ஆண் வர்க்கத்தினர் மறுத்தாலும் பெண் வீட்டார் அவர்களை விடுவதில்லை என்று திருமணத்தில் நிகழ்கின்ற சிக்கல்களை உணர்த்துகின்றார். மேலும், பெண்கள் திருமணம் செய்வதற்குரிய இடர்ப்பாடுகளை,

> "குறைவாகப் படிச்ச மாப்பிள்ளையைக் கட்டிக்க பொண்ணு மனப்பூர்வமாகச் சம்மதித்தாலும், அந்த மாப்பிள்ளை தன்னை விட அதிகமாய் படிச்ச பொண்ணைக் கட்டிக்க முன்வர மாட்டாங்க"[67]

என்ற கருத்தினையும் அய்க்கண் வெளிப்படுத்தத் தவறவில்லை.

## காதல் திருமணம்

பெற்றோர்கள், உறவினர்களின் விருப்பம் இல்லாது திருமணம் செய்கின்ற போக்கிலும் பல இடர்ப்பாடுகள் உருவாகின்றது. இதனை, தீர்க்க சுமங்கலியில்,

> "எல்லோரும் எதிர்பார்த்தது போல, லலிதாவை மணக்க முடிவு செய்த சுந்தரத்தை 'நீ என் மகன் இல்லை' என்று வெளியே அனுப்பிவிட்டார் தண்டபாணி.

> வெறுங்கையோடு லலிதாவின் வீட்டுக்கு வந்தான் சுந்தரம். இருவர் கைகளையும் இணைத்து, ரிஜிஸ்டரார் அலுவலகத்தில், பதிவு திருமணம் செய்து வைத்தான் பாலு"[68]

இதில் காதல் திருமணங்களைப் பெற்றோர்கள் எதிர்க்கவே செய்கின்றனர். ஆகவே ஒரு சில தனி நபர்களை வைத்துக் கொண்டு 'பதிவு அலுவலகத்தில்' திருமணம் செய்கின்ற இக்கட்டான நிலைக்கு ஆளாகுவதைப் பாத்திரத்தின் செயல்பாடுகளின் ஊடாக உணர்த்துகின்றார்.

அக்கண் சமூகத்தில் நடைபெறுகின்ற மரபுகள் திருமணங்களையும் புதிய முறையில் நிகழும் திருமணங்களையும் வரவேற்கின்றார். இன்றைய சமூகத்தில் காதலித்தவர்கள், காதலன் மூலம் தன் காதலியை வேறொரு ஆண்மகனுக்குத் திருமணம் செய்து வைக்கின்ற நவீனச் சூழலை, 'கரையைத் தேடும் அலைகள்' புதினம் மூலம்,

> "குமரேசன்!.... நானும் ராதாவும் காதலித்தது உண்மை தான். ஆனால் காதல் என்கிற பெயரிலே... நோ..." என்று தலையை ஆட்டிவிட்டு, ராதா ஒரு லம்பாட்லெஸ் காரெக்டர்.... எ ஜெம் ஆ.ஃப் எ கேள்.."[69]

என்று கூறி தான் காதலித்த பெண்ணை வேறொருவருக்குத் திருமணம் செய்கின்ற நவீனமங திருமணங்களையும் வரவேற்கின்றார்.

## குடும்பம்

சமுதாய அமைப்புகளுக்கு அடித்தளமாக விளங்குவதில் முதன்மையிடம் பெறுவது குடும்பம் ஆகும். சமூகம் தன் நிலைப்பாடுகளை

வகுத்துக் கொள்வதற்கும் சமூகம் மேம்படுவதற்கும் 'குடும்ப அமைப்பே' சிறந்த அமைப்பாய் நிற்கின்றது. சமூக நிறுவனங்களில் முதன்மையானது குடும்பமாகும்.

> "சமுதாயம் முற்றிலும் வளர்ச்சியடையக் குடும்பம் ஒரு அடிப்படையாக உள்ளது. குடும்பம் சமுதாயத்தின் அடித்தளமாகக் கருதப்படுகிறது"[70]

இத்தகு குடும்பத்தில் பல்வேறு பிரச்சினைகள் நிகழ்வது எதார்த்தமானதும், சிக்கலுக்குரியதும் ஆகும். அய்க்கண் தமது நாவல்களின் மூலம் குடும்பத்தில் ஏற்படுகின்ற பிரச்சினைகள், குடும்ப உறவுகளின் ஆழம், பெற்றோர்களின் கடமை, பிள்ளைகளின் கடமை என பல கருத்துக்களைத் தந்து அவற்றிற்குத் தீர்வுகளையும் உணர்த்துகின்றார்.

## கணவன் – மனைவி

கணவன், மனைவி இருவரும் குடும்பத்தின் தலைமைகள் ஆவர். அவர்கள் தெளிவாகவும் புரிதலோடும், சமூக நடைமுறைகளை அறிந்துக் கொண்டு வாழ வேண்டும் என்பதையும் சுட்டுகின்றார்.

'கணவனே கண்கண்ட தெய்வம்' , 'கல்லானாலும் கணவன் புல்லானாலும் புருஷன்' என்று பழமொழிகள் கணவனோடு மனைவி வாழும் முறைகளையும், மனைவியானவள் கணவனையே உறுதுணையாக நினைத்து வாழ வேண்டும் என்பதையும் உணர்த்துகின்றன. மறுபக்கம் புதினத்தில்,

> "உலகத்திலே சிலருக்குத் தான் கல்யாணமும், மனைவியும் கால்கட்டாகவும், தலைக்கட்டாகவும் அமையும். ஆனால் பெரும்பாலானவருக்கு மனைவியே துண்டுகோலாக இருந்து கணவன் வாழ்க்கையில் முன்னேற துணையாயிருப்பாள்"[71]

என்று மனைவியின் செயல்பாட்டிலேயே கணவனின் வளர்ச்சி நிலை அமையுகின்றதையும், என்று ஆண், பெண் உறவுகளையும் விளக்குகிறார் அய்க்கண்.

## கணவன் மனைவி உறவுச் சிக்கல்கள்

இக்கால நவீன உலகில் கணவன் மனைவி இடையே தேவையற்ற சிக்கல்கள் உருவாகுவதும், அதன் மூலம் குடும்ப அமைப்பு சிதறிப் போவதையும் காண முடிகிறது. அதனை நன்குணர்ந்து அதற்குரிய தீர்வுகளையும் கதையின் வாயிலாகத் தருகின்றார்.

'கரையைத் தேடும் அலைகள்' புதினத்தில் காதல், அதன் பின்னர் ஏற்படுகின்ற திருமண உறவுகள் மற்றும் பாலியல் தவறுகளால் ஏற்படும் அழிவுகள் எனப் பல நிகழ்வுகளை ஆசிரியர் வெளிக்கொணர்கின்றார்.

சுந்தரம் என்பவன் ராதாவைக் காதலிக்கிறான். சுந்தரத்தின் தாய் காதலை மறுக்க, அவன் தலைமையில் தன் காதலியை வேறொருவனுக்குத் திருமணம் செய்து வைக்கின்றான். காலம் நகர, சுந்தரம் தன் மனைவியை மறந்தும் , ராதா தன் கணவனை மறந்தும் தவறான பாலியலுக்கு உட்படுகிறார்கள். இறுதியில் மனமுடைந்த ராதா சுந்தரத்தின் மூலம் குழந்தை பெற்றதை நினைத்து வருந்தியே இறந்து விடுகிறாள்.

> "சில பேருடைய வாழ்க்கையைப் பார்க்கிறப்போ,
> செலுத்துகிட்டே வாழறதை விட, வாழ்ந்திட்டுச்
> செத்துடறது தேவலைனு தோணுது"[72]

என்று ஆசிரியர் கதையை முடிக்கிறார். இத்தகு உறவுகள் தவறானது என்பதையும் சுட்டுகின்றார்.

'மண்ணின் மலர்கள்' புதினக் கதையில் தவறு செய்த மனைவியை மன்னித்து ஏற்றுக்கொண்டு அங்கீகரித்து வாழும் சிறந்த கருத்தைச் சுட்டி, சிதைந்து போன குடும்ப உறவைச் சீராக்குகின்றார்.

சேகர் என்பவரைத் திருமணம் செய்து கொண்ட சுகந்தா, திருமணத்திற்குப் பின்னர் சந்திரன் என்பவனோடு தவறான பாலியலில் ஈடுபட; கணவன் பார்த்துவிடுகிறான். அவள் தவறை உணர்ந்து கண்காணாத இடத்திற்குச் சென்று விடுகிறாள்.

> "பல பொருளாதார அவசியங்களாலே பெண்களும் ஆபிஸ்களில் ஆண்களோடு சேர்ந்து வேலை பார்க்க வேண்டியிருக்கு, இன்னிக்குப் பல பொது இடங்களிலும் ஆண்களும் பெண்களும் பேசிப் பழகி ஒன்றாக நடமாட வேண்டியிருக்கு. அப்போ ஒருத்தருடைய அழகிலோ, குணத்திலோ மணம் ஈடுபட்டு அல்லது சூழ்நிலையால் உணர்ச்சியால் தூண்டப்பட்டு ஒருத்தரையொருத்தர் காதலிக்கிறாங்க. அவர்களில் சில பேர் தான் கல்யாணம் செய்து கொள்ள முடிகிறது. பலர் காதலில் தோல்வியடைந்து இன்னொருத்தரை மணந்து வாழ்கிறாங்க. இவர்களெல்லாம் கற்பிழந்தவங்கன்னு சொல்லிட முடியுமா? ஏன் நீ கூட நம்ம ஆபிசிலே வேலை பார்த்த ஊர்வசதி மேலே எவ்வளவோ ஆசைப்பட்டு தான் காதலிச்சே! ஆனா அந்தக் காதல் நிறைவேறலே."[73]

என்று தன் நண்பன் கூறும் தகவல்களை உணர்ந்து கொண்டும், தன் நண்பன் பலரால் கற்பழிக்கப்பட்ட பெண்ணை மணம் செய்து கொண்டு வாழ்வதையும் கண்ட சுந்தரம் தன் மனைவியோடு இணைந்து நல்வாழ்வு வாழச் செல்கிறான் என்பதாகக் கதை அமைந்துள்ளது. பெண் என்பது உடம்பு மட்டுமே அல்ல என்பதையும் உணர்த்துகின்றார்.

மேற்கூறியது போன்று கணவன் மனைவி இடையே புறத்தே நிகழ்கின்ற பல்வேறு பிரச்சினைகளை வெளிப்படுத்தியும், அகத்தில் நிகழ்வின்ற முரண்களால் புறச்சூழலில் குடும்பம் அழிந்து விடுகிறது

என்பதையும் இன்றையச் சூழலுக்கு ஏற்றவாறு வாழ்க்கையை மாற்றி அமைத்துக்கொண்டு வாழ வேண்டிய அவசியத்தையும் எடுத்துரைக்கிறார்.

## பெற்றோர்களின் கடமை, பாச உணர்ச்சிகள்

குடும்பம் நிலைபெறுவதற்குப் பெற்றோர்களின் சரியான போக்குகளும் இன்மையாதது என்பதை ஆசிரியர் அய்க்கண் வலியுறுத்துகின்றார்.கல்வியே சிறந்த செல்வம் எனப் பல அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். இத்தகைய கல்வியை ஆசிரியர் போதித்தால் போதாது. பெற்றோர்களும் தங்கள் கடமையைச் செய்ய வேண்டும் என்ற கோட்பாட்டோடு, நின்று மகனின் படிப்பிற்கு ஏற்ப நடந்து கொள்கின்ற தந்தையை,

> “தன் மகன் சேது, பரீட்சைக்குப் படிக்கும் போது தாய்க்குத் தாயாகவும், தந்தைக்குத் தந்தையாகவும் இருந்து அவனுக்கு உற்சாகமூட்டி படிக்க வைத்தான்.
>
> படிக்கிற பையனுக்குச் சத்தான உணவு கொடுக்க வேண்டும் என்பதற்காக, அதிகப்படியாகவே தன் உடலை வருத்தி வேலை செய்து சம்பாதித்து, சேதுராமனுக்கு பால், ஹார்லிக்ஸ் எல்லாம் அடிக்கடி வாங்கிக் கொடுத்தான் கந்சாமி,
>
> அது மட்டுமா? இரவிலே அவன் படிக்கும் போது, கந்தசாமியும் பக்கத்திலேயே உட்கார்ந்து மகன் படிக்கும் அழகை ரசித்துக் கொண்டிருப்பான்”[74]

மேற்கூறிய செயல்கள் எல்லாம் பெற்றோர்களின் கடமையாகவே இருக்க வேண்டும் என்பதனை ‘அய்க்கண்’ பாத்திரத்தின் மூலம் அறிவுறுத்துகின்றார்.

காதலால் தந்தையை விட்டுப் பிரிந்து செல்கிறாள் மகள். அதனை நினைத்துத் தனிமையில் தவித்த தந்தை,

> “சுபா – ஒரு வேண்டுகோள் – உன் பிறந்த நாள் விழாவுக்குத்தான் நீ வர மறுத்துட்டே; வழக்கம் போல் உன் பிறந்த நாளுக்கு நான் பரிசு கொடுக்க அசைபடறேன்... அந்தப் பரிசை உனக்கு அனுப்பி வைக்கிறேன். அதையாவது மறுக்காம வாங்கிக்கனும், அம்மா!.... ப்ளீஸ்.... மறுத்துடாதேம்மா!... என்று கண்களில் நீர் கசியக் கெஞ்சிச் சொல்லிவிட்டு காரில் ஏறிச் செல்கிறார் விசுவநாதன்.
>
> தந்தையைப் பார்த்தபடி நிற்கும் மகளின் பூக்கன்னங்களைக் கண்ணீர்த்துளிகள் நனைக்கின்றன”[75]

இதில் தந்தை, மகளின் பாச உணர்ச்சிகளைத் தெளிவுற அய்க்கண் அமைத்துள்ளார்.

## பிள்ளைகளின் பாசம்

உயிர் புதினத்தில் பிள்ளை, தம் மீது கொண்டிருந்த பாச உணர்ச்சிகளை நன்கு விவரிக்கிறார். குடும்பத்தை விட்டுத் திருமணம் செய்து கொள்ள வா எனக் காதலன் அழைக்க அதனை மறுத்துப் பாச உணர்வால்,

> “என் ஒருத்தி மகிழ்ச்சிக்காக, என் தாயையும் மற்றவர்களையும் வருத்தப்பட வைக்க நான் விரும்பவில்லை. டாக்டர் என் தாய்க்கு நான் தான்

> மகள், மகன் சொத்து சுகம் எல்லாம் என்று அமைதியாக கூறினாள் மீனா, மீனாவின் தியாக உணர்வைக் கண்டு நெக்குருகினான் முரளி"[76]

காதலை விடவும் பாச உணர்ச்சிகள் பல நேரங்களில் சிறப்புடையதாகவே அமைகின்றன. என்பதையும் ஆசிரியர் உணர்த்தத் தவறவில்லை.

குடும்பம், குடும்பம் சார்ந்த சுற்றுப்புற நிகழ்வுகள் அனைத்தும் குறிப்பிடுகின்ற ஆசிரியர் குடும்பத்தை முன்னிறுத்தியும், பாசப் பிணைப்புகளை வெளிப்படுத்தியும் பல்வேறு கதைகளைச் சமூகத்திற்குத் தந்துள்ளார்.

## சாதியமும் தீர்வும்

இந்தியச் சமூகத்தில் சாதியானது தனித்தப் போக்குடையதாகக் காணப்படுகின்றது. தொழில் அடிப்படையில் ஏற்பட்ட சாதி நாளடைவில் மேல்நிலைச் சாதி, கீழ்நிலைச் சாதி எனப் பிரிந்தது.அதனைக் கண்டே 'சாதிகள் இல்லையடி பாப்பா'[77]

என்று தனது எழுத்தின் மூலம் தகர்த்தெறிந்தார்.

இத்தகைய சாதி சார்ந்தக் கருத்துக்கள் சமூகத்தில் நிலவுகின்ற நிலைமையினையும், அதனைக் களைவதற்கு உரிய வழிமுறைகளையும் 'அய்க்கண்' தமது புதினம் மூலமாக உணர்த்துகின்றார். குறிப்பாகக் காதலில் 'சாதியப் போக்கு' தலை விரித்தாடுகின்றது. இதனை 'இரண்டாவது ஆகஸ்டு 15' புதினத்தில்,

> "மகன் சமர்பித்த விண்ணப்பத்தில் பெண்ணின் ஜாதி வேறாக இருப்பதைக் கேட்டதும், முருகேசனும் ஜானகியும் திடுக்கிட்டுப் போய்விட்டார்கள்.

> ‘என்னடா கார்த்திக்’ ஜாதி விட்டுக் கல்யாணம் செய்துகிட்டா நம்ம குடும்பத்தின் கௌரவம் என்ன ஆகிறது...”[78]

என்று குடும்பத்தில் உள்ளோர் சாதிப் பிடிப்பை உள்வாங்கிக் கொண்டு நிற்பதையும் காட்டுகின்றார்,

> “பாட்டி! இந்த காலத்திலே ஜாதி வித்தியாசம் எல்லாம் யார் பார்க்கிறாங்க? எல்லா ஜாதியும் ஒண்ணுதான், உயர்ந்த ஜாதி, தாழ்ந்த ஜாதி என்கிறதெல்லாம் இல்லைன்னு தான் எல்லாப் பெரியவங்களும் சொல்றாங்க”[79]

என்று சாதியத்தினை மறுத்துப் பேசும் பேச்சும்,

> “சுமார் ஐம்பது வருஷங்களுக்கு முன்பு தமிழ்நாட்டிலே ஒரு வட்டாரத்திலே, உங்க மாதிரியே இன்னொரு சாதிக்காரங்களைத் தீண்டத்தகாதவங்க, தாழ்த்தப்பட்டவங்கனு சொல்லி, மற்ற சாதிக்காரங்க ஒதுக்கி வச்சிருந்தாங்க. அந்த ஒதுக்கப்பட்ட சாதிக்காரங்களை, பொது இடத்தில் தண்ணீர் எடுக்கவிட மாட்டாங்க. பொதுக்கோயிலிலே, சாமி கும்பிடவிடமாட்டாங்க; இதனாலே, இந்த சாதிக்காரங்களுக்கும் மத்த மேல்சாதிக்காரங்களுக்கும் அடிக்கடி சண்டை, தகராறு, குத்துவெட்டு, கொலை, கோர்ட், ஜெயில்னு ரெண்டு பக்கமும், கஷ்டம் நஷ்டம்... கடைசியிலே அந்த ஒதுக்கப்பட்ட சாதிக்காரங்க, ஒண்ணாய் கூடி ஒரு தீர்மானம் பண்ணிணாங்க – இனிமே நாமே சொந்தமாகக் கிணறு தோண்டித் தண்ணீர் எடுத்துக்குவோமே ஒழிய, பொதுக்கிணத்துக்கும் போகமாட்டோம், நாமே – சொந்தமாக் கோயில் கட்டிச் சாமி கும்பிடுவோமே தவிர, பொதுக் கோயிலுக்குப்

போய் சாமி கும்பிடமாட்டோம்... இப்படி அய்ம்பது வருஷங்களுக்குள்ளே முன்னேறின சாதி யார்னு உங்களுக்கே தெரியும்..."[80]

என்று கோயிலுக்குக் கூடச் செல்லத்தகுதியற்ற சமூகமாய் இருந்த ஒரு குறிப்பிட்ட சாதி மக்கள் தங்கள் முயற்சியில் இன்று வளர்ச்சி பெற்ற சாதியாய், எல்லோரும் மதிக்கின்றவர்களாய் சூழல் வரலாற்றில் நடந்திருக்கின்றது. அதே போலப் பிற சாதிகளும் வளர்ச்சி பெற்று நல்வாழ்க்கை வாழ வேண்டும் எனக் கதாபாத்திரங்களின் வழியாக எடுத்துரைக்கின்றார்.

## ஏழை, பணக்காரன் முரண்பாடு

சமூக முரண்பாடுகளில் முதன்மையானது ஏழை, பணக்காரப் பாகுபாடு. இத்தகைய பாகுபாடு ஒரு சிலரிடம் பணம் குவிய, பலர் ஏழையாக இருக்க, இருவேறு மனிதர்களாய் அவர்கள் சமூகத்தில் மாறுபட்டு நிற்கின்றனர்.

சமூகத்தில் அகம் சார்ந்த காதல் வாழ்வில் சாதியைப் போலவே வர்க்க வேறுபாடும் அதிகளவில் சமூகத்தில் நிலவுகின்றது. இதனை அய்க்கண் தெளிவுபடக் கதையின் வாயிலாகச் சுட்டிக் காட்டுகின்றார். குறிப்பாக ஏழையாக இருந்தாலும் பண்பு, பாசத்தின் அடிப்படையில் தலைசிறந்தவனாகவே உள்ளனர் என்பதனை விளக்குகின்றார்.

ஏழையொருவன் பணக்காரப் பெண்ணைத் திருமணம் செய்து கொண்டு பல்வேறு எதிர்ப்புகளுக்கிடையில் சிரமப்பட்டு உழைத்து முன்னுக்கு வருவதை, 'மறுபக்கம்' புதினத்தின் வழியே சுட்டுகின்றார்.

ஏழையைக் காதலித்த பணக்காரப் பெண்ணிடம் அவர் தந்தை,

"நான் எவ்வளவோ யோசிச்சுப் பார்த்துட்டேன் ஒரு கூலித் தொழிலாளியை என் மாப்பிள்ளைன்னு

சொல்றதுக்கு எனக்கு வெட்கமாயிருக்கு”[81]

என்று பேசும் பேச்சு வர்க்க பேத நிலையைத் தெளிவுபட விளக்குகின்றது.

மேலும் ஏழை மருமகன் ஒருவன், தன்மான நிலையில் நின்று,

> “இந்த மாதிரி பங்களாவில், இந்த மாதிரி வசதிகளோடு நானும் சுபாவும் வாழும் அளவுக்கு முன்னேறாத வரையிலும் நீங்கள் என் மாமனார் என்று சொல்லிக்கொண்டு எனக்கு உயர்வு உண்டாக்கிக் கொள்ளவோ மாட்டேன்...”[82]

என்ற வர்க்க பேதங்கள் பண்புடைய ஏழை, மாமனாரோடு முரண்பட்டு நிற்கின்ற நிலைகளையும் ஆசிரியர் உணர்த்துகின்றார். மேலும்,

> ‘‘உலகத்திலே பல பணக்காரர்கள் ஏழையாகி இன்ஸால்வென்ட் ஆனதும், பல ஏழைகள் முயற்சியால் செல்வம் திரட்டிப் பணக்காரர்களானதும் இல்லையா?... எண்ணற்ற கோடீஸ்வரர்களும் தொழிலதிபர்களும் ஏழைக் குடும்பத்திலே பிறந்து உழைத்து முயற்சியால் முன்னேறி உயர்ந்தார்களே, அவர்களைப் பற்றியெல்லாம் எதிர்க்கட்சி அன்பர் படிக்கவில்லையா? விதியை எதிர்த்து போராடி வெற்றிகண்ட மார்க்கண்டேயன், சாவித்திரி முதலானவர்களின் சரித்திரங்களை இவர் படித்ததில்லையா?”[83]

என்று ஏழையின் மாண்புகளையும், தகுதிச் சிறப்பையும் மேற்கூறிய வாயிலாக கருத்தின் அய்க்கண் உலகிற்கு உணர்த்துகின்றார்.

தீர்க்க சுமங்கலி புதினத்தில்,

> “ஓர் ஏழைக்கு அவமானம். அவ மற்றவங்க முன்னாலே ஏழையாக வாழறது துயரம் இல்லே. அவ ஏழைனு

மற்றவங்க அவள்கிட்டே காட்டுற அனுதாபம் தான் எனக்குப் பிடிக்கல என்னாலே உழைத்து வாழ முடியும்கிற நம்பிக்கை இருக்கிற வரையில் தயவு செய்து யாரும் என்கிட்டே அனுதாபம் காட்ட வேண்டாம்"[84]

என்ற கருத்தில் ஏழையின் தனித்துவத் தகுதியையும், மற்றவர்களால் ஏழையாகப் பார்க்கப்படுகின்ற நிலையைத் தவிர்த்தலுமாய் ஏழையின் மதிப்பை உயர்த்திக் காட்டுகின்றார் அய்க்கண்.

## அரசியல்

பண்டையக் காலத்தில் புலவர்களிடமும், மக்களிடமும் அறிவுரையைக் கேட்டு அரசர்கள் நாட்டைப் பாதுகாத்தனர். மேலும் பல அமைச்சர் குழுக்களையும், இன்ன பிற குழுக்களையும் உருவாக்கி மக்களுக்கு நற்தொண்டு புரிந்தனர்.

மன்னன் எந்தத் தவறைச் செய்தாலும் அதைச் சுட்டிக்காட்டினர். மழை பெய்யாமல் உலகம் வறட்சியில் இருந்த காலத்தில்

"நளிஇரு முந்நீர் ஏணியாக
வளிஇடை வழங்கா வானம் சூடிய
மண்திணி கிடக்கைத் தனிதமிழ்க் கிழவர்
முரசு முழுங்குதானை மூவர் உள்ளும்...
மாரிபொய்ப்பினும் வாரிகுன்றினும்
இயற்கை இல்லன செயற்கையில் தோன்றினும்
காவலர் பழகிக்கும் இக்கண்ணகன் ஹாலம்
அதுநற்கு அறிந்தனை யாயின் நீயும்
நொதுமலாளர் பொதுமொழி கொள்ளாது
பகடுபுறந்தருநர் பாரம் ஓம்பிக்
குடிபுறம் தருகுவை யாயின்நின்

அடிபுறநச் தருகுவர் அடங்கா தோரே"[85]

என்று மன்னருக்கு மேற்கூறியது போன்று பல்வேறு பாடல்கள் அறிவுறுத்துகின்றன.

இன்றைய அரசியல் சூழல் அதற்கு எதிரானது. தலைவன் எவ்வழி செல்கிறானோ அங்குச் செல்வது தலைவனின் திட்டம் அழிவாயினும் அதுவே சரி என்று ஏற்றுக்கொள்கிற ஆட்டுமந்தைக் கூட்டம் போல பலர் செல்வதைக் காண முடிகிறது.

இன்றைய அரசியல் முழு சுரண்டல் வடிவ அரசியலாய் மாறி நிற்கிறது. அரசியலால் சாதாரண வேலை வாய்ப்பிலும் சிக்கல்கள் தோன்றியிருக்கின்றன.

> "குட்மார்னிங்... உன் அப்ளிகேஷனைப் பார்த்தேன்... உன்னையே இந்த போஸ்டுக்கு அப்பாயிண்ட் பண்ணலாம்னு நினைக்கிறேன். மாதம் நாநூறு ரூபாய் சம்பளம். போனஸ் உண்டு... பொறுப்பான வேலை. அதனாலே எங்களுக்கு நன்னடத்தையைப் பற்றி ஒரு ரெஃபரென்ஸ் வேண்டும்... நீ மிஸ்டர் மணிசுந்தரத்திடம் ஒரு காண்டக்ட் ஸெர்ட்டிஃபிகேட் வாங்கிக் கொடுத்திடு...
>
> "எக்ஸ்க்யூஸ் மி, ஸார்!.... அந்த காண்டக்ட் ஸெர்ட்டிஃபிகேட் வாங்கிக் கொடுக்கலைன்னா, எனக்கு நீங்கள் வேலை கொடுக்க மாட்டீங்க, இல்லையா?"
>
> "எஸ்"
>
> "அப்போ, உங்களுக்கு வேண்டியது, காண்டக்ட் ஸெர்ட்டிஃபிகேட் இல்லே; மணிசுந்தரம் ஸெர்ட்டிஃபிகேட்"[86]

என்று வேலைக்குச் சென்ற இளைஞனிடம் பொருந்தாத ஒரு தனிநபரிடம் நன்னடத்தைச் சான்றிதழ் வாங்கச் சொல்கின்ற துயரமான சூழல் காணப்படுவதை வெளிப்படுத்துகின்றார்.

அரசியல் கட்சிகளின் பற்றிய செயல்பாடுகளை நன்குணர்ந்த அய்க்கண் 'இரண்டாவது ஆகஸ்ட 15' என்ற புதினத்தில் ஓர் அரசு அதிகாரியைச் சிறந்த அரசியல்வாதியாக்கி சமூகத்திற்குத் தொண்டாற்ற விழைகின்றார்.

> "இறுதியாக இன்னொரு கனவு; ஒரு நேர்மையான ஏழைச் சமுதாயத் தொண்டர், தேர்தலில் போட்டியிட்டு எம்.எல்.ஏ. ஆவதாகக் காட்டியிருக்கிறேன். இதை நீங்கள் நம்ப மாட்டீர்கள் தான். ஆனாலும் நம் முடியரசுத் தலைவர் அப்துல்கலாம் அவர்களின் '2020ஆம் ஆண்டு இந்தியக் கனவு' போல என் கனவையும் நீங்கள் ஏற்றுக்கொள்வீர்கள் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது"[87]

என்று தன்னுடைய கனவாக புதிய அரசியல்வாதியை உலகிற்கு எடுத்துக்காட்டுகிறார்,

கலைமாமணி விக்கிரமன், தமது பதிப்புரையில்,

> "இந்த நாட்டின் உயிர் கிராமங்களில் இருக்கின்றன. கிராமங்களுக்கு வலுவூட்டுபவர்கள் கிராம மக்கள் அவர்கள் நலன் பாதுகாக்கப்பட வேண்டும். அதற்காக மௌனப் போர் – புரட்சி ஒன்று ஏற்பட வேண்டும் என்ற கொள்கையை இந்த புதினத்தில் புகுத்தியதால் இந்த நாவல் பரிசு பெற்றது."[88]

என்று குறிப்பிடுகின்றார்.

> "ஏன் அளகு, நம்ம ஊர் ஆளுங்க, சங்கம் வச்சு ஒத்துமையாய் இருப்பாங்களா? இம்முன்னா,

கம்பையும் அரிவாளையும் தூக்குறவங்களாச்சே?" என்று மெல்ல, சந்தேகத்தை எழுப்பினாள் சின்னாயி,

"ஒற்றுமையாயிருந்தால் தான் நல்லதுனு புரிஞ்சுகிட்டா, ஒற்றுமையாய் வாழறது கஷ்டமில்லை" என்றான் அழகப்பன்.

"ஒற்றுமையாய் இருக்கிறதும், இல்லாததும் தலைமையிலே இருக்கிறவர்களைப் பொறுத்துதான் ஆத்தா!... தலைவர் பொறுப்புக்கு வருகிறவங்க தனிப்பட்ட முறையில் பணம் சம்பாதிக்க நினைத்து ஊழல் செய்கிறதனாலே தான் எல்லோரும் கெட்டுப் போயிடறாங்க. ஆனால் நம் ஊர் சங்கத்துக்குத்தான், தன்னலமே இல்லாத அருமையான தலைவர் கிடைச்சிருக்காரே!"[89]

என்று தன்னலமற்ற அழகப்பனை எடுத்துரைக்கின்றார்.

மக்களுக்குக் கிடைக்கக் கூடிய அனைத்து அரசுக்கடன் தொகையையும் வாங்கிச் சுய வேலை வாய்ப்பை நிறுவுதல், பெண்களுக்கான தனிச் சுய உதவிக்குழுக்கள் போன்ற பொருளாதாரச் சூழலை மேம்படுத்துதல், கருத்துக்களை முன்வைக்கின்றார்.

"உங்களுக்கு அந்த நாலாயிரம் ரூபாய் கிடைக்கிறதிலாவது ஒரு நியாயம் இருக்கு, அதிகாரிகளுக்கு அந்த ஆறாயிரம் ரூபாய் கிடைக்கிறதிலே என்ன நியாயம் இருக்கு? உங்களுக்குக் கடன் கொடுக்கிறதுதான், அவங்களுக்கு அரசாங்கம் சம்பளம் கொடுக்குது, மேற்கொண்டு, நீங்க அவங்களுக்குப் பணத்தைக் கொடுத்திட்டு ஏமாந்து நிக்கிறீங்க. உங்க ஏமாளித்தனத்தாலே, அதிகாரிகள் கொழுத்த

பணக்காரராயிடறாங்க. நீங்க ஏழையாகவே தேய்ஞ்சுப் போய்க்கிட்டிருக்கீங்க!"[90]

என்று ஏமாற்றும் அதிகாரிகளைப் பற்றி பேசியும், அதற்குத் தீர்வாக,

"நீங்கள் உங்களுக்குள்ளே ஒரு கூட்டுறவு சங்கம் ஏற்படுத்தி அதைப் பதிவு செய்து கொள்ளுங்கள். தனிப்பட்ட முறையில் கடன்களுக்கு விண்ணப்பிக்காமல் இந்த கூட்டுறவு சங்கத்தின் மூலம் அரசாங்கத்தின் கடன்களுக்கு விண்ணப்பம் செய்யுங்கள்"[91]

என்று கருத்துக்களை எடுத்துணர்த்தியும், பெண்களுக்கான தனி சுய உதவிக் குழுக்களை நிறுவி,

"சேமிப்பு பழக்கம் தான், இந்த திட்டத்திற்கே அடிப்படை. மாதம் அய்ம்பது ரூபாய் என்றால் தினசரி இரண்டு ரூபாய்க்குள்தானே? தினந்தோறும் உங்கள் இரண்டு ரூபாய் குறைத்துக் கொள்ள முடியாதா? நீங்க தினசரி வேலை செய்து வாங்கிற கூலி, பால் வியாபாரத்தில் கிடைக்கிற வருமானம், தோட்டத்தில் காய்கறி, பழங்கள் விற்கிற பணம் வீண் செலவுகளில் போகும் பணம் இதையெல்லாம் சிக்கனப்படுத்தித் தான் சேமிக்க வேண்டும்"[92]

என்று அறிவுறுத்தி கிராமம் மேம்பட வழி மேற்கொள்கின்றார்.

இறுதியில், சட்டமன்ற உறுப்பினர் (எம்.எல்.ஏ.) வேட்பாளராய் நின்று வெற்றி பெறுகின்றார்.

"சுயேட்சை வேட்பாளர் அழகப்பன் பெருவாரியான வாக்குகள் வித்யாசத்தில் அமோக வெற்றி பெற்றதாக அறிவிக்கப்பட்டது. கோவிந்தனின் டெபாசிட், 'கோவிந்தா' ஆகி விட்டது.

"பார்த்தீங்களா, தம்பி! எலக்சனிலே நிக்கறதுக்கு ரொம்பத் தயங்கினீங்களே, இப்போ பாருங்க மக்களுக்கு எவ்வளவு விழிப்புணர்ச்சி உண்டாகியிருக்கு?" என்று பாராட்டினார் கருப்பையா அம்பலக்காரர்"[93]

அரசியல் சாக்கடையாயினும் சரியான தலைமகன் வருகின்ற பொழுது அவர்களை மக்கள் அங்கீகரிக்கவே செய்வர் என்றும், மேற்கூறியதன் வாயிலாக அரசியல் தவறுகள் பல நிகழ்ந்து கொண்டிருப்பதையும், உண்மையான நேர்மையான சக்திகள் இவ்வுலகிற்கு வர வேண்டும் என்று 'இரண்டாது ஆகஸ்டு 15' புதினத்தில் வழியே வலியுணர்த்துகின்றார்.

## நாட்டுச் சூழலும், நாட்டுப்பற்றும்

விவசாயம் சார்ந்த நம் நாட்டில் தொழில்நுட்பப் புரட்சிகளால் எவ்வளவோ வளர்ச்சிப் பெற்ற தாயகமாய் நம் இந்தியா காணப்படுகின்றது. இத்தகைய இந்தியாவில் கல்வி கற்றுப் பொருள் சம்பாதிக்கும் நோக்கோடு பலர் வெளியூர், வெளிநாட்டிற்குச் சென்று மதிப்பினைப் பெற்றுத் தருகிறார்களே ஒழிய தாய்நாட்டைக் கண்டு கொள்வதேயில்லை. இதனை 'அய்க்கண்' வன்மையாகக் கண்டிக்கிறார்.

தாய்நாட்டுப் பற்றுக்கொண்ட இளைஞனைப் புதினம் வழியாக,

"அமெரிக்காவில் எத்தனையோ கம்பெனிகள் அவரை வேலையில் சேர்த்துக்கொள்ளத் தயாராயிருக்கிறார்கள். ஆனால் அவர்தான் அமெரிக்காவுக்கு போக மாட்டேங்கிறார். நான் கூட அமெரிக்கா போனா உங்களுக்கு அகில உலகப்புகழ் கிடைக்கும்னு சொன்னேன். அவர் மாட்டேனுட்டார்... இங்கே

இருந்துகிட்டே, நான் அகில உலகப் புகழ் பெற முடியும் ஸார்னு சொல்லிட்டார். அது மட்டுமில்ல என்னை அரிச்சுவடியிலிருந்து படிக்க வச்சது இந்த அரசாங்கம். இத்தனைப் படிப்பும் இந்த அரசாங்கப் பணத்திலே படிச்சிட்டு, இன்னிக்கு பணத்துக்காகவும் புகழுக்காகவும், இந்த மண்ணை விட்டுட்டு போறது நியாயமாகப் படலே என் படிப்பும் திறமையும் இந்த மண்ணுக்குத் தான் சொந்தமாகனும்னு சொன்னார்"[94]

என்று தாய்நாட்டின் மீது பற்று கொண்ட சிறந்த மனிதநேயம் கொண்டவரை மேற்கூறிய கருத்தின் மூலம் எடுத்துரைக்கின்றார்.

## நாட்டுப்பற்று

நாட்டைப் பாதுகாக்கும் அரசின் சிறந்த பாதுகாவலாக அமைவது ராணுவமே. இந்த ராணுவத்தில் சேர்ந்து தன் குடும்பம், உறவுகள் என அனைத்தையும் விட்டு இரத்தம் சிந்தும் சிறந்த ராணுவ வீரர்களைப் பற்றியும், அவர்களின் தியாக உணர்வுகளையும் அய்க்கண் மிக நுணுக்கமாக ஆராய்ந்து 'மாபெரும் நாடு மாபெரும் மக்கள்' என்ற குறும்புதினத்தின் மூலம் வெளிப்படுத்துகின்றார்.

இப்புதினத்தில் 1965ஆம் ஆண்டு ஏற்பட்ட இந்திய–பாகிஸ்தான் போரினை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டிருக்கின்றது. இந்திய வீரரான சரவணனுக்குத் திருமணம் நாளை நடைபெறும் நிலையில்,

"யுத்த நிலைமை – விடுமுறை ரத்து – பத்துமணி நேரத்திற்குள் புறப்படவும்"[95]

என்று கடிதம் வர புறப்படத் தயாராகிறான்.

"ஏற்பாடுகளும் நடந்து முடிந்த நிலையில் கல்யாணத்தைத் தள்ளிப்போடுவதை விட, இன்றே நடத்திவிட்டால் என்ன? இன்றைக்கும் நல்ல

நாள்தானாம். கல்யாணம் முடிந்ததும் இருவரும் உடனே புறப்படுவோம். என்ன சொல்கிறாய்? என்றான் சுப்பிரமணியன்.

சரவணன் சிரித்தான்.

"சுப்பு! உன் தங்கையின் கல்யாணத்தை எப்படியும் முடித்து விட வேண்டுமென்ற ஆத்திரம், அவசரம் உனக்கு. ஆத்திரக்காரனுக்கு புத்தி மட்டு என்பார்கள். இந்நேரம் காஷ்மீரில் யுத்தம் மூண்டிருக்கும். அங்கே நம் தோழர்கள், துப்பாக்கி ஏந்திப் போரிட்டுக் கொண்டிருக்கும்போது, இங்கே என்னை மணமாலை ஏந்திக் கல்யாணம் செய்து கொள்ளச் சொல்கிறாயா? அது மட்டுமல்ல – நாம் இன்று புறப்படுவது, சந்தைக்கோ, திருவிழாவுக்கோ அல்ல – உயிர்களை மிகமிகக் குறைவாக மதிப்பிடும் இடமான போர்க்களத்திற்குப் போகிறோம்"[96]

என்று தாய்நாடு மீது கொண்ட பற்றால், திருமணத்தைக் கூட தள்ளி வைத்துவிட்டு உடனடியாகப் புறப்படுகின்ற நாட்டுப் பற்றுடையோரையும், அவர்களின் தியாகத்தையும் இப்புதினத்தில் எடுத்துக்காட்டுகின்றார்.

மேலும்,

"சரவணனைப் போல் திருமணத்திற்கு முன்பு புறப்பட்டுப் போர்க்களத்திற்கு வந்தவர்கள், திருமணம் முடிந்தவுடனே மணமாலையைக் கழற்றக்கூட நேரமில்லாமல் போரிட வந்தவர்கள், அன்பு மனைவி சுமந்து கொண்டிருக்கிற தன்னுடைய இரத்தத்தின் ரத்தத்தை, உயிரின் உயிரை, கண்ணால் பார்க்காமலேயே இங்கு ரத்தம் சிந்தி உயிர்த்தியாகம் செய்ய வந்தவர்கள் – இப்படி எத்தனையோ தியாகச் செம்மல்களின் வீரத்தால் உயர்ந்த நாடு நம் நாடு"[97]

என்று நாட்டின் மீது கொண்ட பற்றால் எல்லையைப் பாதுகாக்கத் தன் உயிரை இழக்கும் பல்வேறு சக்திகளை, நாட்டுப் பற்றாளர்களை உலகிற்கு எடுத்துக்காட்டுகிறார்.

## தொகுப்புரை

சமுகமானது அனைத்து உறவுகளோடும் பிணைந்த தன்மையை உடையது. மக்களின் கூட்டுறவு வாழ்வின் முறையிலாகவும் சமூகம் காணப்படுகின்றன.

இச்சமூகத்தில் மனிதனின் வளர்ச்சிக்குப் பல்வேறுவிதமான செயல்பாடுகள், பல்வேறு வகைகளில் உருவாகியுள்ளன. அவற்றுள் 'இலக்கியங்கள்' சிறப்பிடம் பெறுகின்றன. அவ்விலக்கியங்கள் காலம் தோறும் மாறுகின்றன. அவற்றுள் நவீன இலக்கியங்களில் தனித்துவம் பெற்றதாய் 'புதினங்கள்' காணப்படுகின்றன.

இப்புதினங்கள் கற்பனையின்றி மனித உறவுகளின் அகம் சார்ந்த கருத்துக்களையும், புறச் சூழல் நிகழ்வுகளையும் யதார்த்தமாக உணர்த்துகின்றன. காதல், கற்பு, பரத்தை ஆகிய நிலைப்பாடுகளையும், சிக்கல்களையும் ஒருபுறம் எடுத்தியம்புகின்றன.

புற வாழ்வில் நிகழக்கூடிய குடும்பம், திருமணம், கணவன் மனைவி உறவுகள், சாதியம், வர்க்க முரண்பாடு எனப் பல்வேறு நிலைகளை எடுத்தோதி அதற்குத் தீர்வுகளும் தந்து ஆசிரியர் 'அய்க்கண்' தமது புதினங்களின் வழி சமூக நிலைப்பாடுகளையும், சமூக அவலங்களையும் எடுத்துரைத்து, சமூக வளர்ச்சிக்கான எதிர்காலத் திட்டங்களையும் திறம்பட வெளிப்படுத்தியுள்ளார்.

## சான்றெண் விளக்கம்

1. A.Chidambaram Chettiar, English Tamil Dictionary, p.961.

2. ஜெ.நாராயணன், சமூகவியலின அடிப்படைக் கோட்பாடுகள், ப.20.

3. நா.பாலுச்சாமி, வாழ்வியற் களஞ்சியம், ப..30

4. The Great Lifco Dictionary English Tamil, p.960.

5. க.சக்திவேல், நாட்டுப்புறவியல், ப.245.

6. மு.வரதராசனார், தமிழ் இலக்கிய வரலாறு, ப.12.

7. சி.சு.மறைமலை, இலக்கியத் திறனாய்வு ஓர் அறிமுகம், ப.57.

8. கா.சுப்பிரமணியன், சங்ககாலச் சமுதாயம், ப.6.

9. நா.பாலுச்சாமி, வாழ்வியற்களஞ்சியம், ப.590.

10. டொமினிக் ஜீவா, அனுபவ முத்திரைகள், ப.17.

11. அகிலன், எழுத்தும் வாழ்க்கையில் கதைக்கலைப்பணி, ப.9.

12. க.த.திருநாவுக்கரசு, படைப்பிலக்கியம், ப.37

13. E.M.Forester, A. Speds of the Novels, pp.20-27

14. இரா.தண்டாயுதம், சமூக நாவல்கள், பக்.20–27.

15. Promila Kapur, Love Marriage and Sex, p.82.

16.எஸ்.ஜே.பாஸ்கல், கில்பர்ட், சமுதாய அடிப்படைக் கோட்பாடுகள், ப.281.

17. வாழ்வியல் களஞ்சியம் (தொகுதி–8), பக். 589–590,

18. வாழ்வியல் களஞ்சியம் (தொகுதி–8), ப. 590,

19. தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம், தொகுதி–1. ப. 917,

20. Aspects of the Novel. P.75,

21. இலக்கியக் கலை, ப.78.

22. பிரபஞ்சனின் புதினக் கலை, ப. 62,

23. இலக்கியக் கலை, ப.347

24. தமிழ் இலக்கிய வரலாறு, ப. 347

25. சமூக நாவல்கள், பக். 26–27,

26. தற்காலத் தமிழ் இலக்கியம், ப. 30,

27. மலரும் முள்ளும், ப.195,

28. குறுந்தொகை, பா.எண். 3,

29. குறுந்தொகை, பா.எண். 40,

30. பாரதிதாசன் கவிதைகள், தொகுதி–1. ப.50,

31. பாரதியாரின் குயில்பாட்டு, கண்ணி–54,

32. அய்க்கண், நிழலில் நிற்கும் நிஜங்கள், ப.91.

33. அய்க்கண், உயிர், ப.138.

34. அய்க்கண், வெள்ளைத் தாமரை, ப. 172.

35. அய்க்கண், தீர்க்க சுமங்கலி, ப. 117.

36. அய்க்கண், கரையை தேடும் அலைகள், ப. 132.

37. அய்க்கண், நிழலில் நிற்கும் நிஜங்கள், ப.144.

38. அய்க்கண், வெள்ளைத் தாமரை, ப.190.

39. அய்க்கண், நிழலில் நிற்கும் நிஜங்கள், ப.72.

40. பாரதியார் பாடல்கள், ப. 253.

41. அய்க்கண், நிழலில் நிற்கும் நிஜங்கள், ப.60.

42. அய்க்கண், இரண்டாவது ஆகஸ்ட் 15, பக். 64–65.

43. அய்க்கண், மறுபக்கம், ப. 141.

44. அய்க்கண், மறுபக்கம், ப. 127.

45. அய்க்கண், மறுபக்கம், ப.94.

46. தொல்காப்பியம், இளம்பூரணர் உரை, பா.எண். 96.

47. திருக்குறள், பா.எண். 22.

48. பிரபஞ்சனின் புதினக் கலை, ப.71.

49. பிரபஞ்சனின் புதினக்கலை, பக். 70–72.

50. அய்க்கண், விடிவெள்ளி, ப.119.

51. அய்க்கண், நிழலில் நிற்கும் நிஜங்கள், ப.144.

52. அய்க்கண், வெள்ளைத் தாமரை, ப.37.

53. அய்க்கண், வெள்ளைத் தாமரை, ப. 56.

54. அய்க்கண், வெள்ளைத் தாமரை, ப.59–60.

55. அய்க்கண், விடிவெள்ளி, ப.119.

56. அய்க்கண், விடிவெள்ளி, ப.122.

57. அய்க்கண், இரண்டாவது ஆகஸ்ட 15, ப.152.

58. அய்க்கண், இரண்டாவது ஆகஸ்ட 15. ப.160,

59. அய்க்கண், அவனுக்காக மழை பெய்கிறது. ப.25,

60. அய்க்கண், அவனுக்காக மழை பெய்கிறது. ப.29,

61. அய்க்கண், அவனுக்காக மழை பெய்கிறது. ப.30,

62. அய்க்கண், தொல்காப்பியம், இளம்பூரணர் உரை. பா.எண் : 143,

63. அய்க்கண், சமூகவியல். ப. 57,

64. அய்க்கண், மறுபக்கம். ப. 142,

65. அய்க்கண், இரண்டாவது ஆகஸ்ட 15. ப. 155,

66. அய்க்கண், மறுபக்கம். ப.203,

67. அய்க்கண், வெள்ளைத் தாமரை. ப.66,

68. அய்க்கண், தீர்க்க சுமங்கலி. ப. 133,

69. அய்க்கண், கரையை தேடும் அலைகள் ப. 130,

70. அய்க்கண், சமூகவியல் ப. 47,

71. அய்க்கண், மறுபக்கம். ப. 122,

72. அய்க்கண், கரையை தேடும் அலைகள் ப. 236,

73. அய்க்கண், மண்ணின் மலர்கள். ப.85,

74. அய்க்கண், நிழலில் நிற்கும் நிஜங்கள் பக். 185–186,

75. அய்க்கண், மறுபக்கம். ப.38,

76. அய்க்கண், மறுபக்கம். ப.146,

77. அய்க்கண், உயிர். ப.45,

78. அய்க்கண், பாரதியார் பா.எண். 253,

79. அய்க்கண், இரண்டாவது ஆகஸ்ட 15. ப.165,

80. அய்க்கண், இரண்டாவது ஆகஸ்ட 15. ப. 65,

81. அய்க்கண், விடிவெள்ளி. ப. 189,

82. அய்க்கண், மறுபக்கம். ப. 146,

83. அய்க்கண், மறுபக்கம். ப. 60,

84. அய்க்கண், மறுபக்கம் பக். 60–61,

85. அய்க்கண், மறுபக்கம். ப. 135,

86. புறநானூறு பா.எண் : 35,

87 அய்க்கண், மறுபக்கம். ப.135,

88. என்னுரை, இரண்டாவது ஆகஸ்ட் 15.

89. அய்க்கண், பதிப்புரை, இரண்டாவது ஆகஸ்ட் 15.

90. அய்க்கண், இரண்டாவது ஆகஸ்ட் 15, ப.99.

91. அய்க்கண், இரண்டாவது ஆகஸ்ட் 15, ப.92.

92. அய்க்கண், இரண்டாவது ஆகஸ்ட் 15, ப.177.

93. அய்க்கண், இரண்டாவது ஆகஸ்ட் 15, ப.120.

94. அய்க்கண், இரண்டாவது ஆகஸ்ட் 15, ப. 177.

இயல் – 3

# புதினங்களில் பாத்திரப் படைப்பு

## முன்னுரை

மனிதனுடைய வாழ்க்கை முறைகள் ஒருமுகப்பட்டதாய் விளங்குகின்றன, பண்பு, குணம் மொழி, தேசம் அடிப்படையில் பல்வேறு தன்மைகள் கொண்டவை. படைப்பாசிரியர் அய்க்கண்ணின் புதினங்களில் அவர் படைத்துள்ள பாத்திரங்களின் மூலம் சமகால மனிதர்கள், அவர்களுடைய செயல்முறைகள் ஆகியவற்றைத் தமது படைப்புக்களில் காணப்படும் பாத்திரங்களின் வழியாக உணர்த்தியிருப்பதை இவ்வியல் நோக்குகிறது.

## பாத்திரப் படைப்புகள்

புதினக்கூறுகளுள் முதன்மையானது பாத்திரப்படைப்பு ஆகும். கரு(Theme) , நடை(Style) போன்றவை புதினத்திற்கு உடல் போன்றும், பாத்திரப்படைப்பு அதற்கு உயிர் போன்றும் அமையும்.

பாத்திரப்படைப்பு ஒரு புதினத்தின் கருவுக்கு, உயிரும் உணர்ச்சிமிக்க வாழ்வுமாக இருக்கிறது. புதினத்தின் கரு மறந்து போகலாம், புதினத்தில் வரும் வருணனைப்பகுதிகளும் மறந்து போகலாம். ஆனால் நாவலில் சிறந்த பாத்திரங்களை நமது உள்ளம் மறப்பதே இல்லை.

பாத்திரப் படைப்புகளைப் பற்றி பல்வேறு திறனாய்வாளர்கள் தம் தமது கருத்துக்களை வெளிப்படுத்தியுள்ளனர்.

> “நாவல் என்பது கற்பனையுடன் கூடிய நீண்ட உரை
> வடிவம். இதில் பாத்திரப் படைப்பிற்கே அழுத்தம்
> கொடுக்கப்படும்”[1]

என்று பாத்திரப் படைப்பிற்குரிய முதன்மைத் தன்மையை நாம் அறிய

முடிகிறது. குறிப்பாகக் காப்பியங்கள் வழியாகவே பாத்திரப்படைப்பிற்குப் படைப்பாசிரியர்கள் முக்கியத்துவம் தந்துள்ளனர். அதே போல நவீன படைப்புகளில் புதினங்களுக்குரிய கட்டமைப்புகளுள் பாத்திரப்படைப்புகள் முக்கியத்துவம் வாய்ந்ததாக கருதப்படுகிறது.

> "தலைசிறந்த உலகத்துப் பெரும் புதினங்களை எல்லாம் நாம் நினைக்கிற போது முதலில் நம் நினைவுககு வருவது அவற்றைப் படைத்த ஆசிரியர்களோ, அந்நாவலின் கருவோ, கதைப் பின்னலோ, பிறவோ அல்ல, கதை மாந்தர்களே"[2]

இவ்வாறு புதினத்தைப் படிப்பவரின் உள்ளத்தில் பலகாலம் நின்று வாழும் ஆற்றல் பெற்ற பாத்திரங்கள் அவற்றைப் படைத்தவர்களின் உள்ளங்களையும் கொள்ளை கொண்டு விடுகின்றன.

> "என் கதை மாந்தரை நான் ஆள்வதில்லை. நானே அவர்களின் வயமாக உள்ளேன். அவர்கள் தம் விருப்பம் போல் என்னை நடத்துகின்றனர்"[3]

என தர்க்கரே கூறியுள்ளார்.

எனவே பாத்திரப் படைப்பு புதினத்தின் ஓர் உயிரான கூறாக அமைவதோடு, அதுவே கற்றவர்களைக் கவரும் பகுதியாகவும் விளங்குகிறது. கதை மாந்தர்கள் படிப்பவர்க்கு மட்டும் அல்லாமல், படைப்பவர்க்கும் உண்மை மனிதர் போல் ஆகிவிடுகின்றனர்.

> "என் கதைத் தலைவர் தலைவியரை, அவர்கள் எவ்வளவு குறைபாடு உடையவர்களக இருந்தாலும் நான் நேசிக்கிறேன். என் இரத்தத்திலிருந்தும் உயிர் மூச்சிலிருந்தும் இதய துடிப்பிலிருந்தும் பிறந்தவர்கள் அவர்கள். என்னைவிட உயர்ந்தவர்கள். மண்ணின் தெருப்புழுதியில் அலைந்து திரியும் என் உணர்ச்சிகள்

என்னிலும் உயர்ந்து விண்ணை நோக்கிப் பிறந்த வேளைகளில் என்னிடமிருந்து பிறந்தவர்கள் அவர்கள்"[4]

என்று அகிலன் தம் படைப்பு அனுபவத்தைத் தெரிவித்துள்ளார்.

"சமூக நாவல்களில் வரும் பாத்திரங்கள் நிகழ்ச்சிகள் ஆகியவற்றின் மீது சம காலத்துச் சமுதாயப் பொருளாதார நிலைமைகள் ஏற்றிச் சொல்லப்பட்டிருக்கும் வெளிப்படையாகவோ, குறிப்பாகவோ சமுதாயச் சீர்திருத்தத்தை மையமாகக் கொண்டு சமூக நாவல்கள் அமைவதனாலேயே இவற்றை ஆய்வு நாவல்கள் என்றும் கூறுகிறார்கள்"[5]

என்னும் இக்கூற்றினை மெய்ப்பிக்கும் வகையில் அய்க்கண் அவர்களின் புதினங்கள் அமைந்துள்ளன.

எனவே பாத்திரப்படைப்பு, புதினத்தின் ஓர் இன்றியமையாத கூறாக அமைவதோடு அதுவே வாசகர்களைப் பெரிதும் கவரும் பகுதியாகவும் விளங்குகிறது.

## பாத்திரப்படைப்பின் இன்றியமையாமை

புதினத்தின் தொடக்க நிலைச் சித்தரிப்பும், உருக்கமான தொடர்ச்சியும், வாழ்க்கையில் நடக்கும் உண்மை நிகழ்ச்சிகளின் சாரமும், மனதைக் கவரும் ஆற்றலும் பாத்திரப்படைப்பிற்குரிய தகுதிகளாகும். புதினம், பாத்திரங்களாகவே வெற்றி பெறும்.

"படைப்பாளியின் மன ஓட்டத்திலிருந்து புறப்படும் உயிர்த்துடிப்பே பாத்திரப்படைப்பு"[6]

என்பது அகிலனின் கூற்றாம்.

புதினத்தின் மொழி, நடை, கரு ஆகியவற்றை விட நெஞ்சை அள்ளும் ஆற்றல் பெற்றுத் திகழ்வது பாத்திரப்படைப்பு எனலாம். பாத்திரங்களை

உறுதிப்படுத்தும் நோக்கில், ஒன்றுடன் ஒன்றை மோத விட்டும், இணைத்தும்,வேறுபடுத்தியும், ஒன்றுபடுத்தியும் காட்டலாம்.

புதினக் கூறுகளுள் முதன்மையானது, சிறப்புமிக்கது, நெஞ்சைக் கொள்ளை கொள்வது பாத்திரப்படைப்பே (Characterization) ஆகும். ஒரு புதினத்தின் 'கரு' இன்றியமையாதது அது கதையின் எலும்பே (Skeleton) போன்றது. கருவிலும் சிறப்பு வாய்ந்த ஒன்று கருவுக்குப் பொருண்மையும் உயிரையும் தரவல்ல ஒன்று உண்டு, அது பாத்திரமாகும் என்று மாறன் எல்வுட் குறிப்பிடுவது நோக்கத்தக்கதாகும்.

மேலும்,

> "வீரக்கதைகளைப் படைப்போர் உண்மையான மக்களைத் தங்கள் கதைகளில் படைக்க முயல்வதில்லை என்றும், நாவலாசிரியர்கள் அத்தகைய பாத்திரப் படைப்பிற்கே சிறப்பிடம் தருகின்றனர் என்றும் 'நார்த்ராப்பு.ஃபிரை' என்று மேனாட்டு திறனாய்வாளர் கூறுகின்றார்"[8]

பிற படைப்புகளை விட, பாத்திரத்திற்கு முதன்மையிடம் தருவது புதினம் படைப்பு என்பது அறியத்தக்கது.

> "ஒரு நாவலின் கருவுக்கு உயிரும் உணர்ச்சிமிக்க வாழ்வும் இல்லை: ஒரு நாவலின் நடைக்கு நம் நெஞ்சை அள்ளும் ஆற்றல் இல்லை. நம் நெஞ்சை அள்ளும் ஆற்றல் பெற்று, நம் நெஞ்சில் உயிரும் உணர்ச்சிமிக்க வாழ்வும் கொண்டு வாழும் ஒரு நாவல் கூறு பாத்திரப் படைப்பே ஆகும்"[9]

என்றும்

> "ஒரு நாவலாசிரியர் புவியியலுக்கோ, வரலாற்றுக்கோ, வானவியலுக்கோ உண்மையானவராக இருக்க வேண்டிய அவசியமில்லை. அவர் மனித இதயத்துக்கு

உண்மையானவராக இருத்தல் அவசியம். எனவே, அவர் படைக்கும் பாத்திரங்கள் நம்பவைப்பவையாக அமைய வேண்டும்”[10]

என்பர்.

இக்கருத்தின் மூலமாகப் பாத்திரத்தின் முக்கியத்துவத்தைத் திறனாய்வாளர்கள் உணர்த்தியுள்ளனர். இதன் மூலம் ஒரு புதினத்தின் படைப்பிற்கு மிகுந்த முக்கியத்துவம் வாயந்தது பாத்திரப் படைப்பே என்பது புலனாகிறது.

மேலும்,

“நல்ல நாவல்களின் அடிப்படையே பாத்திரப் படைப்புதான் வேறொன்றும் அல்ல என்றும் ஒரு பாத்திரம் உயிர் உள்ளதைப் போல இயற்கையாகப் படைக்கப்பட வேண்டும், படைப்பாளர்கள் தாம் உருவாக்கும் பாத்திரங்களில் இரண்டறக் கலந்து பாத்திரத்தின் உணர்ச்சிகளுடன் ஒன்றி பாத்திரங்களை உருவாக்கும் போது அப்பாத்திரப்படைப்பு வெற்றி பெறுகின்றது”[11]

என்கின்றனர் என்று மா.இராமலிங்கம் அவர்கள் ‘நாவல் இலக்கியம் என்னும் திறனாய்வு நூலில் பாத்திரத்தின் இன்றியமையாமையைக் கூறியுள்ளது. இங்கு இக்கூற்று ஒப்புநோக்கத்தக்கது.

## அய்க்கண்ணின் புதினங்களில் பாத்திரங்கள்

அய்க்கணின் புதினங்கள் அனைத்தும் கருத்திற்கு மட்டுமின்றி பாத்திரத்திற்கு மிகுந்த முக்கியத்துவத்தைத் தந்துள்ளன. ஒவ்வொரு புதினங்களிலும் பல்வேறு வகைப்பட்ட பாத்திரங்களை நாம் காண முடிகிறது. புதினங்களில் இடம்பெறும் பாத்திரங்களை,

1. பால்
2. பருவம்

3. பண்பு

4. வாழ்வியல் முறை

5. சமுதாய முறை

6. உத்தி முறை

7. கதைக்கேற்ற முறை

என்னும் அடிப்படையில் பகுத்துக் காண்பர் திறனாய்வாளர்"[12]

புதினங்களின் பெரும்பகுதி இத்தகைய போக்கிலேயே ஆராய்ப்பட்டுள்ளன. ஒவ்வொரு கதைகளிலும் இவ்வடிப்படைக் கூறுகள் அய்க்கண்ணின் நாவல்களின் பாத்திரங்களில் அமைந்துள்ளதை அறிய முடிகிறது.

## பால் பகுப்புகள்

ஒரு புதினத்தில் முக்கியப் பாத்திரமாக இடம்பெறுவது ஆண் பாத்திரமா? பெண் பாத்திரமா? என்பதை ஆராயும் பகுப்பே 'பால் பகுப்பு' முறை எனப்படும். இப்பகுப்பு முறை பால் அடிப்படையில் ஆண், பெண் எனப்பகுக்கப்பட்டுள்ளது.

குறிப்பாகப் புதினங்களில் ஆண், பெண் அவரவர் இயல்பிற்கு ஏற்ப பாத்திரங்களைப் படைக்கும் தகுதி, உடையவர் என்பதைப் பரிசோதிக்கும் போக்கும் இப்பகுப்பில் முதன்மை இடம் பெறுகிறது.

பெண்களுக்கெனத் தனித்துவமான புதினங்களைப் படைத்திருக்கும் அய்க்கண் பெண்பால் சார்ந்த சிந்தனை உடையவள் என்பது புலப்படுகிறது. வெள்ளைத் தாமரை, நிழலில் நிற்கும் நிஜங்கள், பெண் என்பது உடம்பு அல்ல, தீர்க்க சுமங்கலி என பல்வேறு புதினங்களில் பெண்களின் நிலைப்பாடுகளை, சிறந்த பெண் பாத்திரங்களின் மூலம் சமூகக் கருத்துக்களை வெளிப்படுத்துகின்றார்.

மண்ணின் மலர்கள் புதினத்தில் பெண்ணுரிமை பேசும் சிறந்த பெண் பாத்திரத்தைத் தருகின்றார்.

இங்ஙனம்

> "பெண்களை அடுப்பூதும் வேலையில் அடக்கி வைத்து, குழந்தை பெறும் இயந்திரமாய் வைத்திருந்த காலம் மலையேறி விட்டது. இன்று மாபெரும் நாட்டை ஆட்சி செய்யும் செங்கோலே ஒரு பெண்ணிடம் வந்து விட்டது. 'பட்டங்கள் ஆழ்வதும் சட்டங்கள் செய்வதும் பாரினில் பெண்கள் நடத்த வந்தோம்' என்று பாரதி பாடிய புதுமைப் பெண்கள் வெறும் தேன் புஷ்பங்கள் அல்ல: யுக புஷ்பங்கள். ஆணுக்குப் பெண் இனி இங்கே இளைப்பில்லை என்பதை இன்றைய சமுதாயம் புரிந்து கொள்ள வேண்டும்." என்று முழங்கினாள் அந்த மாணவி"[13]

என்று சமத்துவம் பேசும் பெண்களைத் தமது புதினத்தில் வெளிப்படுத்துகின்றார். அது மட்டுமன்று சமூகத்தில் பெண்களுக்குரிய சமத்துவ நிலையை, புரட்சிகரமான செயலையும், 'ஜல்லிக்கட்டில் பசுமாடுகள்' எனும் புதினத்தில் "சீதா" தந்தைக்கு ஆண்மகனின் நிலையில் நின்று சடங்கு செய்யும் சீர்திருத்தப் பாத்திரமாக விசித்திரமாய் சமூகத்தில் எழுந்து நிற்கின்றாள்.

> "கடைசியாக, தந்தையின் சடலத்திற்கு முன்பு கொள்ளி வைக்கும் தீப்பந்தத்துடன் நின்ற போது, சீதாவின் கை விரல்கள் லேசாக நடுங்கிக் கொண்டிருந்தனவே ஒழிய, அவள் நெருப்பு வைக்கும் போது சொன்ன மந்திரங்களின் உச்சரிப்பில் நடுக்கம் இல்லை...

வெறும் மந்திரச் சொற்களா அவை?... இல்லையே!...
வீறு கொண்ட பெண்ணுரிமை கீதத்தின் ஸ்வரங்கள்
அல்லவா?..."[14]

என்று கேள்விகளைச் சமூகத்தின் முன் வைத்துச் சிறந்த, சீர்திருத்தப் போக்குடைய 'பெண்பால்' பாத்திரங்களை அய்க்கண் படைத்திருப்பதைக் காண முடிகிறது. பெண்கள் சமூகத்தில் படும் துன்பங்கள், அதற்கு எதிரான குரல்கள், பெண்ணுரிமைப் போராளிகள் என பல்வேறு பெண் பாத்திரப் படைப்புகளை அய்க்கண் படைத்திருக்கின்றார்.

## பருவப் பகுப்பு

வயது அடிப்படையில் பகுத்து ஆராயும் போக்கே, 'பருவப் பகுப்பு' முறை எனப்படும். சிறுவர், இளைஞர், முதியோர் என பல்வேறு வகைப்பட்ட பாத்திரங்களைப் படைப்பாசிரியர்கள் தமது கதையின் வாயிலாக வெளிப்படுத்துவர். இவர்களுள் எப்பகுதியினருக்கு முக்கியத்துவம் தருகின்றார்? காரணம் என்ன? என்பதை ஆராயும் போக்காகவும் இப்'பருவப்பகுப்பு' அமையும்.

அய்க்கண்ணின் புதினங்கள் பெரும் பகுதி ஆண், பெண் என இருபாத்திரங்களையும் பொதுப்படையாய் படைக்கும் போக்குள்ளன. இதில் ஆசிரியர் இளைய தலைமுறைக்கு இன்றியமையாத இடத்தைக் கொடுத்துள்ளார். இவற்றுள்

| | | ஆண் | பெண் |
|---|---|---|---|
| தீர்க்கச் சுமங்கலி | – | சுந்தரம் | லலிதா |
| அவனுக்காக மழை பெய்கிறது | – | தம்பி (அ) ராஜா | – |
| என்மகன் | – | செல்வம் தியாகு | – |
| மறுபக்கம் | – | சேதுராமன் | சுபா |
| ஜல்லிக்கட்டில் பசுமாடுகள் | – | சுப.குமரேசன் | சீதா |

| | | | |
|---|---|---|---|
| மண்ணின் மலர்கள் | – | சேகர் | சுகந்தா |
| விடை தவறிய கணக்குகள் | – | சுந்தரம் | லலிதா |
| கரையை தேடும் அலைகள் | – | ராமநாதன் | லதா |
| இதோ ஒரு சாவித்திரி | – | சாமிநாதன் | சாவித்திரி |
| நெஞ்சில் நெருடும் நினைவுகள் | – | சுந்தரம் குமரேசன் | லதா |
| விடிவெள்ளி | – | அழகப்பன் முத்தையா | மீனாட்சி |
| உயிர் | – | கண்ணன் | மீனா. |
| மாபெரும் நாடு, மாபெரும் மக்கள் | – | சரவணன், சுப்பிரமணியன், உத்தமகுமார், அழகப்பன். | |
| வயல் | | முத்து – மாணிக்கம் – அழகப்பன் | பூங்கோதை மல்லிகா |

போன்ற பல்வேறு வகையான இளையப்பாத்திரங்கள் அய்க்கண்ணின் புதினங்களில் முதன்மை இடம் பெற்றுள்ளன. இவற்றினால் சமூகத்தின் இளைய தலைமுறையை மையமிட்டு புதினங்களைப் புனைந்துள்ளார் என்பது அறியலாகிறது.

## பண்புப் பகுப்பு

பண்பினை அடிப்படையாகக் கொண்டு ஆராய்வது ‘பண்புப் பகுப்பு’ எனப்படும். சமூகத்தில் பண்பு அடிப்படையில் நல்லோர்கள், தீயோர்கள், இடைப்பட்ட குண நலன்களைக் கொண்டவர்கள் என மூவகைப்படுத்தலாம். எந்தச் சூழ்நிலையிலும் ஒருவர் மற்றொருவருக்கு

தீங்கிழைக்காத பாத்திரமாகக் கருதப்பட்டால் அப்பாத்திரம் 'நல்லோர் பாத்திரம்' எனப்படும்.

தம்பி (அ) ராஜா என்கின்ற பாத்திரப் படைப்பின் குறியீடாகவே குறியீட்டுத் தலைப்பை வெளிப்படுத்துகின்றார். இப்பாத்திரம் மற்றவர்களின் நலன் கருதியே சேவை செய்யும் சிறந்த பாத்திரமாகும்.

பேசப் பழகிக் கொண்டிருக்கும் குழந்தையின் ஆணையைக் கூட அவன் மறுப்பதில்லை. ஊரிலே எல்லோருக்கும் அவன் வேலைக்காரன் உத்தரவிடத் தெரிந்திருந்த எல்லோருக்கும் அவன் ஊழியக்காரன்...

> "ஏற்றி வைத்தால் சுமப்பான்
> போட்டு வைத்தால் திண்பான்...'
> அவனுக்கென்று தனி ஆசாபாசங்கள், விருப்பு வெறுப்புகள் எதுவும் இல்லை..."[15]

என்று அய்க்கண் பண்பு அடிப்படையிலானப் பாத்திரங்களைப் பற்றிக் குறிப்பிடுவதைக் காணலாம்.

தன்னலம் ஒன்றையே கருதி, பிறருக்குத் தீமை விளைவிக்கும் பாத்திரங்களே (மனிதர்களே) 'தீயோர்'கள் ஆவர். அய்க்கண் புதினங்களில் எதிர்நிலைப் பாத்திரங்கள் காணப்படினும் அவர்கள் அதன் விளைவினை ஏற்றுக் கொள்ளத்தக்கவராய் பாத்திரங்களை அமைத்துள்ளார்.

> "'மறுபக்கம்' என்னும் புதினத்தில் வரும் 'மணிசுந்தரத்தின் பாத்திரம் எதிர்நிலையான பாத்திரம் ஆகும். ' என்ன சொல்றீங்க? ஒர்க்ஷாப் நெருப்புப் பிடிச்சு எரிந்து போனால், அவன் உங்ககிட்டே வந்து பணிந்து நிற்பான்னு எப்படி எதிர்பார்க்கிறீங்க?"
>
> "ராமு! அது தான் நம்ம நாடகத்தின் நான்காவது கட்சி.... இன்னக்கு ராத்திரி ஒர்க்ஷாப் நெருப்புப் பிடித்து எரிந்ததும் நாளைக் காலையிலே நீ

சேதுராமனைத் தனியே சந்தித்துப் பேசனும்...."[16]

என்று தன் கல்லூரித் தோழனான சேது மணிசுந்தரத்திடம் பணிந்து நிற்க வேண்டும் என்ற ஒரே காரணத்திற்காக, சேதுவின் ஒர்க்ஷாப்பையே கொளுத்திவிட முயலும் பாத்திரங்கள் எதிர்நிலைப் பாத்திரங்களாகும்.

நல்லோர், தீயோர் எனத் தனித்துவமாய் அடையாளம் காட்டப்படாமல் இடையிடையே இணைந்து நிற்கும் பாத்திரங்களை 'இடைப்பட்டோர்' எனக் குறிப்பிடுவர். அய்க்கண் கதையின் ஊடே பல இடைப்பட்டோர்களைத் தேவைக்கேற்ப இணைத்துக் கதையின் முழுமைத் தன்மையை வெளிப்படுத்துகின்றார்.

குறிப்பாக முதன்மைப் பாத்திரங்களின் சார்போடு நிற்கக் கூடிய பாத்திரங்கள் இவற்றில் அடங்கும். எழுத்தாளர் எதிர் வீட்டுக்காரன். வீட்டு முதலாளி, போன்ற பல்வேறு துணைப் பாத்திரங்களை அய்க்கண் உணர்த்துகிறார். 'என் மகன்' கதையில் வரும் ஏகாம்பரம்' என்ற நகைச்சுவை எழுத்தாளன் இடைப்பட்ட பாத்திரமாகக் கொள்ளலாம்.

தீர்க்க சுமங்கலியில் வரும் ஜோதிடர், என் மகன் கதையில் வரும் இன்ஸ்பெக்டர், ஜல்லிக்கட்டில் பசுமாடுகள் கதையில் வரும் பரமசிவம் போன்றோர்களை இடைப்பட்டோராகக் கொள்ள முடியும். இத்தகைய பாத்திரங்கள் கதையை உணர்த்தவதற்கும், கதையைப் பற்றி புரிதல்களுக்கும் துணையாக நிற்பவராய் காட்டப்படுவர் அய்க்கண் பல்வேறு இடைப்பட்டோர்களைத் தமது புதினங்களில் உணர்த்தியுள்ளார்.

## வாழ்வியல் பகுப்பு முறை

பாத்திரங்களை வாழ்வியலின் நகர்வுக்கு ஏற்பவும், வாழ்வியலை அடிப்படையாகக் கொண்டும், பகுக்கும் பகுப்பு முறையே 'வாழ்வியல் பகுப்பு முறை' ஆகும். இப்பாத்திரங்களை இரு வகையாகப் பிரித்துக் கூறுவர்.

1. அறிவு நிலைப் பாத்திரம்.

2. உணர்வு நிலைப் பாத்திரம்.

அய்க்கண்ணின் புதினங்களில், வெள்ளைத் தாமரையில் வரும் கல்யாணி, 'ஜல்லிக்கட்டில் பசுமாடுகள்' புதினத்தில் வரும் சீதா, நிழலில் நிற்கும் நிஜங்களில் வரும் ரஞ்சனா, மண்ணின் மலர்களில் வரும் ஆண்பாத்திரமான சேகர், மறுபக்கத்தின் முதன்மைப் பாத்திரமான சேது ஆகியோரை அறிவுநிலைப் பாத்திரங்கள் எனக் குறிப்பிடலாம்.

மேற்கூறிய பாத்திரங்கள் சமூகத்தினை நன்கு அறிந்து, தவறுகளுக்குத் துணை போகாத தெளிந்த சிந்தையோடு நிற்கும் பாத்திரங்களாய்க் காணப்படுகின்றனர்.

உணர்ச்சிகளை மையமிட்டு அமையும் பாத்திரங்கள் 'உணர்வு நிலை பாத்திரங்கள்' என்பர்.

மறுபக்கம் புனிதத்தில் படைக்கப்பட்டுள்ள சுபா, ஜல்லிக்கட்டில் பசுமாடுகளில் வரும் வள்ளி என்கிற சிகப்பி, கரையைத் தேடும் அலைகளில் படைக்கப்பட்டுள்ள லதா ஒரு பெண் மனைவியாகிறாள் குறும்புதினத்தின் பாத்திரமான நந்தினி போன்றோர் உணர்ச்சிமிகுந்த பாத்திரங்களாக வலம் வருகின்றனர்.

## சமுதாயப் பகுப்பு முறை

சமூகத்திற்கும், பாத்திரங்களுக்கும் இடையே உள்ள உறவை அடிப்படையாகக் கொண்டு பகுக்கும் முறை 'சமுதாயப் பகுப்பு முறை அல்லது சமுதாய முறை பகுப்பு' எனலாம். சமூகம் ஒரு குறிப்பிட்ட கட்டுப்பாடுகளை உடையது. அத்தகையச் சமூகத்திற்குக் கட்டுப்படுதல், சமூகத்திற்குக் கட்டுப்பட மறுத்தல் என இருவேறு மனிதர்களைக் காண முடியும். மேலும் சமூகத்தினை விட்டு ஒதுங்கிச் செல்லுகின்ற பாத்திரங்களையும் இதில் அடக்கலாம்.

## சமுதாயத்திற்குக் கட்டுப்படும் பாத்திரம்

அய்க்கண்ணின் புதினங்கள் குடும்பக் கட்டுப்பாடுடைய பாத்திரங்கள் உடையன. காதலுக்காகத் தாய், தங்கையை இழக்க மறுக்கினற பாத்திரமாக உயிர் புதினத்தில் ' மீனா மற்றும் கண்ணன் படைக்கப்பட்டிருக்கிறார்கள்

காதலை மறுத்து மீனா,

> "என் ஒருத்தியின் மகிழ்ச்சிக்காக, என் தாயையும் மற்றவர்களையும் வருத்தப்பட வைக்க நான் விரும்பவில்லை, டாக்டர்! என் தாய்க்கு நான் தான் மகள், மகன் சொத்து சுகம் எல்லாம்'' என்று அமைதியாகக் கூறினாள் மீனா"[17]

என்று கூறும் பாத்திரப் படைப்புகள் சமூகத்திற்குக் கட்டுப்படும் பாத்திரம் எனலாம். அதே போல விடிவெள்ளியில் வரும் மினாட்சி பாத்திரம், அவனுக்காக மழை பெய்கிறது. புதினத்தில் வரும் தம்பி என்கிற ராஜா,நெஞ்சில் ஓர் நெருஞ்சியில் வரும் பெண் பாத்திரமான லதா போன்றோர்கள் சமூகக் கட்டுப்பாடுகளுக்கு உட்படும் பாத்திரங்களாகப் படைக்கப்பட்டுள்ளதைக் காண முடிகிறது.

சமூகச் சீர்திருத்த நோக்கிலும், சமூக வரையறைகளில் இருந்து மாறுபடும் பாத்திரங்களையும் ஆசிரியர் வெளிப்படுத்துகின்றார். மண்ணின் மலர்களின் பாத்திரமான சந்திரன், இதோ ஒரு சாவித்திரி புதினத்தின் ஒரு நிலைப் பாத்திரமான சங்கர் ஆகியோர் சமுதாயத்தோடு முரண்படும் பாத்திரங்கள் என்பது தெரிகிறது.

சமுதாயத்திலிருந்து ஒதுங்கிச் செல்லுகின்ற பாத்திரங்கள் தற்காலப் புதினங்களில் இடம் பெறும் பாத்திரங்களாகின்றன. அத்தகைய பாத்திரங்களால் யாருக்கும் நன்மையோ அல்லது தீமையோ ஏற்படுவதில்லை. சமூகத்தோடு ஒத்துப் போகாமலும், இணைந்து போகாலும் செல்லும் பாத்திரங்கள் அய்க்கண்ணின் புதினங்களில் இடம் பெறவேயில்லை என்பது குறிப்பிடத்தகுந்ததாகும்.

## உத்திமுறைப் பகுப்பு

புதினத்திற்கு முதன்மைக் கொடுத்தும், ஒரு பாத்திரத்தைப் படைத்துக் காட்டும் உத்தி முறையை அடிப்படையாகக் கொண்டும் இப்பகுப்பு முறை அமையும். ஆய்வாளர்கள் உத்தி முறைப் பகுப்புப் பாத்திரங்களை,

1. முழுநிலைப் பாத்திரம்
2. வளர்ச்சி நிலைப் பாத்திரம்
3. தேக்க நிலைப் பாத்திரம்
4. ஒரு நிலைப் பாத்திரம்

என்று பல வகையாகப் பகுத்துக் கூறுவர்.

## முழுநிலைப் பாத்திரம்

முதன்மைப் பாத்திரமே கதையின் சிறந்த பாத்திரமாக அமையும். ஒரு பாத்திரத்தின் அனைத்துத் தகுதிகளும் கொண்டப் பாத்திரங்களைப் புதினாசிரியர் உருவாக்குவார்கள்.

செயல், பேச்சு, எண்ணம், உடல் தோற்றம் அப்பாத்திரத்தைப் பற்றிய பிற பாத்திரங்களின் கருத்து என்ற ஐந்தனுள் நான்கு அல்லது ஐந்து வழிகளைப் பயன்படுத்தி உருவாக்கப்படும் பாத்திரங்கள் முழுநிலைப் பாத்திரங்கள் எனப்படும்.

அய்க்கண்ணின் புதினங்கள் அனைத்திலும் முழுநிலைப் பாத்திரங்களைக் காண முடியும். குறிப்பாக ‘அவனுக்காக மழை பெய்கிறது’ புதினத்தில் முதன்மைப் பாத்திரமான ‘தம்பி’ என்கிற ராஜா, ‘என் மகன்’ புதினத்தின் செல்வம், ‘தீர்க்க சுமங்கலியில்’ வரும், லலிதா, ‘வெள்ளைத் தாமரையில்’ வரும் கல்பனா. ‘நிழலில் நிற்கும் நிஜங்கள்’ புதினத்தில் வரும் ரஞ்சனா ஆகியோர்கள் முழு நிலைப் பாத்திரங்களாவார்கள். இப்பாத்திரங்கள் ஐந்து வழிகளிலும் முழுமை

பெற்று விளங்கும் பாத்திரங்கள். மேலும், அனைத்துப் புதினங்களிலும் முழுநிலைப் பாத்திரங்களைக் காண முடிகிறது.

## வளர்ச்சி நிலைப் பாத்திரம்

கதைப் போக்கில் மிகுதியான மாற்றங்களைப் பெறும் பாத்திரங்கள் வளர்ச்சி நிலைப் பாத்திரம் ஆகும். 'இரண்டாவது ஆகஸ்ட் 15' – புதினத்தில் வரும் 'அழகப்பன்' பாத்திரம் சிறந்த வளர்ச்சி நிலைப் பாத்திரமாகும். உயிர் புதினத்தில் வரும் கண்ணன், 'என் மகன்' புதினத்தில் வரும் செல்வம், 'மண்ணின் மலர்களில்' வலம் வரும் சேகர், மறுபக்கத்தின் முழுமைப் பாத்திரமான சேதுராமன் வளர்ச்சி நிலைப் பாத்திரங்கள் ஆவர். இவர்கள் கதையில் தோன்றுகின்ற பொழுது சாதாரண மனிதர்களாகவும், கதையின் நகர்விற்கு ஏற்பச் சமூகத்தில் சிறந்த வளர்ச்சி பெறுபவர்களாகவும் படைக்கப் பட்டிருக்கின்றனர்.

## தேக்கநிலைப் பாத்திரம்

எந்த ஒரு மாற்றமும் பெறாதப் பாத்திரத்தைத் தேக்கநிலைப் பாத்திரம் என்று குறிப்பிடுவர்.

> "ஒரு புதினத்தில் இடம்பெறும் ஒரு பாத்திரம் கதைப் போக்கில் மிகச் சிறு மாற்றம் பெற்றாலும் அல்லது மாற்றமே பெறாவிடினும் அது தேக்கநிலைப் பாத்திரம் எனப்படும்."[18]

'தீர்க்க சுமங்கலியில்' வரும் 'சுந்தரம்' தேக்கநிலைப் பாத்திரம் எனக் கருதலாம். லலிதாவைத் திருமணம் செய்து கொண்டு பின்னர் மனைவி, பிள்ளைகளை விட்டு விலகிச் சென்றவர். இவர் சுவாமியாய் வந்தாலும் அப்பாத்திரம் எவ்வித மாற்றமுமின்றி இருப்பதன் மூலம் அதனைத் தேக்கநிலைப் பாத்திரமாகக் கருதலாம்.

## ஒரு நிலைப் பாத்திரம்

ஒரே கருத்தை மையமாக வைத்து உருவாக்கப்படும் பாத்திரங்களை 'ஒரு நிலைப் பாத்திரங்கள்' என்பர். சமூகத்தில் நிகழ்கின்ற பல்வேறு செயல்பாடுகள் , ஒரு தனித்த தன்மையை மையக்கருத்தாக உருவாக்குவர். அக்கதையின் பாத்திரமும் ஒத்த தன்மையிலேயே இயங்குகிறது. அய்க்கண்ணின் 'அவனுக்காக மழை பெய்கிறது' புதினத்தில் வரும் தம்பி என்கிற ராஜா சிறந்த ஒருநிலைப் பாத்திரமாகும். எத்தகைய சூழல் ஆயினும் இரக்கக் குணத்தோடு, பிறருக்காகவே வாழ்கிற, பிறருக்காகவே துன்பப் படுகின்ற சிறந்த பாத்திரமாகப் படைக்கப்பட்டுள்ளதைக் காணலாம்.

'என் மகன்' புதினத்தில் வரும், அழகப்பன், இந்திரா, கல்பனா ஆகியோரும், 'மறுபக்கம்' புதினத்தில் வரும் தயாநிதி, கந்தசாமி, உஷா ஆகியோரும், 'ஜல்லிக்கட்டில் பசுமாடுகள்' புதினத்தில் படைக்கப்பட்டுள்ள பொன்னுசாமி, பரமசிவம் 'மண்ணின் மலர்கள்' புதினம் வரும், சோபா, கல்பனா, பத்மினி, கரிகாலன், பத்மநாபன் போன்றோரும் ஒரு நிலைப் பாத்திரங்கள் ஆவர். அது மட்டுமின்றி அய்க்கண் தமது அனைத்துப் புதினங்களிலும் ஒரு நிலைப் பாத்திரங்களை மிக அதிகமாகப் படைத்திருக்கின்றார்.

## கதைக்கேற்ற பகுப்பு முறை

புதினத்தின் கதையை அடிப்படையாகக் கொண்டு அக்கதையின் பாத்திரங்களின் ஆளுமைக்கு ஏற்பப் பகுக்கும் முறை 'கதைக்கேற்ற பகுப்பு முறை' என்று கூறுவர். இத்தகையப் பகுப்பு முறையில் பாத்திரங்களை இரண்டு வகையாகப் பிரித்துக் கூறலாம்.

1. தலைமை மாந்தர்
2. துணை மாந்தர்

## தலைமை மாந்தர்

கதையின் முதன்மைப் பாத்திரமாக விளங்கும் தலைவன், தலைவி ஆகிய இருவரே தலைமை மாந்தர்களாவார். கதை முழுவதும் தலைமைப் பாத்திரத்தைச் சுற்றியே கருத்துக்கள் அமையும். மற்ற பாத்திரங்கள் தன்னைச் சுற்றி வரும்படியாக ஒவ்வொரு செயலிலும் முதன்மை பெற்று நிற்பதும், புதினம் முழுவதிலும் இடம் பெற்று நிற்பதும் தலைமைப் பாத்திரம் ஆகும்.

தலைமைப் பாத்திரங்கள் சூழலுக்கு ஏற்ப, வளர்ச்சிக்கு ஏற்ப பல்வேறு வகைப்படுத்தலாம்.

1. ஆளுமை உடையப் பாத்திரம்
2. ஆளுமைக் குறைபாடுடையப் பாத்திரம்.

என்று பொது அடிப்படையில் இருவேறு கூறாகப் பகுத்துக் காண முடிகிறது.

## ஆளுமை உடைய பாத்திரம்

சமூகத்தில் நிகழ்கின்ற அனைத்துப், பிரச்சினைகளையும் எதிர்த்து நின்று தனது ஆளுமையை வெளிக்காட்டும் பாத்திரமே 'ஆளுமை உடையப் பாத்திரம்' ஆகும். மேலும் வாழ்க்கையில் எழும் பிரச்சினைகளையும் வாழ்வின், நெருக்கடியையும் உணர்ந்து இறுதியில் வெற்றி பெறும் பாத்திரங்கள் இப்பாத்திரங்களாகும்.

அய்க்கண்ணின் புதினங்களில், ஆளுமை உடைய ஆண் பாத்திரங்கள்

1. கண்ணன் – உயிர்
2. கந்தசாமி – வயல்
3. செல்வம் – என் மகன்
4. சேகர் – மண்ணின் மலர்கள்
5. சேதுராமன் – மறுபக்கம்

6. தம்பி என்கிற ராஜா – அவனுக்காக மழை பெய்கிறது

7. அழகப்பன் – இரண்டாவது ஆகஸ்ட் – 15

8. சுந்தரம் – விடை தவறிய கணக்குகள்.

இவர்கள் புதினத்தின் தலைமை மாந்தர்களாக மட்டுமின்றி ஆளுமை செலுத்தும் சிறந்த முதன்மைப் பாத்திரங்களாகவும் விளங்குகின்றார்கள்.

## பெண்–தலைமை மாந்தர்கள்

அய்க்கண் புதினங்களில் பெண் தலைமை மாந்தர்கள் மிக அதிக அளவில் காணப்படுகிறார்கள். சிறந்த ஆளுமை உடையப் பெண் பாத்திரங்களைப் பின்வரக் காணலாம்.

1. லதா – கரையைத் தேடும் அலைகள்
2. சாவித்திரி – இதோ ஒரு சாவித்திரி
3. சுகந்தா – மண்ணின் மலர்கள்
4. சீதா – ஜல்லிக்கட்டில் பசுமாடுகள்
5. லலிதா – தீர்க்க சுமங்கலி
6. கல்யாணி – வெள்ளைத் தாமரை
7. நந்தினி – ஒரு பெண் மனைவியாகிறாள்
8. ரஞ்சனா – நிழலில் நிற்கும் நிஜங்கள்
9. சுபா – மறுபக்கம்.
10. மீனாட்சி – விடிவெள்ளி
11. சின்னாயி – இரண்டாவது ஆகஸ்ட் 15

## கண்ணன்

உயிர் புதினத்தின் கதை ‘ உயிர் ’ பற்றியதாகவும், இறப்பு பற்றியதாகவும் கதைக்கு அமைந்துள்ளது. இதில் அய்க்கண் அவர்கள், தனது புதினத்தில் இறந்த மனிதன் பிழைக்க வேண்டுமெக் கருதும் இரக்ககுணம் உடையவனாக கண்ணன் பாத்திரத்தை ஆளுமை உடையப் பாத்திரமாக அறிமுகப்படுத்தியுள்ளார்.

> “இறந்தவனுடைய இதயத்தை மறுபடியும் இயங்க வைப்பது நடக்கக் கூடிய காரியமாக எனக்குத் தெரியவில்லை!... கண்ணா! நீ எவ்வளவோ திறமையும் அறிவும் உறுதியும் உள்ளவன் தான் எனக்குத் தெரியும் ஆனால் உன் அறிவையும் திறமையையும் வேறொரு ஆராய்ச்சியில் ஈடுபடுத்தினால், வெற்றி உறுதியாக கிடைக்கும். இந்த முட்டாள்தனமான ஆராய்ச்சியை விட்டு விடு!”[19]

என்று ஆசிரியர் ஆளுமை உடையவனாய் கண்ணனைக் கதையில் வெளிப்படுத்துகின்றார்.

## கந்தசாமி

‘வயல்’ என்ற புதினத்தில் படைக்கப்பட்டுள்ள பாத்திரம் ‘கந்தசாமி’, மிகச் சிறந்த ஆளுமை உடைய பாத்திரமாய் படைக்கப்பட்டுள்ளார். குடும்பத் தலைவனாய் முன்னின்று செயல்படுவதை புதினத்தில் காண முடியும்.

## உயிரினங்கள் மீதான பாசம்

கந்தசாமியின் மகனான மாணிக்கம் படித்தவனாதலால் பொங்கல் நாளில் மாடுகளுக்கு மரியாதை செய்வதை மறுக்கிறான்.“....மாடுகளைக்

கும்பிடுறதா?.... நான்ஸென்ஸ்!" என்ற மகனுடைய பேச்சைக் கேட்டு மனம் வருந்தினான் கந்தன்.

> "டேய் அதெல்லாம் மாடுகளில்லைடா! அது தான் நமக்குச் சோறு போடுகிற தெய்வங்கள். அந்த மாடுகள் கழுத்திலே ஏர் பூட்டி உழாது போனால் நம்ம வீட்டு அடுப்பிலே பூனை உறங்க வேண்டியது தான். சோறு கொடுக்கிற காளைகளுக்கு நன்றி காட்டிக் கும்பிடறதிலே என்னடா தப்பு? நீ பட்டணத்தில படிக்கிற படிப்பு, போட்டுக்கிற சட்டைத் துணியெல்லாம் இந்த மாடுகளின் காலுக்குக் கீழே விளைசது. தம்பி: மறந்திடாதே! காளைகளுக்குப் பொட்டு வைச்சு கும்பிடுடா என்று, எதிரே நின்று கொண்டிருந்த காளைகளைக் காட்டினான் கந்தன்.
>
> என்ன, மாடுகளுக்கு நான் பொட்டு வைக்கணுமா? பொட்டு வைக்காவிட்டால் இந்தப் பிணங்களுக்கு அழகு குறைந்து விடுமா?என்றாள்
>
> மாணிக்கம், 'பிணங்கள்' என்று காளைகளைக் கூறியதும் கந்தன் ஆத்திரங் கொண்டு மாணிக்கத்தை அறைந்து விட்டான்"[20]

உயிரனங்கள் மீதான பாசமும், உயிரினங்களை மதிக்கக் கூடிய பண்பும் கொண்டவனாகவும், ஆளுமைத் தன்மையுடையப் பாத்திரமாகவும் சிறப்புற அய்க்கண் படைத்துக் காட்டியுள்ளார்.

## செல்வம்

'என் மகன்' புதினத்தில் திருடனாய் இருந்து சிறந்த நற்பேருடைய மனிதனாய் மாறி நிற்கும் ஆளுமைப் பண்புடைய பாத்திரமே செல்வம்.

## சிறந்த மனிதன்

திருடனாய் இருந்தவனைத் தியாகு நல்லவனாக்கி மிகச்சிறந்தவனாய் மாற்றுகிறான். இறுதியில் திருடனான ‘ செல்வம்’ தியாகுவின் அண்ணன் என்பது புலனாகிறது. இதனைத் தியாகுவின் தாய் ஏற்று கொள்ள மறுக்கிறாள்.

> “அம்மா! என்னை மன்னிச்சிடுங்க... இந்த மோதிரம், என் அப்பா கொடுத்தது தான் ஆனா, இது கணவர் மோதிரம்னு எனக்குத் தெரியாது... உங்க கணவருடைய மோதிரத்தைத் திருடினதுக்காக என் அப்பாவை மன்னிச்சிடுங்கம்மா!... என்னை எங்கேயும் விரட்டிடாதீங்க... நான் இப்போது தான் மனிதனாகிக்கிட்டு வர்றேன்... என்னை வெளியே துரத்தி மறுபடியும் மிருகமாக்கிடாதீங்க... இது வரை நான், உங்களையும் உங்க மகனையும் தான் தெய்வங்களாய் நினைச்சுக் கும்பிட்டு வந்தேன். இனிமேல் உங்க கணவரும் என் தெய்வம்தான்...”[21]

என்று சிறந்த மனிதனாகவும், தந்தை, தாயை முழு மனதோடு ஏற்றுக் கொள்ளும் ஆளுமையுடையவனாய் 'செல்வம்', ‘என் மகன்’ புதினத்தில் ஆசிரியர் படைத்துக் காட்டுகின்றார்.

## சேகர்

‘ சேகர் ’ என்ஜினியரிங் படித்து, தொழிலில் மிக நேர்த்தியானவனாய் மாறி நிற்கிறான். அமெரிக்காவில் வேலை கிடைத்தாலும் அதனை மறுக்கும் சிறந்த பாத்திரமாய் ‘மண்ணின் மலர்கள்’ புதினத்தில் காணப்படுகிறார்.

## தொழில் திறமையும், தாய் நாட்டுப் பற்றும்

அமெரிக்காவில் சேகரை இந்தியர் ஒருவர் சந்தித்து, உனது திறமைக்கு நீங்கள் இங்கேயே வேலை பார்க்கலாம் என்று கூறுகின்றார்.

> "ஏன் சேகர், உன் அறிவுக்கும் திறமைக்கும் இங்கேயே ஒரு வேலை பார்த்துக் கொண்டால் நிறைய சம்பாதிக்கலாமே?"
>
> "நோ, சார்!... கேவலம் பணத்துக்காக, என் தாய் நாட்டை விட்டுவிட நான் விரும்பவில்லை. வாழ்க்கைக்குப் பணம் தேவை தான். ஆனால் பணமே வாழ்க்கையாயிடுமா,சார்? என்னுடைய அறிவுக்கும், திறமைக்கும் நான் பிறந்த மண்தானே முதற்காரணம்? அதற்குத் துரோகம் செய்ய மாட்டேன். என்னை இளமையிலிருந்து படிக்க வைத்துப் பட்டதாரியாக்கி இங்கே அனுப்பிய தாய்நாட்டை இப்போது உதறி விடுவது அயோக்கியத்தனம் இல்லையா? என் அறிவும் உழைப்பும் என் தாய் நாட்டுக்குத்தான் பயன்பட வேண்டும். இங்கே லட்சக்கணக்கில் சம்பாதித்து, ஏ.சி.மாளிகை, கட்டி, பென்ஸ் காரில் போவதை விட, என் தாய்நாட்டில் குறைவாகச் சம்பாதித்து, குடிசையிலே வாழ்ந்து சைக்கிளிலே போறது, என் மனத்துக்கு நிம்மதியாயிருக்கும்."[22]

என்ற கூற்றின் மூலம் தொழிற் திறமையையும், தாய் நாட்டுப் பற்றும் கொண்ட ஆளுமையுடையப் பாத்திரமாய் 'சேகர்' படைக்கப்பட்டிருக்கின்றார்.

### சேதுராமன்

ஏழ்மையான பாத்திரமாக 'மறுபக்கம்' புதினத்தில் படைக்கப்பட்டிருக்கின்றப் பாத்திரம் 'சேதுராமன்'. ஆனால் முயற்சி திருவினையாக்கும்' என்ற கருத்தினை அடிப்படையில் தொழிலதிபராய் மாறும் ஆளுமை உடையப் பாத்திரம்.

### சேதுவின் காதல்

சேது பணக்காரப் பெண்ணானச் சுபாவைக் காதலிக்கின்றான். ஏழையானாலும் திறமை வாயந்தவன் எனத் தெரிந்து சுபாவின் தந்தை தன் செலவில் திருமணம் செய்து வைக்க நினைக்கிறார்.

> "சேது!... நான் உன்னை ஒரு சாதாரண இளைஞனாக நினைத்தேன். ஆனால் நீயோ பணத்தைத் துச்சமாகத் தூக்கி எறியும் லட்சிய இளைஞன் என்று இப்போது புரிந்து கொண்டு விட்டேன், சேது!... இப்படிப்பட்ட ஒரு நல்ல இளைஞனை என் மகள் காதலித்ததற்காக நான் பெருமைப்படுகிறேன்... இருவரும் இனிமேல் இங்கேயே இருக்கலாம். விரைவிலேயே உங்கள் கல்யாணத்தை ஜாம்ஜாம் என்று நடத்தி வைக்கிறேன் என்று மகிழ்ச்சி பொங்க, மனமார உறுதி கூறுகிறார் விசுவநாதன்.
>
> "ஸார்!... எக்ஸ்யூஸ் மீ... உங்க செல்ல மகளுடைய கணவன் என்பதற்காக, இங்கே என்னை மதிப்பீர்களே தவிர, எனக்காக என்னை மதிக்க மாட்டீர்கள்: அது உங்களால் முடியவும் முடியாது. எனக்காக என்னை நீங்கள் மதிக்கும் காலம் வரை, அதாவது உங்களைப் போல் நானும் தரமான செல்வ நிலைக்கு உயரும் வரை – இந்த வீட்டுக்குள் காலடி

எடுத்து வைக்க மாட்டேன்..."[23]

என்று கூறும் சிறந்த ஆளுமைத் தன்மைப் பெற்றப் பாத்திரமாக ' சேது ' படைக்கப்பட்டுள்ளார்.

## தம்பி என்கிற ராஜா!

வாழ்க்கையின் போக்கை பிறருக்காக செலவிட வேண்டும் என்று கூறுவர். 'அவனுக்காக மழை பெய்கிறது' புதினத்தில் வரும் தம்பி என்கின்ற ராஜா பிறருக்காக மட்டுமே வாழும் ஆளுமைப் பாத்திரமாகும். தம்பிக்காகவே 'ஊரில் மழை பெய்கிறது' என்பதே கதையின் முக்கிய அம்சமாகும்.

ஊரிலுள்ள எல்லோருக்கும் வேலை செய்யும் ஆளுமையை,

"சரி.... சரி.... இந்த மையை வாங்கிக் கொடுத்திட்டு கல்யாண வேலையைப் பாரு!..." என்று புத்தகத்தை மறுபடியும் எடுக்கிறாள் லிஸி...

தம்பி 'இங்க்' பாட்டிலுடன் ஓடுகிறான்...

வீதியிலே இன்னொரு வீட்டிலே. ஒருவர் கூப்பிட்டு அவனிடம் ஏதோ சொல்லி, ஒரு பாத்திரத்தைக் கொடுக்கிறார்.அதையும் வாங்கிக் கொண்டு ஓடுகிறான் அவன்....

வேறொரு வீட்டுக்காரர் அவனைக் கூப்பிட்டு, ஏதோ வாங்கி வரச் சொல்லி பணம் கொடுக்கிறார்.

பணத்தை வாங்கிக் கொண்டு, தலையை ஆட்டிவிட்டு மேலும் தொடர்ந்து ஓடுகிறான் அவன்."[24]

என்று ஆசிரியர் எதார்த்தமானப் பாத்திரத்தினை வெளிப்படுத்தி பாத்திரங்களின் ஆளுமைத்திறன் நம்முன் உணர்த்துகின்றார்.

## அழகப்பன்

'இரண்டாவது ஆகஸ்ட 15' என்ற புதினத்தில் தலைமை மாந்தனாகக் கொள்ளத்தக்கவன் 'அழகப்பன்', தொடக்கத்திலிருந்து இறுதி வரையிலும் 'அழகப்பனின்' தனித் திறமையும், ஆளுமைத் திறனுமே புதினத்தில் வெளிப்படுத்தப்பட்டு இருக்கின்றது.

> "அமெரிக்காவில் உலக வங்கியில் பெரிய அதிகாரியாக இருந்து ஓய்வு பெற்ற திரு.அழகப்பன் இந்த கிராமத்தின் நிலை பற்றி நன்றாக ஆய்வு செய்து உண்மையை என்னிடம் விளக்கமாக எடுத்து சொன்னார். இதே மாதிரி நிலைதான் பல கிராமங்களிலும் நிலவி வருகிறது"[25]

என்று அழகப்பனின் ஆளுமையைப் பிற அதிகாரிகள் புகழ்வதும், மேலும்,

> "தனிப்பட்ட முறையில் கடன்களுக்கு விண்ணப்பிக்காமல், இந்த கூட்டுறவு சங்கத்தின் மூலம் அரசாங்கத்தின் கடன்களுக்கு அழகப்பன் போன்றவர்கள் தலைவராக அமைந்து விட்டால், எந்த ஊழலுக்கும் நீங்கள் பலியாக வேண்டாம். உங்களுக்கு நியாயமான கடன்கள், முழுத்தொகையாகக் கிடைக்கும் என்று உறுதி கூறுகிறேன். ஆகவே அந்த சங்கத்துக்கு, திரு.அழகப்பன் அவர்களையே தலைவராகத் தேர்ந்தெடுங்கள்." என்ற தேவமூர்த்தி கூற்றினைக், கூடியிருந்த மக்கள் "எங்கள் தலைவர் – அழகப்பனே!... எங்கள் தலைவர் அழகப்பனே!... என்று கோஷங்களை எழுப்பினார்கள்"[26]

என்றக் கூற்றினைப் பாத்திரங்களின் வாயிலாக ஆசிரியர் உணர்த்துவதைக் காண முடியும்.

## சுந்தரம்

'மண்ணின் மலர்கள்' புதினத்தில் உள்ள குறும்புதினத்தில் 'விடை தவறிய கணக்குகள்' புதினத்தில் எதார்த்தமான, நேர்மையானப் – பாத்திரமாகச் 'சுந்தரம்' பரிணமிக்கின்றார். தந்தை நட்புறவில் இருந்து பாதிக்கப்பட்ட குடும்பத்திற்காகத் தன்னையும், தன் குடும்பத்தையும் முழுமையாக அர்ப்பணிக்கும் தலைமைப் பாத்திரம் 'சுந்தரம்' ஆவான்.

> "என் அப்பாவின் அந்திம விருப்பத்தை நிறைவேற்ற தான், நான் உங்க கிராமத்துக்கு வந்து, உன் தங்கையைக் காதலிப்பது போல் நடித்து அவளுக்கு ஒரு நல்ல வாழ்க்கை அமைத்துத் தரத் தீர்மானித்தேன். என் காலேஜ்மேட் பிரபாகரனிடம் சொல்லி, உனக்கு சென்னையில் ஒரு அசிஸ்டன்ட் மானேஜர் வேலை வாங்கிக் கொடுத்து, உன் தங்கையையும் கட்டிக் கொடுத்து, உன்னையும் பணக்காரனாக்க முடிவு செய்தேன்..."[27]

என்று சுந்தரம் தன் தந்தை மீதான அந்திம விருப்பத்திற்காகவே தன்னையும், தன் குடும்பத்தையும் இணைத்து பிறர் வாழ வேண்டும் என்று நினைக்கும் ஆளுமை சிறந்தப் பாத்திரமாய் 'அய்க்கண்' 'விடை தவறிய கணக்கு' புதினத்தின் படைத்துக் காட்டுகின்றார்.

## ஆளுமை உடைய பெண் பாத்திரங்கள்

இன்றைய தற்காலப் படைப்புகள் பெண்களுக்கெனத் தனித்த முக்கியத்துவத்தைத் தருகின்றன. அவற்றினும் மேலாக புதினாசிரியர் அய்க்கண் அவர்கள் பெண் தலைமை மாந்தர்கள் பலரை 'ஆளுமையுடையோராய்' படைத்துள்ளார்.

தலைமைப் பெண் மாந்தர்களில் ஆளுமை உடையப் பாத்திரமாக மட்டுமின்றி, சமூகத்தில் ஆணுக்கு நிகரானப் பாத்திரமாகவும், சமூக பெண்ணடிமைத்தனப் போக்கைக் கலையும் பாத்திரமாகவும் அய்க்கண் வெளிப்படுத்துவது பெண்ணியவாதிகளின் போக்காய் அமைத்துள்ளார் என்பதை அறியமுடிகிறது.

## லதா

'கரையைத் தேடும் அலைகள்' புதினத்தில் வரும் 'லதா'. தனிப்பெண்ணாய் இருந்து தம்பி, தங்கைகளைக் கவனித்து படிக்க வைத்து ஆளாக்குகிறாள். வயது ஆக, ஆக திருமணம் செய்து கொள்கிறாள். கணவன் இறந்து விடுகிறான். மீண்டும் கணவனின் தம்பி, தங்கைகளைப் படிக்க வைத்து ஆளாக்குவதாக அமையும் கதையிலும், வாழ்க்கை முழுவதும் துன்பத்திலேயே சுழன்று இறுதி வரையிலும் போராடும் ஆளுமைப் பெண் பாத்திரமே 'லதா'.

> "கடந்த பத்தாண்டுகளுக்கு மேலாக லதா ஓர் இயந்திரமாக நடமாடுவதைப் பார்த்து. அக்கம் பக்கத்து சனங்களே ஆச்சரியப்பட்டுப் போனார்கள்.
>
> மூத்தவள் விஜயா இந்த ஆண்டு பட்டம் பெற்றதும் ஒரு நல்ல மாப்பிள்ளையாகப் பார்த்துத் திருமணம் செய்து கொடுப்பதற்கு வேண்டிய நகை சாமான்கள் எல்லாம் சிறிது சிறிதாகச் சேகரித்து வைத்திருந்தாள் லதா, செலவுக்கு பி,எ.ஃப்,பில், கடன் வாங்கவும் வசதி இருந்தது.
>
> அடுத்தவள் சுபத்ராவும் கல்யாணத்துக்குத் தயாராகிக் கிடுகிடு என்று பருவப்பூங்கொடியாகப் பூத்து வளர்ந்தாள்.

தம்பி மோகன் படிப்பு முடிந்தது, உத்தியோகம் கிடைத்து விட்டால்,

அப்பாடா!... அவளுடைய பொறுப்புக்கள் கழன்று விடும். அவன் குடும்பத்தின் பாரத்தைத் தன் தோளில் ஏற்றுக் கொள்வான்."[28]

என்று தம்பி, தங்கையின் வாழ்க்கையை மட்டுமே நினைத்து வாழும் ஆளுமையுடையப் பெண் பாத்திரமே 'லதா' ஆவாள்.

## சாவித்திரி

தனி மனுஷியாய் நின்று ஆசிரியராய் வேலை செய்யும் 'சாவித்திரி' தன் வாழ்வினைத் தாமே எடுத்துக் கொள்ளும் ஆளுமையுடையப் பாத்திரமாவாள்.

"நீங்க ஆண்மை இல்லாதவர் இல்லே. ஒரு ஆம்பிளை மாதிரி என்னைக் காதலிச்சுட்டு பிறகு அம்பாள் சம்மதிக்கலேன்னு பணத்தின் பின்னாலே ஓடினானே என் காதலன், அவன் தான் ஒரு பேடி – வாழ்நாள் பூராவும் துணையாயிருக்கேன்னு சொல்லிட்டு ரெண்டு ஆம்பிளைகளைப் பார்த்த உடனே என்னைக் கை விட்டுட்டு ஓடினானே, அவன் தான் பேடி யாரோ, ஒருத்திக்காக, உங்க உயிரைப் பத்திக் கவலைப்படாம, தடியன்களோடே சண்டை போட்டுக் காப்பாத்தினேளே. நீங்கதான் உண்மையான ஆம்பிளை என்று உணர்ச்சி பொங்கச் சொன்னாள் அவள்"[29]

யார் ஆண்மைமிக்கவன் என்பதை உணர்த்தியும், காதலன் மீது வெறுப்புக் கொண்டு ஆண்மையில்லாதவராயினும், நல்லவர் என்ற அடிப்படையில் சுயவரம் தேடி கொள்ளும் சிறந்த ஆளுமைப் பாத்திரம் 'சாவித்திரி' ஆவாள்.

## சுகந்தா

பெண்ணுரிமை பேசும் பாத்திரமாகப் படைக்கப்பட்டிருக்கிறாள் சுகந்தா.

> "மாட்டைப் பல்லைப் பிடித்துப் பார்ப்பது போல், கல்யாணச் சந்தையிலே பெண்ணை எப்படி எப்படியெல்லாம் சோதிக்கிறார்கள்! திருமணத்துக்கு முன்பு, கல்லூரியிலே அலுவலகத்திலே யாராவது ஒருத்தரை காதலித்திருந்தாலும் அல்லது பழகியிருந்தாலும் அது பெரிய குற்றமாகப் பெண்மேல் சுமத்தப்படுகிறது. ஆனால் ஆண் மட்டும் திருமணத்துக்கு முன்னும், பின்னும் எப்படியும் வாழலாம். இது என்ன நியாயம்? கற்பு நிலை என்று சொல்ல வந்தால்; இரு கட்சிக்கும் அதை பொதுவில் வைப்போம், என்றான் பாரதி, செக்ஸ் விஷயத்தில் ஓர் ஆணுக்கு உள்ள சுதந்திரம், ஒரு பெண்ணுக்கும் இருக்க வேண்டும் என்று கேட்பது எப்படித் தவறாகும்?"[30]

என்று கூறும் ஆளுமைத் தகுதியுடைய "சுகந்தா" என்ற பாத்திரத்தை 'மண்ணின் மலர்கள்' புதினத்தின் வழியாக அய்க்கண் தருகின்றார்.

## சீதா

'ஜல்லிக்கட்டில் பசுமாடுகள்' என்ற புதினத்தின் ஆளுமைப் பெண் பாத்திரமே சீதா, கணவன் குடும்பத்திற்காக கணவனை இழந்த பிறகும், கணவனின் தம்பியை மறுமணம் செய்து கொள்ளும் சிறந்த பாத்திரமாக அய்க்கண் புதிய நோக்கில் படைத்துக் காட்டுகின்றார்.

## லலிதா

'களத்ர தோஷம்' கொண்ட பெண் ஆதலால் திருமணமே நிகழாமலிருக்கத், தன் முயற்சியின் விளைவால் திருமணம் செய்து கொண்டு, தன் பிள்ளைகளை மிகப் பெரிய ஆட்களாய் உருவாக்கினாள் சமூகத்தை எதிர் கொண்டு வாழ்ந்த ஆளுமைப் பாத்திரமாய் 'தீர்க்க சுமங்கலியில்' வலம் வருகிறாள்.

> "ஜாதகத்திலே களத்ர தோஷம் என்று ஏற்பட்ட துரதிஷ்டத்தையும் பொறுத்துக் கொண்டு, காதலாலே ஏற்பட்ட எதிர்ப்புகளையும், சோதனைகளையும் எதிர்த்து நின்று, வறுமை கஷ்டம் எல்லாவற்றையும் சமாளித்து உழைத்துப் பாடுபட்டு, குழந்தைகளை வளர்த்துப் படிக்க வைத்து உருவாக்கி ஓ! லலிதா! நீ எத்தனை போராட்டக் களத்திலே நின்று ஜெயித்திருக்கிறாய் அம்மா"[31]

என்று கணவனே வியந்து பேசும் ஆளுமைப் பாத்திரமே 'லலிதா' ஆவாள்.

## கல்யாணி

சமூகத்தால் ஒதுக்கப்பட்டு 'பரத்தையர்' குடும்பத்தில் பிறந்த 'கல்யாணி' மற்ற பெண்களை விடவும் ஒழுக்கமாக வாழும் ஆளுமைப் பாத்திரமாய் 'வெள்ளைத் தாமரை' புதினங்களில் திகழ்கிறாள்.

> "இந்த ஜன்மத்திலே, எனக்கு சில பொறுப்புகள் ஏற்பட்டுச்சு ஐயா! முத்துவோட தாயையும் சகோதரிகளையும் காப்பாத்தி, அந்த பெண்களுக்கு கல்யாணம் செய்து வைக்க வேண்டியது அவருடைய கடமையாயிருந்தது... இப்போ அவர் எனக்காக உயிர்விட்ட பிறகு அந்த கடமைகளை

நிறைவேற்ற வேண்டிய தார்மீகப் பொறுப்பு, என்னுடையதாயிட்டுது."[32]

என்று கல்யாணியைத் திருமணம் செய்து கொள்ள நினைத்தவன் இறந்து போக அவரின் பொறுப்பைக் கல்யாணி ஏற்கும் பாத்திரம் மிகச் சிறந்த சமூகச் சீர்த்திருத்தப் பாத்திரமாகும்.

'ஒரு பெண் மனைவியாகிறாள்' புதினத்தில் வரும் 'நந்தினி' 'நிழலில் நிற்கும் நிஜங்கள்' புதினத்தில் வரும் 'ரஞ்சனா', 'மறுபக்கம்' புதினத்தில் வரும் 'சுபா' போன்றோரையும் சிறந்த ஆளுமைக் கொண்ட பெண் பாத்திரங்களாக 'அய்க்கண்' தமது புதினங்களின் வழியாக வெளிப்படுத்தியுள்ளார்.

## துணைப் பாத்திரங்கள்

புதினாசிரியர் அய்க்கண் புதினங்களின் ஐம்பதுக்கும் மேற்பட்ட துணைப் பாத்திரங்களைப் படைத்துள்ளார். புதினங்களில் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்த பாத்திரங்கள் அவசியம் என்பது அறிந்தவை, எனினும் துணைமைப் பாத்திரங்களும் கதையின் மிக முக்கியமான அங்கமாவர்கள். அத்தகைய துணைப் பாத்திரங்களை அய்க்கண் புதினத்தில் தந்துள்ளார். எனினும் அவர் காட்டும் துணைப்பாத்திரங்களில் சிலரே மனத்தில் தங்குகின்றனர். மற்றவர்கள் இடையிடையே வந்து தலையைக் காட்டி விட்டுச் செல்கின்றனர். மனத்தில் தங்கும் துணைமைப் பாத்திரங்கள் சிலவற்றை இங்குக் காணலாம்.

துணைமைப் பாத்திரங்களைச் சில வகையாகப் பிரித்துக் கூறலாம். அவை

1. எதார்த்த நிலைப் பாத்திரம்
2. மரபுப் பாத்திரம்
3. ஒழுக்கக் கேடான பாத்திரம்
4. ஒழுக்க நிலைப் பாத்திரம்
5. காதல் பாத்திரம்

## எதார்த்த பாத்திரங்கள்

இலக்கியங்களில் துணைப் பாத்திரங்களாக வரும் எதார்த்தப் பாத்திரங்கள் சமூகத்தில் உள்ளச் சாதாரண மக்களின் செயல்பாடுகளையே உணர்த்துகிறது. குறிப்பாக அடிப்படை மக்களையும், அரசில் வேலை பார்க்கக் கூடிய மக்களையும் உணர்த்துகிறது பாத்திரங்களாய் அவர்களைப் புதினங்களில் காட்டுவர். அத்தகைய பாத்திரங்கள் எதார்த்த நிலைப் பாத்திரங்கள் எனக் கருத முடிகிறது.

## எழுத்தாளர் ஏகாம்பரம்

'என் மகன்' கதையில் வரும் எழுத்தாளர் ஏகாம்பரம் சிறந்த எதார்த்த பாத்திரமாகக் கொள்ளலாம்.

செல்வம் தன் வாழ்க்கையைப் பற்றிக் கூற முற்பட,

கதை என்றதும், சரேலென்று எழுத்தாளர் ஏகாம்பரத்தின் உள்ளத்திற்குள் பரபரப்பு முளைத்து விட்டது.

> "கதையா? சொல்லப்பா... ரியலிஸ்டிக் கதை பளாட்டுக்காக நான் அலைஞ்சுக்கிட்டிருக்கேன்... என்று, குறிப்பெடுப்பதற்காக, ஜோல்னாப் பையிலிருந்து தாளையும், பேனாவையும் எடுத்து வைத்துக் கொண்டார் ஏகாம்பரம்."[33]

இத்தகையத் துணைமைப் பாத்திரங்கள் கதையின் வளர்ச்சிக்குத் துணை புரிகின்றன என்பது குறிப்பிடத்தக்கது.

## செல்வம்

'என் மகன்' கதையில் மற்றொரு எதார்த்தப் பாத்திரம் குமார். தியாகு திருடனான செல்வத்தைத் திருத்தி தனது வீட்டிலேயே ஓர் உறவினராக வைத்துப் பாதுகாக்கிறான். தியாகுவின் நண்பன் ஆய்வாளர் குமார்.

> "தியாகு! நீ செய்கிற 'எக்ஸ்பெரிமெண்ட்' எனக்கென்னவோ பயமாயிருக்கு... அதிலும் உங்க அம்மாவை நினைக்கும் போது... பின்னாலே எதாவது தவறாக நடந்திட்டா அதுக்கு நானும் ஒரு விதத்திலே பொறுப்பாளியாயிடுவேன், இல்லையா?... அதனாலதான், மறுபடியும் உன்னை எச்சரித்திட்டுப் போகலாம்னு வந்தேன்... நேற்று ஸ்டேஷன் பைலில், இந்த கேடியைப் பற்றிய குறிப்புகளை பார்த்தேன்... இவன் பரம்பரையே குற்ற பரம்பரையாயிருக்கு... இவனோட பாட்டன் கருப்பையாவும் ஒரு கேடி..."[34]

என்று கதையின் ஊடாக வந்து போகும் 'செல்வம்' எதார்த்த பாத்திரத்திற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

## அம்பலக்காரர்

'அவனுக்காக மழை பெய்கிறது' புதினத்தின் மிகக் குறிப்பான பாத்திரம் ஆகும். கதையின் முதன்மைப் பாத்திரமாக விளங்குபவர் தம்பியின் தந்தை ஆவார். எதார்த்தப் போக்கிலும், உண்மை நிலையிலும் அவரின் பாத்திரம் கதையின் முக்கியத்துவம் பெறுகிறது.

தகப்பன் பேர் தெரியாத 'தம்பி'யை மற்றவர்கள் கேலி செய்ய, அம்பலக்காரர்,

> "ஏன்டா, தடிப்பயலே! இந்த பிள்ளையைப் பார்த்து, தகப்பன் பேர் தெரியாதவன்னு சொன்னீயே, உனக்கு மட்டும் தகப்பன் யார்னு நிச்சியமாய்த் தெரியுமா?...

உங்க ஆத்தா சொன்னவரைத்தானே நீ உன் தகப்பன்னு தெரிஞ்சுக்கிட்டிருக்கே?... இந்த தம்பிக்கிட்டே, அவன் ஆத்தா, தகப்பன் யார்னு சொல்றதுக்கு முன்னாலே செத்துப் போயிட்டா... தகப்பன் யார்னு தாய்க்குத் தெரியாட்டிதான் கேவலம்: பிள்ளைக்குத் தெரியலேன்னா கேவலமில்லே... தெரிஞ்சிக்கோ..."[35]

என்று அம்பலக்காரர் எதார்த்தமான மனிதப் பண்பு உடைய பாத்திரமாய் காணப்படுகின்றார்.

## வைரவன்

'விடிவெள்ளி' புதினத்தின் 'வைரவன்' பாத்திரம் எதார்த்தப் பண்புடையப் பாத்திரமாகும். கதையின் நகர்வுக்கு உரியவனாய் காட்சியளிக்கின்றான். குறிப்பாகப் பத்திரிக்கையாளனாய் நின்று பரிணமிக்கிறான்.

> "வைரவனையும் அவன் கொண்டு வந்திருந்த சூட்கேஸையும் மாறி மாறிப் பார்த்தார் அம்பலக்காரர் ....... பத்திரிக்கை நிருபராக இருக்கிறேன்..... எந்தப் பத்திரிக்கை என்று தொடர்ந்துக் கேட்டார் அவர்.
>
> ஏ! பத்திரிக்கை. வாரப் பத்திரிக்கை..." சட்டென்று நிமிர்ந்து உட்கார்ந்தார் அம்பலக்காரர்.............
>
> அது சரி, இப்போ பத்திரிக்கை விற்பனையெல்லாம் எப்படியிருக்கு? முன்னே மாதிரி, இப்போ இல்லைனு பேசிக்கிறாங்களே ?"
>
> ஆமாங்க... இப்போ டி.வி. கேபிள்னு வந்தப்புறம், ஜனங்க பத்திரிக்கை படிக்கிற பழக்கம்

குறைஞ்சிருச்சு... என்று பலவீனமாக குரலில் தெரிவித்தான் நிருபர்"[36]

என்று கதையின் ஊடாக வந்து எதார்த்தப் பாத்திரமாய் காணப்படுகிறார்.

இது போன்று புதினாசிரியர் அய்க்கண் அவர்கள் 'தீர்க்க சுமங்கலியில்' வரும் சந்திரசேகரன். 'நிழலில் நிற்கும் நிஜங்கள்' புதினத்தில் வரும் அம்பலக்காரர், 'பெண் என்பது உடம்பு அல்ல' என்ற புதினத்தில் வரும் ரமேஷ், 'விடை தவறிய கணக்குகள்' என்ற புதினத்தில் வரும் சேகர் போன்ற பலரை எதார்த்த தன்மை கொண்ட பாத்திரங்களாகப் படைத்துள்ளார்.

## மரபு நிலைப் பாத்திரம்

மரபு நிலைப் பாத்திரங்களில் 'நிழலில் நிற்கும் நிஜங்கள்' என்னும் புதினத்தில் வரும் 'மோகனா' குறிப்பிடத்தக்கப் பாத்திரமாகும். கணிகையர் குலப் பெண்ணான மோகனா தன் மகள் ரஞ்சனாவையே விபச்சாரத்திற்கு உட்படுத்தும் சூழலை இப்புதினத்தில் ஆசிரியர் படைத்துக் காட்டியுள்ளார்.

> "தான் தான் நாடக மேடைக்குப் போய் ராத்திரி பூராவும் அரிதாரத்தோடு, தொண்டை ரணமாகும்படி குரலெடுத்து பாடி, ஏதோ நூற்றுக் கணக்கிலே சம்பாதித்தேன்.
>
> மகள், அப்படியெல்லாம் கஷ்டப்படாமல், திரையுலகத்துள் நுழைந்து, பத்து பதினைந்து கால்ஷீட்டிலே, இன்னொருத்தியின் டப்பிங் குரலிலே, லட்சக்கணக்கில் சம்பாதிக்க வேண்டும் என்று துடித்தாள் தாய்.
>
> அம்மா! நீங்கள் கவலைப்படாதீங்க.... ரஞ்சனா மாதிரி எத்தனையோ படியாத மாடுகளையெல்லாம் படிய

வச்சிருக்கேன்... இப்போ நம்ம பெண்ணை ப்ரொடியூஸர் கிட்டே அனுப்பி வையுங்க. அவர் அவள்கிட்டே சாமார்த்தியமாகப் பேசி வசமாக்கி, பணத்தைக் காட்டி மயக்கி, அவளை நடிகையாக்கிடுவார்..."[37]

குல மரபுக்கு ஏற்ப தாய் தன் மகளையே வேறொருவனோடு இணைத்து வைக்கும் 'மரபுவழி' எண்ணம் கொண்டப் பாத்திரமாக அய்க்கண் படைத்துள்ளார்.

## ஒழுக்கக் கேடானப் பாத்திரம்

ஆசிரியர் அய்க்கண் அவர்கள் பாத்திரங்களின் ஆளுமைக்கு ஏற்பவும் அவர்களின் செயல்பாட்டுக்கு ஏற்பவும் பாத்திரங்களின் தகுதியை வரையறைச் செய்யும் முடியும். அத்தகைய பாத்திரங்களில் ஒழுக்கக் கேடானப் பாத்திரங்களைக் கதையின் தேவைக்கு ஏற்பப் படைத்துள்ளார்.

மண்ணின் மலர்கள் புதினத்தில் வரும் சந்திரன், 'இதோ ஒரு சாவித்ரி' புதினத்தில் வரும் சங்கர் ஆகியோர் ஒழுக்கக் கேடானப் பாத்திரங்களாக ஆசிரியர் படைத்துள்ளார்.

## சந்திரன்

குடும்ப வாழ்க்கையில் இடையில் புகுந்து குடும்பத்தைப் பாலியல் வன்மத்தால் சிதைக்கும் பாத்திரமாக 'சந்திரன்' படைக்கப்பட்டுள்ளான்.

சுகந்தா எதார்த்தமாக விழ, திட்டமிட்டு இருந்த சந்திரன் அவளைப் பாலியல் வன்மத்திற்குத் தூண்டி விடுகிறான். இத்தகைய பாத்திரப் பண்பை,

"காரிலிருந்து இறங்கி சுகந்தா வீட்டிற்குள் நுழைந்த போது, "மேடம்! நேத்து நான் கொடுத்த புத்தகத்தைப் படிச்சிடீங்களா?" என்று கேட்டான் சந்திரன்.

ஓ எஸ்.... படிச்சிட்டேன்... அதை வாங்கிட்டுப் போங்க..." என்று சொல்லிக் கொண்டே மாடிப் படியில் ஏறினாள் அவள்.

சந்திரனும் பின்னாலேயே மாடிப்படியேறி அவளுடைய அறைக்குள் நுழைந்தான்.

அங்கே மொஸைக், தரையில் சிந்தியிருந்த தண்ணீரைக் கவனிக்காமல் வேகமாக அதில் காலடி வைத்த சுகந்தா சரேலென்று வழுக்கி விழப் போன போது, பின்னால் வந்த சந்திரன் சட்டென்று பாய்ந்து அவளைத் தாங்கிப் பிடிக்க, அவனுடைய கைகளும் உடலும், அவளுடைய உணர்ச்சித் தூண்டுதல்கள் கொப்பளிக்கும் தசைகளில் உராய்ந்து, ஏற்கனவே எழும்பியிருந்த தாபங்களைக் கிளறி விட, இதற்கென்றே நெடுநாளாகத் திட்டமிட்டுக் காத்திருந்த சந்திரன் பெண்மையின் பலவீன வினாடிகளைப் பயன்படுத்திக்கொள்ள சுகந்தா நன்றாக வழுக்கி விழுந்து விட்டாள்"[38]

என்று அய்க்கண் கதையை நகர்த்துள்ளார்.

சங்கர் என்ற பாத்திரத்தை 'இதோ ஒரு சாவித்திரி' என்னும் புதினத்தில் அய்க்கண் அவர்கள் படைத்துக் காட்டியுள்ளார்.

கணவன் வெளியில் செல்ல, சங்கரை வீட்டிலேப் படுத்துக் கொள்ள அனுமதி தருகிறாள் சாவித்ரி.

‘‘அவர் எங்கே போயிட்டார்?’’ என்று மெதுவாக, தெரியாதது போல் அவளிடம் கேட்டான் சங்கர்

‘‘இன்னிக்கு ஏகாதசி: ராத்திரி பூரா விழிச்சுண்டிருக்கறதுக்காக, வெளியே போயிருக்கார். அவர் எங்கே போனா உனக்கென்ன? நீ படுத்துக்கோ,”

அவளுடைய பருவமேனியின் புத்திளம் மணமும் கவர்ச்சியும் அவனுடைய உடலின் நரம்புகளில் உணர்ச்சிக் கொதிப்பை ஓட வைத்தன. சட்டென்று அவளுடைய கைகளை எடுத்துத் தன் கன்னத்தில் வைத்து கொண்டான் சங்கர்.

‘அவருக்கு நாளைக்குச் சொர்க்கவாசல். நமக்கு இன்னிக்கே’ என்று தன்னை மறந்த மோக வெறியில் அவன் உளர ஆரம்பித்ததும், சட்டென்று இடக்கையால் அவனுடைய கன்னத்தில் ஓங்கி அறைந்த சாவித்திரி, விருட்டென்று எழுந்து கொண்டாள்.

அயோக்கியப் பயலே! என்னடா சொன்னே?” சங்கர் பொறிகலங்கிப் போய்விட்டான்”[39]

இப்பாத்திரத்தின் மூலம் இவற்றின் நல்லப் பெண்களையும் தவறானப் பாலியல் வன்முறைக்குச் செலுத்தும் தன்மையில் அய்க்கண் தமது புதினத்தில் படைத்துள்ளார்.

## ஒழுக்க நிலைப் பாத்திரம்

மக்கள் நல்வழியோடு வாழும் பொருட்டுப் பண்டைய இலக்கியங்கள் ஒழுக்க நிலையுடையச் சிந்தனையை வழங்கின. இக்காலத்தில் புதினங்கள் ஒழுக்க நிலையுடையப் பாத்திரங்களை வெளிப்படுத்தி அத்தகையச் சிந்தைனைகளை வழங்குகின்றன.

### டயானா

'இரண்டாவது ஆகஸ்ட் 15' என்னும் புதினத்தில் ஆசிரியர் 'டயானா' என்னும் பெண் வெளிநாட்டுப் பெண்ணையும், சிறந்த ஒழுக்கமுடையவளாகவும், சமூக சீர்த்திருத்தவாதிகளையும் பாத்திரத்தைப் படைத்துள்ளார்.

> "பார்த்தீங்களா? இந்த கிராமத்திலே ஆண்கள் எவ்வளவு தான் சம்பாதித்தாலும், குடிப்பழக்கத்திலே பணத்தைத் தொலைத்துவிட்டு, ஏழையாகவே தான் வாழ்வார்கள்... என்று வருத்தப்பட்டாள் எலிசபெத்.
>
> அங்கிள்! அந்த முத்தாயியின் புருஷனுக்கு ஒரு நாளைக்கு நூற்றி இருபது ரூபாய் சம்பளம் என்றால், மாதத்துக்கு மூவாயிரத்தி அறுநூறு ரூபாய். ஒரு 'மிடில்' கிளாஸ் ஃபாமிலியாக இருக்க வேண்டி அவனுடைய குடும்பம் தரித்திரக் குடும்பமாய் அவதிப் படுவதற்குக் காரணம், குடிப்பழக்கம் தானே? என்று ஆத்திரப்பட்டாள் டயானா"[40]

இத்தகையக் கருத்தைக் கொண்ட டயானா சிறந்த ஒழுக்கமுடைய வெளிநாட்டு பெண்ணாய் இருந்து இரண்டாவது ஆகஸ்ட் 15–என்னும் புதினத்தில் டயானா சிறந்த ஒழுக்கமுடைய வெளிநாட்டுப் பெண்ணாய் விளங்குகிறாள்.

## அம்பலக்காரர் என்கிற கருப்பையா

வெள்ளைத் தாமரையில் ஒழுக்கநிலைஉடைய பாத்திரமாகவும், நேர்மை கொண்டவராகவும் அம்பலக்காரர் சிறந்த துணைமைப் பாத்திரமாய் விளங்குகிறார்.

வசதியுடன் வாழ்கின்றவர்கள் பல்வேறு தவறுகளுக்கு ஆளாகும் காலக் கட்டத்தில் சிறந்த மனிதனாகவும், கணிகை குலப் பெண்ணைச் சாதாரண பெண்ணாகப் பாவித்து அவள் உணர்வைப் புரிந்து கொள்ளும் பாத்திரமாய்க் காணப்படுகின்றார்.

அவரின் தகுதியைப் பற்றிக் கூற முற்படும் ஆசிரியர்,

> "அவ்வட்டாரத்தில் ஊர்த் தலைவர்களாக விளங்கும் 'மாமூல்' அம்பலக்காரர் இல்லை கருப்பையா. வெறும் அதிகாரமும் முரட்டுத்தனமும் டாம்பீகமும் உள்ளவராக இல்லை அவர்.
>
> பெரும்பாலும் அம்பலக்காரர்கள் மஞ்சுவிரட்டு மாட்டு பந்தயம், தெருகூத்து முதலியவற்றில் மட்டும் ஈடுபாடு கொண்டிருப்பார்கள். இலக்கியம், பக்தி, நுண்கலைகள் ஆகியவற்றில் அவர்களுக்குப் பரிச்சயமே இருப்பதில்லை.
>
> ஆனால், கருப்பையா அம்பலக்காரர் இயல்பாகவே வீரமும், கம்பீரமும் நிறைந்தவராயிருந்ததோடு, பக்தியுணர்வும் இலக்கிய ரசனையும் கொண்டவராயிருந்தார்."[41]

என்று புதினாசிரியர் அய்க்கண் வெளிப்படுத்துவதன் மூலம் சிறந்த ஒழுக்கமுடையப் பாத்திரத்தைக் காண முடியும். இது போன்று பல்வேறு பாத்திரங்களைத் தமது புதினத்தின் வழி வெளிப்படுத்தியுள்ளார்.

## காதல் உணர்வுப் பாத்திரம்

அக உணர்வு ரீதியானப் பாத்திரங்கள் இலக்கியத்தில் தனி முத்திரையைப் பெறுகின்றன. அது மட்டுமின்றி வரலாற்றிலும் சிறப்பிடம் பெற்று இருப்பதைக் காண முடியும்.

'அய்க்கண்' தமது புதினங்கள் முழுவதும் சமூகப் பாத்திரங்களைப் படைத்திருப்பினும் 'காதல்' பற்றிய இன்றைய நிலைப்பாடுகளைத் தெளிவுற தலைமைப் பாத்திரங்கள், துணைப் பாத்திரங்கள் ஊடாகப் புதினத்தில் வெளிப்படுத்தியுள்ளார். அவற்றுள் சிலவற்றைப் பின்வரக் காணலாம்.

'விடிவெள்ளி' புதினத்தில் வரும் அழகப்பன், 'மீனாவின் காதல்', 'தீர்க்க சுமங்கலியில்' வரும் சுந்தரம், லலிதாவின் காதல், புதினத்தில் வரும் சேதுராமன், சுபாவின் காதல், 'விடை தவறிய கணக்குகள்' புதினத்தில் வரும் சுந்தரம் லலிதாவின் காதல். 'இதோ ஒரு சாவித்திரி' புதினத்தில் சாமிநாத குருக்கள், சாவித்திரியின் வித்தியாசமான காதல், 'உயிர்' புதினத்தின் கண்ணன்,மீனா,வின் காதல் 'வயல்' கதையில் வரும் முத்து, மல்லிகா மற்றும் அழகப்பன், பூங்கோதையில் காதல் என காலின் ஆழத்தையும், காதலில் வித்தியாசமான கோணங்களைப் பற்றியும், இன்றையக் காதலின் நிலைப்பாடுகள் எனப் பல்வேறு பாத்திரங்களை 'அய்க்கண்' வெளிப்படுத்தியுள்ளது குறிப்பிடத்தக்கது.

## தொகுப்புரை

அய்க்கண் அவர்கள் தமது புதினங்களின் வழியாகப் படைத்துள்ள பாத்திரங்கள் அனைத்தும் சமூகத்திற்குள் உட்பட்ட பாத்திரங்களாகவேக் காணப்படுகின்றன. எந்த ஒரு பாத்திரமும் கற்பனையாகத் தோற்றுவிக்கப் படவில்லை என்பதை அறிய முடிகிறது.

சமுதாயப் புதினங்களில் இடம் பெற்றுள்ள ஆண். பெண் ஆகிய இருவகைப் பாத்திரங்களின் வழியாக சமூகக் குறைபாடுகளைச் சரியாக எடுத்துரைத்திருப்பது குறிப்பிடத்தகுந்தாகும்.

ஆளுமை உடைய ஆண் பாத்திரங்களுக்கு நிகராக ஆளுமை உடையப் பெண் பாத்திரங்களைப் படைத்திருப்பது சமூகத்தில் பெண்களுக்குரிய மதிப்பீட்டை உறுதி செய்கின்றது.

பால், பருவம், எனப் பல்வேறு வகைபாட்டில் பாத்திரங்களைப் படைத்திருப்பது மட்டுமின்றி துணைமைப் பாத்திரங்களை எதார்த்தம், மரபு, ஒழுக்க நிலை, ஒழுக்கக் கேடு, என பல்வேறு குணாதிசயங்கள், உணர்வுகள் அடிப்படையில் யதார்த்தமாகப் படைத்திருப்பதும் சிறப்பானதாகும்.

## சான்றெண் விளக்கம்


1. The Readers Digest Great Encyclopaedic Dictionary, VOL.III, P.1058
2. மா.இராமலிங்கம், நாவல் இலக்கியம், ப.69.
3. இரா.மோகன், டாக்டர்.மு.வ.வின். நாவல்கள், ப.49
4. அகிலன், கதைக்கலை, ப.111.
5. வை.சச்சிதானந்தன், மேலை இலக்கிய சொல்லகராதி, ப.67
6. அகிலன், கதைக்கலை, ப.30.
7. Maren Edwood, Characters Make your story, P.1
8. Northrop Frye, The Anatomy of Criticism, PP.25-26
9. மோகன், டாக்டர் இரா.டாக்டர் மு.வ.வின் நாவல்கள், ப.57.
10. P.53/ John Hispers, Art Philosophy - 07, The New Encyclopaedia Britanica.
11. தா.ஈசுவரப்பிள்ளை (ப.ஆ), சுந்தரராமசாமி படைப்பிலக்கியம் பன்முக ஆய்வு, ப.97.
12. முத்தையா, டாக்டர் கரு., செயகாந்தன் நாவல்களில் பாத்திரப் படைப்பு, ப.74.
13. அய்க்கண், மண்ணின் மலர்கள், ப.17.
14. அய்க்கண், ஜல்லிக் கட்டில் பசுமாடுகள், ப.164.
15. அய்க்கண், அவனுக்காக மழை பெய்கிறது, ப.5.
16. அய்க்கண், மறுபக்கம், ப.233.
17. அய்க்கண், உயிர், ப.45.
18. Harry Shaw, Concise Dictionary of Literary Terms, P.51.
19. அய்க்கண், உயிர், ப. 20.
20. அய்க்கண், உயிர், பக்.133–134.
21. அய்க்கண், என்மகன், பக்.101–102.
22. அய்க்கண் மண்ணின் மலர்கள், ப.11.
23. அய்க்கண், மறுபக்கம், ப.14.

24. அய்க்கண், அவனுக்காக மழை பெய்கிறது, ப.218.

25. அய்க்கண், இருண்டாவது ஆகஸ்ட் 15, ப.96.

26. அய்க்கண், இரண்டாவது ஆகஸ்ட் 15, ப.97.

27. அய்க்கண், விடை தவறிய கணக்குகள், ப.200.

28. அய்க்கண், கரையைத் தேடும் அலைகள், ப.9.

29. அய்க்கண், இதோ ஒரு சாவித்ரி, ப.75.

30. அய்க்கண், மண்ணின் மலர்கள், பக்.18–19.

31. அய்க்கண், தீர்க்க சுமங்கலி, ப.248.

32. அய்க்கண், வெள்ளைத் தாமரை, ப.150.

33. அய்க்கண், என்மகன், ப.45.

34. அய்க்கண், என் மகன், ப.41.

35. அய்க்கண் அவனுக்காக மழை பெய்கிறது, ப.10.

36. அய்க்கண், விடிவெள்ளி, பக். 16–17.

37. அய்க்கண், நிழலில் நிற்கும் நிஜங்கள், ப.47.

38. அய்க்கண், மண்ணின் மலர்கள், பக். 52–53.

39. அய்க்கண், இதோ ஒரு சாவித்ரி, ப.92.

40. அய்க்கண், இரண்டாவது ஆகஸ்ட் 15, ப.138.

41. அய்க்கண், வெள்ளைத் தாமரை, பக். 44–45.

இயல் – 4

# புதினங்களில் பெண்கள்

## முன்னுரை

ஆண், பெண் இருவரின் இயக்கம் குடும்பமாக அமைவதோடு, அக்குடும்பமே சமுதாயத்தின் அடிப்படை உறுப்பாகவும் இருக்கின்றது. மக்கட்பேறு, வளமை, குடும்பப்பராமரிப்பு, கலாச்சாரக் கூறுகளில் மகளிர் இன்றியமையாத இடம் பெற்றுள்ளனர். சக்தியின் வடிவம் பெண். சிவபெருமான் இடதுபக்கத்தில் பார்வதியாகிய சக்தியைத் தன்னுள் அடக்கி உமையொரு பாகனாகத் திகழ்வது பெண்ணின் இன்றிமையாமை உணர்த்தும் குறியீடு என்பர். ஒவ்வொரு ஆணின் வெற்றிக்குப் பின்னும் ஒரு பெண் உண்டு என்பர். இப்பெண்கள் பற்றிய அய்க்கண் அவர்களின் பதிவுகளைப் புதினங்கள் வழி இவ்வியலில் நோக்கப்பெறுகிறது.

'பெண்கள் நாட்டின் கண்கள் என்பர்'. பெண் சமுதாய வளர்ச்சியே சமூக வளர்ச்சியின் அடித்தளமாகும். இத்தகு பெண்கள் இன்று ஆண் சமுதாயத்திற்கிணையாக வளர்ச்சி பெற்றிருப்பினும், பெண் சமூகத்திற்கு இழைக்கும் கொடுமைகள் தீர்ந்தபாடில்லை.

> "வீட்டுக்குள்ளே பெண்ணைப் பூட்டி வைப்போம் என்ற
> விந்தை மனிதர் தலை கவிழ்ந்தார்"[10]

என்ற கருத்திற்கு ஒப்ப அய்க்கணின் புதினங்களில் பெண் சமுதாயத்திற்கு இழைக்கப்படும் கொடுமைகள் முதல் பெண் சமுதாயத்தின் முன்னேற்றத்திற்கு வழி வரையிலுமாக அய்க்கண் பெண்ணியம் சார்ந்த புதினங்களை உலகிற்குத் தந்திருக்கின்றார்.

கி.பி. 18ஆம் நூற்றாண்டிலிருந்து பெண்களின் நிலைமைகள் பற்றியும் முன்னேற்றச் சிந்தனைகள் குறித்தும் மேல் நாடுகளில் பேசப்பட்டும், எழுதப்பட்டும் வந்தன. பெண்ணிய இயக்கத்தின் அமைப்புகள் முதலில் மேற்கத்திய நாடுகளில்தான் கருக்கொண்டு உருவாயிற்று. இந்தியாவில் குறிப்பாகத் தமிழகத்திலும் பெண்ணியச் சிந்தனைகள் முகிழ்ந்தன. நமது

பண்பாட்டு நாகரிக வளர்ச்சிக் கூறுகளுக்கு ஏற்றவண்ணம் சமுதாயச் சிந்தனையாளர்கள், இலக்கியங்கள், ஊடகங்கள் போன்றவற்றின் மூலமாகப் பெண்ணியச் சிந்தனைகளை முதன்மைப்படுத்திப் பல புதிய பரிமாணங்களின் வழியாக வெளிப்படுத்தி வருகின்றனர். எழுத்தாளர் அய்க்கண் அவர்கள் தமது புதினங்களில் பெண்களின் சிக்கல்களையும் அவற்றிற்குரிய தீர்வுகளையும் வெளிப்படுத்தியிருக்கிறார்.

## பெண்ணியம் சொற்பொருள் விளக்கம்

ஆங்கிலத்தில் Womenism என்பதே பிற்காலத்தில் ‘Feminism’ என்று வழங்கப்பெற்றது. இதனைத் தமிழில் ‘பெண்ணியம்’ என்று வழங்குகின்றோம். ஆங்கிலச் சொல் பெண்ணைக் குறிக்கும் ‘Femina’ என்று இலத்தீன் மொழிச் சொல்லிலிருந்து தோன்றியது. பெண் என்னும் சொல், ‘பெண்களுக்குரிய இயல்புகளை உடையவள்’ என்று பொருள்படும். தமிழில் பெண்ணியம் பெண்நிலை வாதம், பெண் உரிமை ஏற்பு”[1] என்ற பெயர்களில் வழங்குவதாகக் குறிப்பிடுகின்றனர். இதன் வாயிலாகப் ’பெண்ணியம்’ என்ற சொற்பொருளை அறிந்து கொள்ளமுடிகிறது.

பெண்ணியம் என்னும் சொல் புழக்கத்திற்கு வருவதற்கு முன்பு ‘பெண்மை’, ‘பெண்ணியல்பு’ பெண்கள் நிலை என்னும் சொற்கள் வழக்கத்தில் இருந்துள்ளன. பெண்மை, பெண்ணியல்பு என்பனவற்றிற்கும், பெண்ணியம் என்பதற்கும் அடிப்படையில் ஆழ்ந்த வேறுபாடுகளுண்டு. பெண்மை, பெண்ணியல்பு ஆகியன பண்புகள், செயலமைப்புகள் என்பன அடியொற்றி எழுந்த சொற்களாகும். பெண்ணியம் என்பது ‘கோட்பாடு’ அடிப்படையில் எழுந்த சொல்லாகும்.

## பெண்மை

பெண்மை என்பது மகளிர்க்கு யதார்த்தமாக அமைந்துள்ள அல்லது அமைய வேண்டியவை என்று எதிர்பார்க்கப்பட்ட பண்பு நலன்களைக்

குறிக்கும் சொல்லாகும். திரு.வி.க. "பெண்மையாவது யாது? பொறுமை, தியாகம், பிறர்நலம், இரக்கம், அழகு, ஒப்புரவு, தொண்டு முதலியன அமைந்த ஒன்று பெண்மை எனப்படும்"[2] என்பார். உசா நில்சன் "ஒரே வரியில் கூறின், பெண் என்பவள், தொண்டு, தன்னல மறுப்பு, தன்னளிப்பு, தூய்மை, அன்பு, பாசம், தன்னடக்கம், இனிமை, பொறுமை, உறுதி, ஒழுக்கம், பெருமை என்பனவற்றின் உருவமாவாள்"[3] என்கிறார்.

சீனர்கள், "சிறிய பாதங்களில் நடப்பதே பெண்மை என ஆசிரியர் சீனப் பெண்களிடம் கூறுவர். ஒரு ஆண் தன் மீது அன்பு செலுத்த வேண்டும் என்று விரும்பும் பெண்ணிற்கு இவ்வாறு சிறிய பாதங்களுடன் நடப்பதே உரிய வழியாகும்"[4] என்று கருதுகின்றனர். தமிழகத்தில் 'கொடியிடை' பெண்மையின் இலக்கணங்களில் ஒன்றாகும்.

எனவே, பெண்மை என்பது பெண்களின் குண, பண்புநலன்கள், உருவம் ஆகியவற்றைக் குறிக்கும் சொல்லாக அமைந்துள்ளது. பெண் என்பவள் எப்படி அழகாக இருக்க வேண்டும், எத்தகைய பண்புகளைக் கொண்டிலங்க வேண்டும் என்று சமூகம் குறிப்பாக, ஆண்கள் வரையறுத்த இலக்கணம் 'பெண்மை' என்பதன் அடிப்படையாக அமைந்தது.

பெண் சமூகத்தின் வரவேற்பைப் பெறும்வகையில் உடலையும், உள்ளத்தையும் ஒரு குறிப்பிட்ட எல்லைக்குள் பேணிக்கொள்ள வேண்டும் என்பதனை வற்புறுத்தும் முகத்தான் 'பெண்மை' என்பதற்குரிய விளக்கங்கள் காணக்கிடக்கின்றன. 'பெண்ணியல்பு' என்பது பெண்களின் எண்ணங்களையும் செயற்பாடுகளையும் வரையறுக்கும் சொல்லாக அமைந்துவிட்டது.

தமிழகத்தில் வழிவழியாக அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு போன்றவை பெண்ணியல்புகள் என்று கற்பிக்கப்பட்டு வருகின்றன. 'அச்சம்' என்பது பெண்ணுக்குரிய இயல்பாக வரையறுக்கப்பட்டது, 'மடம்' என்பது 'அறிமடம்' என்னும் விளக்கம் பெற்றுள்ளது. 'நாணம்' என்பது

தயக்கத்தைக் குறிப்பதாகும். தொடர் பழக்கத்தில் ஏற்படும் உள்ளுணர்வுச் செயற்பாடு 'பயிர்ப்பு' என்பதாகும்.

"போட்டியுணர்வு, செயலாண்மை, தற்சார்பு, பகுத்தறிவு முதலானவை ஆண்மை மதிப்புகள் எனவும், இம்மதிப்புகளின் மறுபகுதிகளான ஒத்துப்போதல், அடக்கவுணர்வு, சார்ந்து நிற்றல், உணர்வு வயப்படல் முதலியன பெண்ணின் மதிப்புகள்"[5] என்றும் வரையறுப்பர். இம்மதிப்புகள் ஆண், பெண் இருபாலருக்கும் பொதுவானவை. எனினும் பெண்ணியல்பு எனச் சிலவற்றைப் பெண்ணுக்கு ஒதுக்கீடு செய்வதில் சமூகத்திற்கு ஈடுபாடு இருந்திருக்கிறது.

'கற்பு' என்பது வலியுறுத்தப்பட்ட பெண்ணியல்பாகக் காணப்படுகிறது. கற்புடைமை தனிப்பெரும் பண்பாகச் சுட்டப்படுகின்றது. மாசற்ற பெண்மை கலப்பற்ற வாரிசுகளை உருவாக்கித் தரமுடியும் என்னும் எண்ணம், கற்பு என்பது தோன்ற அடிப்படையாக அமைந்தது எனலாம்.

## பெண்ணியம்

இச்சொல் தற்காலத்தில் 'பெண்மை', 'பெண்ணியல்பு' இவைகளினின்று வேறுபட்டு வழக்கில் பயிலத் தொடங்கியுள்ளது. 'பெமினிசம்' என்னும் ஆங்கிலச் சொல்லின் தமிழாக்கமாக இச்சொல் இருக்கின்றது. 'பெண்ணியம்' என்பது புதிய சமூகச் சூழலில் பெண்களைப் பற்றிய புதியப் பார்வையின் அடிப்படையில் எழுந்துள்ள கோட்பாட்டினைக் குறிக்கும் சொல்லாகும்.

பெண் விடுதலை என்னும் முயற்சியின் விளைவாக, பெண்ணியல் துறை, பெண்ணியத்தத்துவம், பெண்ணியம் ஆகியன தோன்றின. 'பெண்ணியில்' என்பது பெண்களைப் பற்றிய பார்வையாகும். பெண்ணியத் தத்துவம் என்பது பெண்களின் விடுதலை, உயர்வு

ஆகியவற்றிற்கு வழிகாட்டும் அடிப்படையாகும். இது பெண்களுக்கானதாகவும், சமூகம், அரசியல், பொருளாதாரம், சமயம், வரலாறு, மொழி, ஆகியவற்றில் பெண்களின் பங்கினை விளக்குவதாகவும் அமைகின்றது. பெண்ணியம் என்பது பெண்ணியல், பெண்ணியத் தத்துவம், பெண்ணியம் என்ற மூன்றும் சேர்ந்த ஒன்றாகும்.

## பெண்ணியச் சிந்தனையின் தோற்றம்

ஆணும் பெண்ணும் இணைந்து வாழத் திருமணம் ஒரு கட்டாய மரபாகத் தொன்று தொட்டு இன்றுவரை உள்ளது. அத்திருமண மரபே பெண்ணடிமைத் தனத்திற்கு வித்திடுகிறது எனபர் தீவிரப் பெண்ணியவாதிகள். இச்சிந்தனை ஏற்பட அடிப்படைக் காரணம் ‘ஆணுக்குப் பெண் கட்டுப்படுத்தப்பட்டவள்’ என்ற நடைமுறையே எனலாம். சமுதாய மரபுகளால் கட்டுப்படுத்தப்பட்ட பெண் இன்று விழிப்புணர்வு பெற்று வருகிறாள். பெண் அடிமையில்லை. அவளுக்கும் ஆசை, உரிமை என்பது உண்டு. சாதிக்கும் ஆற்றல் உண்டு. அவளைக் கட்டுப்படுத்த ஆணுக்கு உரிமையில்லை என்ற குரல் எங்கும் ஒலிக்கின்றது. இதிலிருந்து பெண்ணியச் சிந்தனை தோன்றியுள்ளது.

“திருமணம் செய்தால் தங்களுக்குள்ள உரிமை, அதிகாரம், தன்னிச்சையான சுதந்திரம் என்று எல்லாவற்றையும் கணவன் என்ற ஒரு ஆணுக்காக விட்டுக் கொடுக்க வேண்டியிருக்கிறது. ஆணுக்குப் பெண் சரிசமம் என்ற நிலை திருமண பந்தத்துக்குப் பின்னர் ஏற்படுவதில்லை. தங்களுக்கு எல்லா வகையிலும் சுதந்திரம் வேண்டும் என்பதும், திருமணம் என்ற பந்தத்துக்குக் கட்டுப்பட்டுப் ‘பிடிக்காமல் பிடித்து’ வாழ்க்கையை எதிர்கொள்ள அவர்கள் (பெண்கள்) விரும்பவில்லை”[6] என்பது ஐரோப்பிய பெண்களின் வாழ்க்கையில் வெளிப்படுகின்றது.

இலண்டனில் 1978–இல் பெண்ணியவாதிகள் வெளியிட்ட ஓர் அறிக்கை “பெண்ணியம் ஆரம்பித்து 100 வருடங்களும், பெண்கள்

வாக்குரிமை பெற்று 50 வருடங்களும் கடந்துவிட்டன எனத் தெரிவிக்கின்றது. ஆயினும் நாம் இன்னும் சுதந்திரம் பெறவில்லை. பெண்கள் வாக்குரிமை பெற்றிருப்பினும் ஆண்களுக்குச் சமமான கல்வி, ஊதியம், வேலைவாய்ப்புகள், சட்டசபையில் வாய்ப்புகள் பெறவில்லை"[7] எனத் தெரிவிக்கின்றது.

பெண்ணியம் என்பது பெண்கள் அனுபவிக்கும் எல்லாவிதமான அடக்குமுறைகளை எதிர்ப்பது மட்டுமின்றிப் பெண்களின் மேம்பாட்டுக்குரிய வழிமுறைகளை விளக்குவதாகும். அத்துடன் ஆண், பெண் இருபாலருக்கும் பொதுவான சமமான சமுதாயம் உருவாக பெண்ணிய இயக்கம் துணைபுரிகின்றது. இவ்வியக்கங்கள் பல்வேறு வகையாகச் செயல்பட்டன. "பெண்ணியம் என்பது பெண்ணை ஓர் உயிரி எனச் சமூகம் அங்கீகரித்து அவளுக்கு ஆணுக்குச் சமமான உரிமையும், சுதந்திரமும் கொடுக்கத் தூண்டும் கொள்கையாகும்"[8] என்பர். ஆணுக்குச் சமமான உரிமைகளைக் கோருவதே பெண்ணியத்தின் நோக்கமாகும். 'பெண்ணியம்' பெண்களை நவீனமயமாக்கும் சிந்தனையின் எழுச்சியாகும். "பெண்ணியம் என்பது பெண்கள் மீதான வரலாறு, மத, பொருளாதார, முரண்பாட்டு ரீதியான ஒடுக்குமுறையின் அகநிலை உண்மைகளை ஆராய்ந்து அதாவது பெண்கள் மீதான ஒதுக்குமுறையின் பல்வேறு பரிமாணங்கள், அதற்கான தீர்வுகள், அதை அடைவதற்கான வழிமுறைகள் இவற்றை ஆராய்வதாகும்"[9] என்பர்.

## பெண்ணிய வகைகள்

மேல்நாடுகளில் இதுகாறும் பேசப்பெற்று வரும் பெண்ணியங்களாகக் கீழ்க்கண்டவை வெளிப்படுகின்றன.

1. மிதவாதப் பெண்ணியம் அல்லது தாராளப் பெண்ணியம் (Liberal Feminism)

2. தீவிரவாதம் அல்லது தூய பெண்ணியம் (Radial Feminism)

3. சமதர்மப் பெண்ணியம் (Socialist Feminism)

4. ஆன்மிகப் பெண்ணியம் (Spiritual Feminism)

5. கிறித்தவப் பெண்ணியம் (Christian Feminism)

6. கலாச்சாரப் பெண்ணியம் (Cultural Feminism)

7. மனைப் பெண்ணியம் அல்லது இல்லப் பெண்ணியம் (Domestic Feminism)

8. தலைமைத்துவம் வேண்டாப் பெண்ணியம் (Anarcha Feminism)

9. கருப்புப் பெண்ணியம் (Black Feminism)

10. சூழல் பெண்ணியம் (Eco-Feminism)

என்பனவற்றை அடிப்படைப் பிரிவுகளாகச் சுட்டலாம். சூழலுக்கு ஏற்ப வளர்ந்த பெண்ணியக் கோட்பாடு "இந்தியப் பெண்ணியம்" என்று சொல்லப்படுகின்றது.

## மிதவாதப் பெண்ணியம் (தாராளப் பெண்ணியம்)

பதினெட்டாம் நூற்றாண்டில் அமெரிக்காவிலும், இங்கிலாந்திலும் முதன்முதலாகத் தோன்றிய பெண்ணியக் கருத்துக்கள் மிதவாதப் பெண்ணியமாகும். பெண்ணிய வகைகளிலேயே தொடக்கக்காலப் பெண்ணிய வகையாக இந்த மிதவாதப் பெண்ணியம் வெளியிடப்பட்டது.

இதைப் பெண்ணியத்தின் 'முதல் அலை' என்றும் கூறுவர். இந்தப் பெண்ணியத்தை 'தாராளவாதப் பெண்ணியம்' என்றும் அழைப்பர். மிதவாதப் பெண்ணியமானது நடப்பில் உள்ள சமூக அமைப்பை முன்னேற்றத் தேவையான அளவு விடுதலையையும், மதிப்படையும், தகுதியையும் பெற்றுத்தர முயன்றது. மிதவாதப் பெண்ணியம் கத்தியின்றி, ரத்தமின்றி சட்டத்திலும் மாறுதலைக் கொண்டு வரமுயன்றது.

தனி ஒரு பெண்ணின் வாழ்வில் சிக்கல்களை அடிப்படையாகக் கொண்டு அரசியல் மற்றும் பொருளாதாரத்துறைகளைத் தழுவிப் புரட்சியாகப் பெரும் மாற்றத்தை உருவாக்க முயல்வது மிதவாதப் பெண்ணியமாகும்.

தற்போதைய கலாச்சாரத்தில் காணப்படும் பாலியல் பங்கு என்பது இன்று நேற்று உருவானது அல்ல. பண்டைக்காலத்திலேயே உருவானது. பாலியல் பங்குநிலை மனிதனால் உருவாக்கப்பட்டது. ஆகவே அது மனிதனாலேயே அழிக்கப்படவேண்டும் என்று மிதவாதப் பெண்ணியம் குறிப்பிடுகின்றது. மேலும் 'பெட்டி பிரைபன்' என்பவர் எழுதிய 'Feminaine Mystique' என்னும் நூல் மிதவாதப் பெண்ணியத்தைப் பலப்படுத்தியது.

இருபாலருக்கு இடையே அடக்குமுறை கூடாது. மனித வளர்ச்சிக்குப் பூரண சமத்துவம் சட்டரீதியாகச் செயலாக்கப்பட வேண்டும் என்பது மிதவாதப் பெண்ணியத்தின் கோட்பாடாகும். அத்துடன் வழக்கத்திலுள்ள சட்டங்களையெல்லாம் திருத்த வேண்டும் என்பது மிதவாதப் பெண்ணியத்தின் கருத்தாகும்.

ஒருத்தி பெண்ணாகப் பிறப்பதில்லை, பெண்ணாக உருவாக்கப்படுகிறாள் என்று சிருமான தெபாவர் கருத்தைப் பிரேமா கூறுகிறார்.

"அமெரிக்காவில் 1960–இல் மிதவாதப் பெண்ணியம் ஆதாரப் பெண்ணியம் என்றழைக்கப்பட்டது. 'நௌ' (NOW) என்றழைக்கப்படும் (National Organization of Women) பாதிக்கப்பட்ட பெண்கள், கைவிடப்பட்ட பெண்கள். வன்முறைக்கு ஆளான பெண்கள் மற்றும் குழந்தைகள் காப்பகம் போன்றவற்றை அமைக்க உதவுவதோடு அவர்கள் வாழ்வில் ஒளியூட்டுவதை நோக்கமாகக் கொண்டதே தாராளவாதப் பெண்ணியம். பெண்களுக்கு எல்லா நிலையிலும், சமத்துவம் கொடுக்கப்படவேண்டும் என்பதனைச் சட்டத்தின் வழி கொண்டு வருவதே தாராளவாதப் பெண்ணியத்தின் கோட்பாடாகும்.

## தீவிரவாதப் பெண்ணியம்

தீவிரவாதப் பெண்ணியம் புரட்சிகரமானது. பெண்கள் மட்டும் போராட்டத்தை நடத்த வேண்டும் என்ற நோக்குடையது. தாராளப் பெண்ணியத்தில் இருந்து விலகிவந்த அமைப்பே தீவிரவாதப் பெண்ணியமாகும். பெண்ணியத்தின் முதல் அலை என்று சித்தரிக்கப்பட்ட மிதவாதப் பெண்ணியத்தின் கடைசிக்காலத்தில் அதாவது 1960களில் தீவிரவாதப் பெண்ணியம் என்ற இயக்கம் துவங்கியது. இதைப் பெண்ணியத்தின் 'இரண்டவாது அலை' என்பர். இந்த தீவிரவாதப் பெண்ணியம் 1960–70களில் தீவிரமாகச் செயல்பட்டது. பெண் விடுதலை பெற நீண்ட காலம் பிறக்கும் என்ற வெறுப்புணர்ச்சி மிதவாதப் பெண்ணியத்தை வெறுத்துத் தீவிரமாகத் தலைகாட்டத் தொடங்கியது. பிரான்சு, ஜெர்மன், இங்கிலாந்து, அமெரிக்கா ஆகிய நாடுகளில் இப்பெண்ணியம் மிக வேகமாக வளர்ச்சி பெற்றது. இப்பெண்ணியம் பெண்களுடைய துன்பங்களுக்கெல்லாம் மூலக்காரணம் ஆண்களே என்று கருதுகின்றது. ஆணைப்போலவே பெண்ணிற்கும் ஆளும் திறம், வீரம், வன்மை போன்றவை உள்ளன. எனவே ஆண்மையைப் போக்கி ஆணாதிக்கத்தில் உள்ள தொழில்நுட்ப முறைகளைப் பெண்களுக்குக் கற்றுக்கொடுக்க வேண்டும் என்ற கருத்தை அடிப்படையாகக் கொண்டு இயங்கியது.

1969இல் நியூயார்க்கில் தீவிரவாதப் பெண்ணியம் சமூகப் படிநிலைகளை முற்றிலுமாக உதறித்தள்ள நினைத்துச் செயல்பட்டதோடு பொதுமக்களையும் உள்ளடக்கிய தீவிரவாதப் பெண்ணியம் உருவாகப்பாடுபட்டது. இப்பெண்ணியத்தின் ஒரு முக்கிய கிளையாக 'லெஸ்பியன்' பெண்ணியம் செயல்பட்டது. தீவிரப்பெண்ணியத்தின் செயல்கள் புதியதாகவும், மக்களைச் சுண்டி இழுப்பதாகவும் அமைந்திருந்தன. நடைமுறையில் குடிகொண்டிருக்கும் ஆணாதிக்கப் போக்கிற்கு எதிரான பண்பாட்டைக் கடைப்பிடிக்கத் தொடங்கியது. மேலும் தீவிரவாதப் பெண்ணியம் சிறுவிறு குழுக்களாகச் செயலில் இறங்கியது.

பாதிக்கப்பட்ட பெண்களும் மற்ற பெண்ணிய இயக்கங்களில் தங்களை இணைத்துக்கொண்டனர்.

## சமதர்ம பெண்ணியம்

தந்தை வழிச் சமூக அமைப்பில் ஆண்கள் பெற்ற சொத்துரிமையே பெண்ணடிமைத்தனத்திற்கு வித்திட்டது என்பது சமதர்மப் பெண்ணியவாதிகளின் வாதமாகும். குடும்பம் என்ற அமைப்பு சொல்வதைப் பேணும் தளமாக அமைத்துப் பெண்களை அடிமைப்படுத்தியது. சமூகத்திலும் பெண்கள் எல்லா நிலைகளிலும் ஒடுக்கப்பட்டனர். பெண்களின் உழைப்பை பணமதிப்பீடு அடிப்படையில் தாழ்த்தி ஆண்களைவிடக் குறைந்த கூலி வாங்குபவர்களாக்கியது முதலாளித்துவம்.

பெண்கள் குடும்பத்தில் நாள்முழுவதும் செய்யும் வேலைக்குக் கூலியில்லாமலும், வெளியில் செய்யும் வேலையில் குறைவான கூலியும் பெற்ற நிலை அவர்களை அடிமையாக்கியது. முதலாளித்துவ அமைப்பே பெண்களை அடிமையாக்கியது எனலாம்.

இவர்கள் பெண்ணியம் பற்றிய தீவிரவாதக் கருத்துகளை ஏற்றுக் கொள்ளவில்லை. அதாவது சமூக மறுஉற்பத்திக் காரணியாகப் பெண் இருப்பதே அவளது இரண்டாம்பட்ச நிலைக்குக் காரணம் என்பதை ஒத்துக்கொள்ளவில்லை. பெண் இனப்பெருக்கக் காரணி என்ற இயற்கை நீதியை வைத்துக்கொண்டு அதைச் சுற்றி எழுதப்பட்ட குழந்தைப் பராமரிப்பு, வீட்டுவேலை, சமையல் போன்ற பூரண இல்லறப் பொறுப்பிற்கு அவளை நிர்ப்பந்தப்படுத்துவ தவறு என்பது மட்டுமே இவர்களுடைய வாதம். ஆண்கள் தங்கள் மனப்பான்மையை மாற்றிக்கொண்டு இல்லற வேலையில் பங்கு கொள்ள வேண்டும் என்று சமதர்மப் பெண்ணியவாதிகள் வலியுறுத்துகின்றனர் என்று இரா.பிரேமா குறிப்பிடுகிறார்.

## இந்தியாவில் பெண்ணியம்

இந்தியாவில் பெண்ணியம் குறித்துப் பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன. இந்தியப் பெண்ணியத்தை இரண்டு கட்டங்களாகப் பிரிக்கலாம். முதலாவது இந்தியா சுதந்திரம் அடைவதற்கு முன்பு. இரண்டாவது இந்தியா சுதந்திரம் அடைந்த பின்பு என்பனவாகும். முதல் காலக்கட்டத்தில் ஆங்கிலேயர்களின் ஆளுமைக்கு உட்பட்டுச் செயலாற்றினர். இரண்டாவது காலக்கட்டத்தில் சுதந்திரமாகச் செயலாற்ற முடிந்தது.

## சுதந்திரத்திற்கு முன் பெண்ணியம்

ஆரம்பக் காலக்கட்டத்தில் பெண்ணியச் சிந்தனை வழி விதவையர்களுக்குச் சில உரிமைகள் அளிக்கப்பட வேண்டும், உடன்கட்டை ஏறும் பழக்கம் தடை செய்யப்பட வேண்டும் போன்ற கருத்துக்கள் வலியுறுத்தப்பட்டன. இளவயதுத் திருமணம், பாலியல் வன்முறை ஆகியவற்றை எதிர்த்து இராசாராம் மோகன்ராய் போன்றோர் போராடினர்.

1860களில் ஆங்கில அரசு பெண்ணுக்குப் பத்து வயது முடியும் முன்பு அவளுடன் கணவன் பாலுறவு கொள்ளக்கூடாது எனத் தடை விதித்தது. இளவயதில் இழைக்கப்படும் பாலியல் வன்முறையைத் தடுக்க அரசு சட்டம் இயற்றியுள்ளதிலிருந்து நாம் பாலியல் கொடுமையின் கடுமையை உணரலாம். இராசாராம் மோகன்ராய் கூறியதைச் சண்முகசுந்தரம்,பெண்களுக்கு உரிமைகள் வழங்க வேண்டும், பெண்களும் ஆண்களைப் போல கல்வியைப் பரப்ப வேண்டும். பெண்களும் ஆண்களைப் போல ஆன்மா, மனம், உணர்வு, விருப்பு, வெறுப்புகள் உள்ளவர்கள்தாம் என்கிறார். தொடர்ந்து நாடெங்கும் பெண்ணிய இயக்கங்களும் பெண்ணியச் சிந்தனைகளும் தோன்றின. 1930ஆம் ஆண்டு காந்தியடிகள் நடத்திய சத்தியாகிரகத்தில் பெண்கள் பெரும் பங்காற்றினர்.

## சுதந்திரத்திற்குப் பின் பெண்ணியம்

அந்நியர் இந்நாட்டைவிட்டுச் சென்ற பின் மக்களாட்சி நிலைநாட்டப்பட்டது. பெண்களைத் தாயாய், தெய்வமாய் போற்றும் இம்மண்ணில் பெண்களின் நலனுக்கென்று திட்டங்கள் பல தீட்டப்பட்டன. உரிமைகள் பாதுகாக்கப்பட்டன. ஆண்களுக்கு ஈடாகப் பெண்கள் பல்வேறு துறைகளில் பங்கெடுக்கத் தொடங்கினர்.

## தமிழகத்தில் பெண்ணியம்

தமிழகத்தில் பெண்ணியத்தைச் சங்க காலம், சங்கம் மருவிய காலம், தற்காலம் என மூன்று காலகட்டங்களாகப் பிரித்து நோக்கலாம்.

### சங்ககாலம்

சங்ககாலத்தில் திருமணமே பெண்களின் முதன்மை நோக்கமாகக் கருதப்பட்டது. பெண் பாதுகாக்கப்பட வேண்டியவள் என்ற கருத்து நிலவியது. பாதுகாக்கத் திருமணம் இன்றியமையாததாகக் கருதப்பட்டது. சங்க காலத்தல் பெண்களுக்குத் தங்கள் கணவரைத் தேர்ந்தெடுக்கும் உரிமை இருந்தது. ஆனால் அக்காலத்தில் ஏற்பட்ட போர்களின் காரணமாகப் பல்வேறு சமூகக் கேடுகள் உருவாயின. போர் வெற்றிக்குப்பின் தோல்வியுற்றவரின் மனைவி இழிவுபடுத்தப்பட்டாள்.

### சங்கம் மருவிய காலம்

சங்கம் மருவிய காலத்தில் பெண்களின் நிலை தாழ்ந்திருந்தது. அக்காலத்தில் தோன்றிய சமண, பௌத்த சமயங்கள் பெண்ணை இழிவாகச் சித்தரித்தன. சிலப்பதிகாரம், மணிமேகலை என்னும் காப்பியங்கள் இத்தகைய நிலையைக் கண்டித்துக் கண்டனக் குரல் எழுப்பின. தமிழறிஞர்கள் பலர் தங்களது சொல்லாற்றலாலும், எழுத்தாற்றலாலும் பெண்ணிய வளர்ச்சிக்குப் பாடுபட்டனர்.

## தற்காலம்

அடக்குமுறை எங்குள்ளதோ, மனித உரிமை எங்கு மறுக்கப்படுகிறதோ அங்கு விடுதலை வேட்கை, சமுதாயப் புரட்சி ஆகியன தோன்றுவது இயற்கை, இதனடிப்படையில் சமூகச் சீர்திருத்தவாதிகள் பலர் தமிழகத்தில் தோன்றினர். பெண்ணுரிமைக்காகக் குரல் கொடுத்தனர். அவர்களுள் பாரதியார் முதன்மையானவர்.

'கற்பு' என்ற கோட்பாடே பெண்ணினத்திற்குப் பெருந்தீங்காய் அமைவதைக் கண்டு அதனைக் கண்டிக்க குரல் எழுப்பினார். கற்பு நெறி என வந்தால் ஆண் பெண் இருபாலருக்கும் பொதுவாக வைப்போம் என்றார். பெண்மையைச் சக்தியின் வடிவமாகக் கருதிய இவரைத் தொடர்ந்து, திரு.வி.க., மறைமலையடிகள், பெரியார் போன்றோர் பெண்மையின் மேன்மையைப் போற்றினர். பாரதிதாசன் சமூகத்தில் சரிபாதியாக இருக்கும் பெண்களின் நிலை உயர்ந்தால் தான் ஒட்டுமொத்தச் சமுதாயமும் உயர்வடைய வழி பிறக்கும் எனக் கூறினார். பல்வேறு கவிதைத் தொகுப்புகளின் வாயிலாகக் கைம்பெண் மணத்தை ஆதரித்தார். இளவயது திருமணம், பெண் சிசுக்கொலை போன்றவற்றைக் கண்டித்தார். இதனால் பெண்களிடம் விழிப்புணர்வு தோன்றியது. பல்வேறு பெண்ணிய இயக்கங்களும் தோன்றின.

## பெண்கள் : வரலாற்றுப் பார்வை

தாய்வழிச் சமூகத்தில் பெண்களின் வளர்ச்சியானது அனைத்து வகைகளிலும் மேம்பட்டிருந்தன என்பதைப் பண்டைய வரலாறுகளின் வழியும், திறனாய்வாளர்களின் மூலமும் அறிய முடிகிறது.

> "இனக் குழுக்களாக வாழ்ந்த மக்கள் வேட்டையாடியும், சேகரித்தும் வாழ்க்கை நடத்தி வந்தனர். பகுத்துண்டு வாழ்ந்த இவ்வேட்டைச்

> சமுதாயத்தில் தாய்வழிச் சமுதாயம் தோன்றியது. பெண் உறவும், தாயன்பும் பெண்ணிற்கு முதலிடம் தந்தன"[11] என்பர்.

இனக்குழுச் சமுதாயம் பெண்களைத் தெய்வமாகவும் போற்றின.

> "குடும்பம் உருவாகுவதற்கு அடிப்படையாக அமைபவள் தாய். இத்தாயை மையமாகக் கொண்டு தான் மற்ற உறவுகள் அனைத்தும் உருவாகி வடிவம் பெற்றுள்ளன. உண்மையில் இத்தாயை மையமாகக் கொண்ட குடும்பம் ஏறத்தாழ 9000 ஆண்டுகளுக்கு பிறகுதான் தந்தை என்ற உறவே உருவானது என்று மானிடவியல் அறிஞர் எலிசபெத் பிகூர் கூறுவர்"[12]

மேலும்,

> "குடும்பச் சொத்து தாயின் மறைவிற்குப் பிறகு, மகனுக்கோ அவனுடைய குழந்தைகளுக்கோ சேராது. மாறாக மகள், அவளுடைய குழந்தைகள் ஆகியோருக்கு உரியதாகும். இந்த அமைப்பு 'மருமக்கள் தாயம்' என வழங்கப்பட்டது. தென்தமிழ் நாட்டிலும், கேரளத்திலும் தென்கருநாடகத்திலும் மருமக்கள் தாயமுறை பின்பற்றப்பட்டு வந்தது. கருநாடகத்தில் 'அலிய சந்தானம்' எனக் குறிக்கப்பட்டது."[13]

மேற்கூறிய கருத்தின் மூலம் பண்டையக் காலத்தில் பெண்களுக்குத் தலைமைத் தகுதிகளும், முக்கியத்துவமும் இருந்ததை அறியமுடிகிறது. தந்தை வழிச் சமுதாயத்திற்குப் பிறகே பெண்கள் ஒடுக்குமுறைக்கு உள்ளாக்கப்பட்டனர்.

## பண்டையத் தமிழ்ச்சமூக மகளிர்

தமிழ்ச்சமூக வரலாற்றில் பெண்கள் தனித் தகுதிகளுடனும், பல்வேறு விதிமுறைகளுக்கும் உட்பட்டு வாழ்ந்து வந்துள்ளனர். கற்பு நிலை பற்றியக் கருத்துக்கள் அனைத்தும் சங்க காலத்தைச் சார்ந்தவையே.

> "அச்சம் மடம் நாணம் முந்துறுதல்
> நிச்சமும் பெண்பாற் குரிய"[14]

என்பதன் மூலம் அச்சம், மடம், நாணம் உடையவளே சிறந்த பெண்மையாக போற்றப்பட்டாள் என்பது பெறப்படுகிறது.

பண்டைய கால மகளிர்கள் தமக்கே உரிய சிறந்தத் தகுதிகளைப் பெற்றிருந்தனர். அக்காலத் தமிழர் வாழ்வில் பெண்ணுரிமை பேணப்பட்டது. பெண்ணடிமைத்தனம் தோன்றவில்லை. அக்காலத்திற்குப் பின்னரே அவர்களின் சிறப்புகள் குறையலாயிற்று, ஆணாதிக்க விளைவாலும் சமயங்களின் வாயிலாகவும் பெண்களை வெறுக்கும் போக்குத் தொடர்ந்தன.

> "விறலியர், பாடினி போன்ற மகளிர் ஊர் ஊராகச் சென்று தம் கலைத்திறத்தால் பரிசில் பெற்று வாழ்ந்தனர். விறலியர் ஆடல், பாடல் இரண்டையும் நிகழ்த்தும் இயல்புடையவர். பாடல் பாடுவோரை 'பாடினி' என்றும், அரங்கில் நடிப்போரை 'விறலியர்' என்றும் பிரித்துப் பேசுவர்"[15]

பரத்தையர்களில் காமப் பரத்தையர், இல்பரத்தையர் எனப் பலப் பிரிவினரும் இருந்ததை இலக்கியங்கள் வெளிக்கொணர்கின்றன.

பூதப்பாண்டியன் தேவியாகிய பெருங்கோப்பெண்டு சிறந்த கல்வியறிவு உடையவளாகவும், கற்பில் சிறந்தவளாகவும் விளங்கியவள். கணவன் இறந்ததும், தானும் தீயில் புகுந்து இறக்கத் துணிந்ததை,

"பொய்கையும் தீயும் ஒன்றே"[16]
என்ற புறநானூற்றுப் பாடல் உணர்த்துகின்றது.

"தீதில் நெஞ்சத்துக் காதல் கொள்ளார்
பல்லிருங் கூந்தல்மகளிர் ஒல்லா
முயக்கிடைக் குழைக என் தாரே"[17]
என்று கூறும் சோழன் நலங்கிள்ளியும், பகைவரை வென்று அவர்களைப் புறங்காணேனாயின் என்றேன்.

"சிறந்த பேரமர் உன்கண் இவனினும் பிரிக"[18]
என்றும் மனைவியை மட்டும் விரும்பிய, நேசித்த மன்னர்களைச் சங்கப் பாடல்கள் தெளிவுற விளக்குகின்றன.

## புதினங்களும் பெண்களும்

நவீன இலக்கியத்தின் முன்னோடியான புதினங்கள் பெண்மை சார்ந்த பதிவுகளை வெளிப்படுத்துவதன்றி, பெண்ணுரிமை, பெண் முன்னேற்றம் சார்ந்த கருத்துக்களையும் வெளிப்படுத்துகின்றன. புதினங்கள் பெண் சார்ந்த சிக்கல்களைத் தந்ததும், ஆண், பெண் இருபாலருக்கும் அனைத்துச் செயல்களும் ஒன்றே என்பதையும், தெளிவுற விளக்கியதால், இன்றையப் பெண் சமுதாயம் வளர்ச்சியை எட்டியுள்ளமையையும் புதினங்களில் அறிய முடியும்.

## அய்க்கண் புதினங்களில் பெண்கள்

அய்க்கண் புதினங்கள் அனைத்தும் பெண்கள் சார்ந்தப் பதிவுகள் ஆகும். ஆண்களுக்கு அனைத்து வகையிலும் நிகரானவர்கள் பெண்கள் என்பதையும், சமூகத்தில் பெண்களுக்கு இழைக்கப்படும். அநீதிகளையும், பெண்களுக்குரிய உரிமைகளையும், பெண்களின் முன்னேற்றம் குறித்த கருத்துக்களையும் ஏராளமாக வெளிப்படுத்தியிருக்கின்றார்.

அய்க்கண்ணின் புதினங்களில் பெண்கள் சார்ந்த கருத்தோட்டங்களைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம்.

1. பெண்ணின் பெருமை
2. பெண்களின் சிறப்புகள்
3. ஆணாதிக்கமும், பெண்களும்
4. பெண்ணுரிமை
5. புதுமைப் பெண்கள்
6. பெண்களின் அவலத்திற்குரியக் காரணங்கள்
7. வரதட்சணைக் கொடுமை
8. பெண் சிசுக் கொலை
9. ஏழைப் பெண்களின் நிலை
10. கைம்மை நோன்பும், மறுப்பும்
11. பெண்கள் மீதான தவறான சந்தேகம்
12. விலை மகளிர்கள்
13. பெண்ணிற்குரிய முன்னேற்றப் பாதைகள்

ஆகியன அய்க்கண்ணின் புதினங்களின் வழியாக வெளிப்படுத்தப் பட்டிருக்கின்றன.

## பெண்ணின் பெருமை

ஓர் ஆணின் வளர்ச்சிக்கும் பின்னால் பெண் உள்ளாள் என்பது அனைவரும் அறிந்தது. இத்தன்மை பெண்ணிற்கே உரிய தினச்சிறப்பாகக் கருதப்படுகிறது.

> "உலகத்தில் சிற்சிலருக்குத்தான், கல்யாணமும் மனைவியும் கால்கட்டாகும், தடைக்கல்லாகவும் அமையும். ஆனால் பெரும்பாலானவர்களுக்கு மனைவி தூண்டுகோலாக இருந்து, கணவன் வாழ்க்கையிலே முன்னேறத் துணையாயிருப்பாள்"[19]

என்றும்,

திருமணப் பெண்களின் தகுதிகளையும், பெருமைகளையும்,

> "பொண்டாட்டி என்கிறவள், வெறும் பொம்பிளே இல்லேடா... உன்னை நம்பி வந்தவ... வருஷக் கணக்காய் பொறந்து வளர்ந்த வீடு, உறவு, ஊர் எல்லாதையும் விட்டுட்டு, உன்னை நம்பி உன்னோட வாழ வந்தவ... அவ, நாத்தங்கால் பயிர் மாதிரி:வளர்த்த இடத்திலேயிருந்து பேர்த்து நடற பயிரை எவ்வளவு கவனமாய் பார்த்துகிடறோம்? அது மாதிரி, பொண்டாட்டியைக் கவனிச்சுகனும்மா? நடவு பயிருக்கு உரம், பூச்சி மருந்து எல்லாம் போட்டுக் காப்பாத்துற மாதிரி, பொண்டாட்டியைப் போற்றி வச்சுக்கணும்"[20]

என்றும் சமூகத்தில் பெண்ணின் சிறப்புப் பற்றி ஆசிரியர் வெளிப்படுத்துகிறார்.

> "இன்னொருத்தர் சம்பாத்தியத்திலே சாப்பிடறதுக்கு, உன் பொண்டாட்டி விரும்பலே.... எந்தப் பொண்டாட்டியும் அப்படித்தான், இன்னொருத்தர் சம்பாத்தியத்தில் சாப்பிட அவங்களுக்கு மனசு வருமா?.... மத்தவங்கள் சம்பாத்தியத்திலே பாலும் பழமும் சாப்பிடுவதை விட தன் புருஷன் சம்பாத்தியத்திலே கஞ்சியோ கூழோ குடிக்கத்தான் விரும்புவாங்க"[21]

என்று, பெண்ணின் பெருமைகளைத் தமது புதினங்களில் உணர்த்தியுள்ளார்.

## பெண்ணின் சிறப்பு

தமிழ்ப் பெண்கள் சிறந்த அறிவுச்சுடர்கள், அவர்கள் தெளிந்த சிந்தையை உடையவர்கள் என்பதை,

"தமிழ்ப் பெண்கள் வெறும் உணர்ச்சிக்கு, அடிமைகளாக இயங்கும் சதைப் பொருட்கள் அல்ல. சிந்தனையோடும் பொறுப்புணர்ச்சியோடும் எதையும் வருங்காலக் கண்கொண்டு சீர்தூக்கி நடந்து கொள்ளும்அறிவுச் சுடர்கள்"[22]

என்று தமிழ்ப் பெண்களின் சிறப்பையும்,

"பெண்கள் நாற்றங்கால் பயிர்மாதிரி;
பிறந்த இடத்தைவிட்டு இன்னோர் இடத்திலே
தான் எடுத்து நட வேண்டும். முளைத்து
வளர்ந்த இடத்திலே அந்த பயிருக்கு வாழ்வு
இல்லே! எடுத்து நடுகின்ற இடத்திலே
தான் இதற்குரிய வாழ்வும் உரிமையும்..."[23]

என்றும்,

"பெண் என்றாலே, அவளுக்குத் திருமணம் ஆகணும், குழந்தைகளைப் பெறணும்னு கட்டாயமா, மாமா?.... எத்தனையோ பெண்கள் அன்னை தெரஸாவைப்போல, கன்னியாகவே இருந்து தொண்டு செய்யலியா?... எத்தனையோ டாக்டர்கள் பி.சி.ராயைப் போல பிரம்மச்சாரியாகவே வாழ்ந்து தொண்டு செய்யலியா?..."[24]

என்றும், பெண்கள் அனைத்து வகைகளிலும் சிறப்பிற்குரியவர்களாகவே இருக்கின்றனர் என்பதை அய்க்கண் உணர்த்துவதைக் காண முடிகிறது.

## ஆணாதிக்கமும், பெண்களும்

பெண்கள் பெருமையோடும், சிறப்போடும் வாழ்ந்திடினும் ஆணின் ஆதிக்கத்தால் சிதறுண்டே நிற்கிறார்கள். ஆண்களின் ஆளுமைக்கும், அடிமைத்தனத்திற்கும், பல்வேறு கொடுமைகளுக்கும் பெண்கள்

ஆளாக்கப்படுவதை நடைமுறை வாழ்க்கை எடுத்துரைக்கிறது. அய்க்கண் புதினத்தில்,

> "இந்த நாட்டுக்குச் சுதந்திரம் – வந்துட்டுதுன்னு சொல்லிக்கிட்டிருக்கோமே, உண்மையிலே சுதந்திரம் வந்திருச்சா? சுயராஜ்யத்தைப் பற்றி மகாத்மா காந்தி என்ன சொன்னார் ஞாபகம் இருக்கா? ஓர் இளம் பெண் நிறைய நகைகள் அணிந்து கொண்டு ஓர் ஊரிலிருந்து இன்னொரு ஊருக்குத் தனியாக நடுராத்திரியிலே நடந்து போக முடிகிற காலம் தான் உண்மையான சுயராஜ்யம் என்று சொன்னாரே... இப்போ அந்த சுயராஜ்யம் வந்திருக்கா?"[25]

என்று ஆணாதிக்கத்தின் கொடுமையைக் காந்தியடிகளின் கூற்றினைப் புதினத்தின் வழியாக உணர்த்துகின்றார்.

> "அந்தி மயங்கும் நேரத்தில் அவள் தனியே பஸ்ஸ்டாப்பில் நின்று கொண்டிருக்கும் போது, அவளை ஜனநாட்டமில்லாத அந்த பகுதியில் அவளை வழக்கமாக கேலி செய்யும் இரண்டு இளைஞர்கள் தங்கள் காரில் அவளை பலவந்தமாகத் தூக்கிக் கொண்டு போய், காரிலேயே வைத்து அவளை கெடுத்து விட்டார்கள்."[26]

ஆண்கள் தங்கள் ஆதிக்கத்தால் பெண்களை வலுக்கட்டாயமாகக் கற்பழிப்புக்கு உள்ளாக்குவதைப் புதினத்தின் வழியாக உணர்த்தியும், பாதிப்புக்குத் தீர்வுகள் செல்லும் நிலையில்,

> "அந்தப் பையனுடைய அம்மா, ஒரு மாதர் சங்கத்தின் தலைவியாம். இன்னொருவனுடைய அம்மாவும் ஒரு பெண்கள் முன்னேற்றச் சங்கத்தின் செயலாளராம்.
>
> மாதர் சங்கத் தலைவியும், செயலாளரும் தங்கள் புத்திரச்செல்வங்கள் ஒழுக்கச் சீலர்கள் என்றும்

அவர்கள் மேல் பொய்ப் பழிப் போடுகிறார்கள் என்றும் சத்தியம் செய்தார்கள்.

அவர்களுடைய சத்தியத்துக்கு சாட்சியாக சில அரசியல் பிரமுகர்களின் பெயரையும் சொல்லிப் பயமுறுத்தினார்கள்.

பணக்காரப் பையன்கள் மேல் வழக்குத் தொடர்ந்தால் மேலும் தன் குடும்ப கௌரவம் தான் பாழாகும்... உண்மை தோற்றுப் போகும்"[27]

என்று ஆசிரியர் உணர்த்தும் கருத்தின் அடிப்படையில், ஆணாதிக்கச் சமூகம் பெண்களைப் பலவந்தமாகக் கற்பழித்தாலும், அதற்குரிய தீர்வுகள் அழிவுகளே என்றும், ஆணாதிக்கத்தின் கொடுங்கோலர்கள் உத்தமர்களாக, அரசியல் பிரமுகர்கள், மாதர் சமூக வளர்ச்சியை உருவாக்குபவர்களாக வெளியில் இருந்து கொண்டும் பெண் சமுதாயத்திற்குத் துரோகம் உருவாக்குகிறார்கள் என ஆணாதிக்கக் கொடுமையை 'நிழலில் நிற்கும் நிஜங்களில்' தோலுரித்துக் காட்டுகிறார்.

## பெண்ணுரிமை

நவீன அறிவியல் உலகில் பெண்கள் பல துறைகளில் வளர்ச்சி பெற்று நிற்க, பெண்ணுரிமைப் பிரச்சாரங்களும் உலகெங்கிலும் பரவி நிற்கிறது. அய்க்கண் தமது புதினங்களின் மூலமாகப் பெண்ணிற்குரிய உரிமைகளையும் பெறவும், பெண்ணடிமைத்தனத்திற்கு முடிவு கட்டவும் புதினங்களில் எழுத்துக்களை ஆயுதங்களாகப் பயன்படுத்தியுள்ளார்.

"பெண்கள் அடுப்பூதும் வேலையில் அடக்கி வைத்து குழந்தை பெறும் இயந்திரமாய் வைத்திருந்த காலம் மலையேறி விட்டது. இன்று மாபொரும் நாட்டை ஆட்சி செய்யும் செங்கோலே ஒரு பெண்ணிடம் வந்துவிட்டது. 'பட்டங்கள் ஆள்வதும், சட்டங்கள் செய்வதும் பாரினில் பெண்கள் நடத்த வந்தோம்'

> என்று பாரதி பாடிய புதுமைப் பெண்கள் வெறும் தேன் புஷ்பங்கள் அல்ல யுகப் புஷ்பங்கள், ஆணுக்குப் பெண்இனி இங்கே இளைப்பில்லை என்பதை இன்றைய சமுதாயம் புரிந்து கொள்ள வேண்டும்"[28]

என்று இன்றைய இளைய தலைமுறைக்கு அய்க்கண் அவர்கள் தமது கருத்தை வெளிப்படுத்துகிறார்.

> "மாட்டைப் பல்லைப் பிடித்துப் பார்ப்பது போல் கல்யாண சந்தையிலே பெண்ணை எப்படி எப்படியெல்லாம் சோதிக்கிறார்கள்! திருமணத்திற்கு முன்பு, கல்லூரியிலே அலுவலகத்திலே யாராவது ஒருவரைக் காதலித்திருந்தாலும் அல்லது பழகியிருந்தாலும் அது குற்றமாகப் பெண் மேல் சுமத்தப்படுகிறது. ஆனால் ஆண் மட்டும் திருமணத்துக்கு முன்னும் பின்னும் எப்படியும் வாழலாம். இது என் நியாயம்? 'கற்பு நிலை'என்று சொல்ல வந்தால், இரு கட்சிக்கும் அதை பொதுவில் வைப்போம்' என்றான் பாரதி, செக்ஸ் விசயத்தில் ஓர் ஆணுக்கு உள்ள சுதந்திரம் ஒரு பெண்ணுக்கும் இருக்க வேண்டும் என்று கேட்பது எப்படித் தவறாகும்"[29]

என்று மண்ணின் மலர்கள் புதினத்தின் வழி சமூகத்தின் மீது கேள்வியை முன் வைத்துப் பெண்ணுரிமையைப் பற்றி விவாதிக்கின்றார்.

'ஜல்லிக்கட்டில் பசுமாடுகள்' புதினம் முழுவதும் பெண்ணுரிமைக் கருத்துக்களை அய்க்கண் முன்மொழிகின்றார்.

> "இந்த மண்ணிலே நாடு, மொழி, கலை, நதி எல்லாவற்றையும் பெண்ணாகச் சொல்லித்தான் வணங்குறாங்க.... கல்விக்குத் தெய்வம் சரஸ்வதி தான், ஆனால் நம்ம சரஸ்வதிகளுக்குக் கல்வி

> இல்லை – செல்வத்துக்குத் தெய்வம் லெட்சுமிதான், ஆனால் நம்ம லெட்சுமிகளுக்குச் செல்வம், சொத்திலே உரிமை இல்லை – வீரத்துக்குத் தெய்வம் சக்திதான், ஆனால் நம்ம சக்திகளெல்லாம் அடிமை ஜன்மங்கள்..
>
> இதுக்கெல்லாம் காரணம் எல்லாமே ஆண்கள் ஏற்படுத்திய சட்ட திட்டங்கள், பழக்க வழக்கங்கள் தான்.... விபச்சாரம் என்கிறது ஆணும் பெண்ணும் சேர்ந்து செய்கிற குற்றம். ஆனால் விபசார வழக்கிலே பெண்தான் குற்றவாளி.... வீதியில் நின்று விபச்சாரத்திற்குக் கூப்பிடறவள் பெண்தானம். அவள் தான் குற்றவாளியாம். ஆண், வெறும் சாட்சிதான்...! விபச்சாரம் செய்கிற பெண்ணுக்கு மட்டும் தான் தண்டனை, ஆணுக்கு இல்லை – இது என்ன நியாயம்"[30]

என்று பாத்திரங்களின் வழியாகப் பெண்ணுரிமைக் கருத்தினை எடுத்தியம்புகின்றார்.

தந்தை, தாய் இறந்த பின்னர் அவர்களின் இறப்புச் சடங்கில் கொள்ளி வைக்கும் தகுதி உடையவர்கள் ஆண்களாவர். இது பண்டையக் காலம் தொட்டு இன்று வரை வழக்கத்தில் இருக்கின்ற சமூகப் பழக்கமாகும்.

பெண்ணுரிமைவாதி அய்க்கண் தமது 'ஜல்லிக்கட்டில் பசு மாடுகள்' என்ற புதினத்தின் மூலம் சமூகப் பழக்கவழக்கங்களையே தகர்த்தெறிகின்றார். இக்கதையில் மகளே தந்தையின் இறப்புச் சடங்கில் கலந்து கொண்டு மந்திரம் ஓதி அரங்கேற்றும் புதிய பெண் விடுதலை முன்னேற்றத்தின் செயல்பாடாக இதனை உணர்த்துக்கின்றார்.

> "இப்போ இந்த பெண் வைக்கிற கொள்ளி பெற்றவருடைய சடலத்தை எரிக்கிற நெருப்பு மட்டுமில்லே : பெண் குழந்தைகளைச் சுமையாகக்

கருதுகிற பெற்றோர்களின் மூட எண்ணங்களைச்
சுட்டெரிக்கிற அக்னி இது... இந்த பெண்
செய்யப்போகிற சிரார்த்தம் அவளுடைய அப்பாவைச்
சொர்க்கத்துக்கு அனுப்புகிற வேள்வி மட்டுமில்லை.
எத்தனையோ குடும்பங்களின் நரக வேதனைப்படும்
பெண்களை வெளியே, சமத்துவ உலகத்திற்குக்
கொண்டு வரும் யுத்தம் அது"[31]

என்று தந்தைக்காக மகனின் ஸ்தானத்திலிருந்து ஊரிலுள்ள எல்லோரின் முன்னிலையிலும்,

"வசுவாதீம்ஸ பித்ருன் த்யாத்வா
தத ஸ்ரார்த்தம் ப்ரவர்த்தயே...
விஸ்வான் தேவான் ஓம் பவத்சு ஆவாஹகிஷ்யே
பித்ரு பிதாமக ப்ர பிதாமகான் ஓம் பவத்சு ஆவாஹகிஷயே...
யே அக்னிதக்தா; யே அக்னிதக்தா
யே வா ஜாதா; குலே மம!
பூமௌ தத்தேன த்ருப்யந்து த்ருப்தா யாந்து
பராம் கதிம்!"[32]

என்று பெண்ணே மந்திரம் சொல்லி சகல சம்பிரதாயங்களுடன் புதிய சமுதாயத்தின் மூச்சுக்காற்றாகச் சுட்டிப் பெண்ணுரிமையைப் புதினத்தின் மூலம் வெளிப்படுத்திக் கதையை முடிக்கின்றார்.

## கைம்மை நோன்பும் மறுப்பும்

இன்றைய பெண்ணுரிமைவாதிகளின் கருத்தில் முதன்மையான கருத்தியல் 'விதவை மணமே'. ஆணாதிக்கச் சமுதாயத்தில் ஆண்கள் பல பெண்களைத் திருமணம் செய்து கொள்ளுகின்ற வழக்கம் இன்றும் நடைமுறையில் உள்ளது. "கிளி மாதிரி பெண்டாட்டி இருந்தாலும், குரங்கு மாதிரி வைப்பாட்டித் தேவை'' என்ற ஆணாதிக்கப் பழமொழிகள் தமிழகமெங்கும் பரவி நிற்க, அதற்கு எதிராகத் திருமணமான அன்றே

கணவன் இறந்தால் கூட பெண்ணுக்கு வெள்ளைப் புடவையைத் தந்து கைம்மை நோன்பு மேற்கொள்ள வைக்கின்ற கொடுமையான சமூகச் சூழல் காணப்படுகிறது.

இத்தகு சூழலில் 'விதவை மணம்' எங்கோ ஒரு மூலையில் நிகழ்ந்துக் கொண்டுதான் இருக்கின்றது. இதுபோன்ற பெண்ணுரிமைக் கருத்தினை 'அய்க்கண்' உணர்த்தத் தவறவில்லை.

குறிப்பாக 'வெள்ளைத் தாமரை' புதினத்தில் பரத்தைத் தொழிலில் ஈடுபட்ட குடும்பத்திலுள்ள ஒழுக்க நெறியுடைய பெண், தனக்கான கணவனைத் தேர்ந்தெடுக்க, சூழல் அவளையும் விதவையாக்குகின்றது.

அதனை,

> "ஆத்தா கல்யாணி.... இன்னிக்கு வெள்ளைப் புடவை கட்டிக்கணும் – அதுதான் வழக்கம்... என்று ஒரு பழுத்த கிழவி, பல் இல்லாத குறையிருந்தாலும் அழுத்தமாக எடுத்துச் சொன்னாள்.
>
> ஆயா....! இன்னிக்கு இல்லே, இனிமே என்னைக்கும் நான் வெள்ளைப் புடவை கட்டறதாயில்லே... என்று கல்யாணி அழுத்தம் குறையாமல் அறிவித்தைக் கேட்டு பெண்கள் கூட்டம் திகைத்துப் போய்விட்டது"[33]

என்று கைம்மை நோன்பை மறுத்த பெண்ணுரிமைப் போராளியைக் கல்யாணி பாத்திரத்தின் மூலம் அய்க்கண் உணர்த்துகின்றார்.

'தீர்க்க சுமங்கலி' புதினத்தில் கணவன் இறந்துவிட்டான் என்று சொல்லியும் அவள் பூவோடும், பொட்டோடும் இருப்பதை,

> "கணவன் இறந்த பிறகும், லலிதா பூவோடும் பொட்டோடும் சுமங்கலியாகத் திருமணத்தில் கலந்து கொள்ளலாமா என்று இரு குடும்பங்களின்

உறவினர்களிடையே, குறிப்பாக பெண்களிடையே, வாக்குவாதம் எழுந்துவிட்டது."[34]

என்கிறார் கணவன் இறந்ததும், பூ, பொட்டு எதுவும் வைக்கக்கூடாது என்ற கட்டுப்பாடு இருப்பதையும், அதற்கெதிராகப் பெண் உரிமையை விட்டுக்கொடுக்காததையும் காணலாம்.

விதவைத்தாய் இல்லாத திருமணம் எனக்குத் தேவையே இல்லை என்று சமூகச் சடங்குகளை உடைத்து நிற்கின்ற மகனை

"அம்மா இல்லாமல், நான் கல்யாணம் பண்ணிக்க மாட்டேன். என்னை வளர்த்து ஆளாக்கிய தெய்வம் கலந்து கொள்ள முடியாத கல்யாணம், எனக்குத் தேவையே இல்லை.... கல்யாணத்திலே முன்னே நின்று மாங்கல்யத்தை முதல்லே தொட்டு கொடுத்து ஆசிர்வாதம் செஞ்சு, எங்களை வாழ்த்தி எங்க கல்யாணத்தை அம்மா நடத்தி வைக்கனும்"[35]

என்று பாத்திரம் மூலம் காட்டுகிறார். பெண்ணிற்குரிய முழு உரிமையையும் 'தீர்க்க சுமங்கலி'யில் வெளிப்படுத்துகின்றார்.

சம்பிரதாயத்தின் மறுப்பை, ஆசிரியர்,

"விதவைக்கோலம், சுமங்கலிக் கோலம் என்கிற வெறும் உடை, அலங்காரம் சம்பந்தப்பட்ட விவகாரங்களிலே எனக்கொண்ணும் பெரிய கன்விக்ஷன் இல்லே. லெட் அஸ் கோ எஹெட்"[36]

என்று நவீன மனிதர்களையும், புதுமை நோக்குடையோர்களையும் உணர்த்தி, புதினங்களின் மூலம் மிகச் சிறந்த பெண்ணுரிமை வாதியாக, பெண் சமூகத்திற்கான விடுதலையை நோக்கிய புதினங்களைத் தமிழ் உலகிற்குத் தந்திருக்கின்றார்.

## புதுமைப் பெண்கள்

அய்க்கண் பெண்ணுரிமைக் கருத்துக்களைப் பெண் பாத்திரங்களின் வாயிலாக வெளிப்படுத்துகின்றார். அவரின் பெண் பாத்திரங்கள் 'புதுமைப் பெண்களாய்' காட்சியளிக்கின்றனர்.

> "பெண்ணை இளப்பமாக எண்ணித் தாலியை வேலியாகக் கட்ட நினைக்கும ஓர் ஆண் பிள்ளையை நான் நிச்சயம் கணவனாக ஏற்றுக் கொள்ளமாட்டேன். ஆணும், பெண்ணும் சமம் என்று உணர்ந்து நடக்கும் ஆண் ஒருவன் வரும் வரை, அர்ச்சனா திருமணமாகாமலேயே இருப்பாள்"[37]

என்று கூறும் புதுமைப் பெண்ணின் உரிமைக் குரலையும்,

> "மெட்ராசிலே பெண்கள் முன்னேற்ம், பெண் விடுதலை, பெண்ணுரிமை இயக்கம் எல்லாத்துக்கும் சுகந்தா தான் தலைவி, மாப்பிள்ளைகள் பெண் பார்க்க வர்றதும், காப்பி, டிபன், சாப்பிட்டுட்டு இண்டர்வியூ நடத்துறதும், கடைசியிலே ஊருக்குப் போய் லெட்டர் போடறதாச் சொல்லிட்டுப் போறதும் உங்க பெண்ணுக்குப் பிடிக்கலையாம், ஸ்வீட்,காரம், காப்பி ஓசியிலே சாப்பிட வருகிறவனையெல்லாம், தன் வருங்காலப் புருஷனாய் நினைச்சு காலிலே விழுந்து நமஸ்காரம் பண்றதும், பதில் சொல்றதும் பாடிக் காட்டுறதும் அடிமைத்தனம்னு அடிச்சுச் சொல்லிட்டா..."[38]

என்றும், புதுமைப் பெண் சுகந்தாவை 'மண்ணின் மலர்கள்' புதினத்தில் புதுமை மலராக மலர விட்டுள்ளார் ஆசிரியர்.

## வரதட்சணைக் கொடுமை

வரதட்சணைக் கொடுமை இந்தியச் சமுதாயத்தில் பழங்காலந் தொட்டு நடந்து வருகின்ற சமூகப் பழக்கமாகும். ஆண் வர்க்கம் இத்தகு

நிலையை ஏற்று நிற்கின்ற சூழலுக்கு எதிராக,

"என் பள்ளி பவருவத்தில் –
பத்து ரூபாய்க்கு
ஒரு பொம்மை
அப்பா வாங்கிக் கொடுத்தார்
அது நான் ஆட்டி வைத்தபடி
யெல்லாம் ஆடியது....
இப்போது –
என் கல்யாணப் பருவத்தில்
பத்தாயிரம் ரூபாய்க்கு
ஒரு பொம்மை
அப்பா வாங்கிக் கொடுத்தார்
அது, தான் நினைத்தபடி
யெல்லாம் என்னை ஆட்டி
வைக்கிறதே
ஆண் வர்க்கம் மேலாளுமை செய்யும் அநியாயத்தை
வெளிச்சம் போட்டுக் காட்டியது அந்தக் கவிதை"[39]

என்று புதுக்கவிதை மூலம் வரதட்சணையை எடுத்தியம்பும் ஆசிரியர் வரதட்சணையால் பெண்களுக்கு ஏற்படும் கொடுமை, வரதட்சணை மறுப்பு ஆகியவற்றையும் எடுத்துரைக்கின்றார்.

"சந்தையில் மாடு பார்த்து வாங்குவது போல்தானே, என்னைப் பெண் பார்த்து, உங்களுக்குப்பிடித்தமான அழகும், படிப்பும் இருந்ததாலே கட்டிக்கிட்டீங்க? சந்தையிலே பிடித்த மாட்டின் கடந்த கால சரித்திரத்தைத் தெரிந்து கொள்வது அவசியமா என்ன? அப்படி கடந்த கால சரித்திரங்களையெல்லாம் நான் சொல்லத்தான் வேணுமா"[40]

என்று வரதட்சணையை வெளிப்படுத்தும் நிலையும்,

"அவளுக்கு நெருங்கிய உறவு, ஐம்பது பவுன் நகை, நாற்பதாயிரம் ரொக்கம், அழகு, படிப்பு எதிலும் குறைவில்லை மகன் வழக்கம்போல் போராடிப் பார்த்தான். வழக்கம் போல் கொல் கொல்லென்று இருமி மகனுடைய காதலை கொன்றுவிட்டாள். இருதய நோயாளியான அவள் ஏமாற்றத்தையும் அதிர்ச்சியையும் தாங்கமாட்டாள் என்று வழக்கம் போல் பாசமுள்ள மகன் தீர்மானித்துத் தாய்க்குப் பின்னால் நிற்கும் தாரத்தையும் ஏற்றுக்கொள்ளச் சம்மதித்துவிட்டாள்.

காதல் கானல் நீராய் ஆன பின் ரேவதி மனம் உடைந்து போனாலும், பெற்றோர்கள் பொருத்தமான வரன் தேட.... திருமணத்திற்குச் சம்மதித்துவிட்டாள்"[41]

என்று நிழலில் நிற்கும் நிஜங்கள் புதினத்தில் காதலித்த பெண்ணைத் தாயின் உடல்நிலைக் கோளாறைக் காட்டி வரதட்சணைத் திருமணத்தை ஏற்றுக்கொள்கின்ற சூழலை உணர்த்துகின்றார்.

"எனக்கென்னவோ நம்பிக்கையில்லிங்க... கடைசியிலே, சம்பந்தம் பேசறப்போ எனக்கு வரதட்சணைனு ஒரு பைசா வேண்டாம். உங்க பொண்ணுக்கு அய்ம்பது பவுன் நகை போட்டல் போதும். உங்க மாப்பிள்ளைக்கு ஒரு ஸ்கூட்டர் வாங்கிக் கொடுத்தால் போதும்னு சொன்னாலும் சொல்வாங்க"[42]

என்று 'வெள்ளைத் தாமரை' யில் வரதட்சணையினை ஆண் வர்க்கம் பெறும் நிலையை எடுத்துரைக்கின்றார். பெண்ணைப் பெற்றவர்கள் பெண் திருமணத்திற்கு என பொருள் சேர்க்கும் நிலையை,

"என்னங்க, இந்த பெண் குழந்தையை வளர்த்து, நல்ல மாப்பிள்ளையாகப் பார்த்து சம்பந்தம்

பண்ணனும்னா, எவ்வளவு வரதட்சணை, நகை, நட்டு, சீர் எல்லாம் கொடுக்கனும்? அதுக்கு நாம் இப்பவே சம்பாதித்துச் சேர்த்து வைக்க வேண்டாமா?"[43]

என்று அய்க்கண் உணர்த்துகின்றார். மேலும் வரதட்சணையை மறுக்கும் சீர்திருத்தவாதிகளையும் பாத்திரங்களின் மூலம் தருகின்றார். 'மறுபக்கம்' புதினத்தின் தலைமைப் பாத்திரத்தின் மூலம்,

"வரதட்சணையா?.... நோ... நோ...
வரதட்சணை வாங்குவதோ கொடுப்பதோ
எனக்குப் பிடிக்காது... என் மருமகளை
இத்தனை வருஷமாகப் பாடுபட்டு வளர்த்துப்
படிக்க வச்சு எவ்வளவு செலவு செஞ்சிருக்கே,
அதற்கு நானல்லவா உனக்குப் பணம் கொடுக்கனும்'
என்கிறான் சேது..."

சேது!... வரதட்சணைக் கொடுமைக்கு அருமையான
பதிலடி கொடுத்துட்டியே!..."[44]

என்று வரதட்சணையை எதிர்க்கும் சிறந்த சீர்த்திருத்தவாதிகளை அறிமுகம் செய்து, புதினத்தில் முற்போக்கு நிலையையும் உணர்த்துகின்றார்.

## பெண் சிசுக்கொலை

ஒரு சில சிற்றூர்களில் பெண் குழந்தை பிறந்தவுடன் அதனை அழிக்க முற்பட்டனர்; அழிக்கவும் செய்தனர். அரசு அதனை எதிர்த்துப் பல்வேறு சட்டங்களைக் கொண்டு வந்தது. எனினும் சில சிற்றூர்களில் இன்றும் 'பெண் சிசுக் கொலை' அரங்கேறியே வருகிறது. அய்க்கண் அவர்கள் பெண் சமூகத்திற்கு எதிரான இந்நிகழ்வைப் பதிவு செய்கின்றார்.

"அவள் பெண் தானே?... அவள் வளர்ந்து பெரியவளாகிக் கல்யாணத்துக்கு நின்றால், அவளை

கரை சேர்க்கப் பணம் வேணுமே? நகை வேணுமே?...
இந்த பெண் குழந்தையாலே நமக்கு என்ன லாபம்னு
அவளைப் பன்னிரண்டு வயசிலேயே
கொன்னுட்டாங்க"[45]

என்று பெண் சிசுக்கொலையின் கொடுமையையும்,

"இந்தக் காலத்திலே, பெண் குழந்தைகளைப்
பன்னிரண்டு வயது வரை வளர்த்துக்கொள்வது கூட
இல்லை. கருவிலே இருக்கிற போதே ஸ்கேனிங்
பார்த்து, அமீனியோ சென்டிஸிலம் டெலமட் பண்ணி,
பெண் குழந்தைகளைக் கொன்னுடறாங்க.... போன
வருஷம் பம்பாயில் மட்டும் நாற்பதாயிரம் பெண்
கருக்களை அழிச்சிருக்காங்கனு பேப்பரிலே செய்தி
வந்திருக்கு"[46]

என்று பெண் சிசுக் கொலை இன்றைய நவீன வளர்ச்சிக்கு ஏற்ப நிகழ்வதை அய்க்கண் பதிவு செய்துள்ளார்.

"ஆஸ்பத்திரி வசதி கிடைக்காத ஏழைகள் நம்
தமிழ்நாட்டில் உசிலம்பட்டி வட்டாரத்தில் பெண்
குழந்தை பிறந்ததும் எருக்கம் பாலைக் கொடுத்துக்
கொன்னுடறாங்களாம்"[47]

என்று, இன்றும் ஊரகங்களில் நிகழும் சிசுகொலைப் பற்றியும், பெண்ணுரிமையின் வளர்ச்சிக்கு எதிராக நிகழும் வன்மத்தையும் ஆசிரியர் வெளிப்படுத்துகின்றார்.

## ஏழைப் பெண்களின் நிலை

பண்பாட்டு ஒழுக்கத்தினில் தமிழ்ப் பெண்களுக்கு நிகர் எவருமில்லை என வாதிடும் பலரும், ஏழைகளாய்ப் பிறந்த பெண்ணாயின் மனைவியாய் ஏற்றுக்கொள்வதில்லை, மாறாக 'வைப்பாட்டி' யாக வைத்துக் கொள்வதையே விரும்புகின்றனர். இது முற்றிலும் தவறான

ஒழுக்கமாகும் என அய்க்கண் ஏழைப் பெண்களின் அவலத்தைச் சுட்டுகின்றார்.

> "ஒரு ஏழை அழகாயிருந்தா, அவளை வைப்பாட்டியாக வச்சக்கத்தான் நினைப்பாங்களே ஒழிய, தாலி கட்டி மனைவியாக்கிக்க மாட்டாங்க... அதிலும் நான் கொஞ்சம் படிச்சிருக்கிறதினாலே எனக்குக் கெடுதல் தான் அதிகம் – இங்கே நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவங்க, இந்த ஏழையைக் கட்டிக்க விரும்ப மாட்டாங்க, 'இவ ரொம்ப படிச்சவ; சொல்ற பேச்சைக் கேட்க மாட்டானு என்னை ஒதுக்கி விடுவாங்க...."[48]

என்று ஆசிரியர் ஏழைப் பெண்ணின், வாழ்வு நிலையின் கொடுமையை வெளிப்படுத்துகின்றார்.

பெண்ணைப் பெற்றவர்கள் மிகுந்த துயரத்திற்குள்ளாகின்றனர் என்பதை,

> "என்னைப் பொறுத்த வரையில், பெண்களைப் பெற்றவங்க, அன்றாட வாழ்க்கையிலே ரொம்பக் கஷ்டப்படுறதனாலே, பெண் குழந்தைகள் என்றாலே, பெற்றவங்களுக்கு ஒரு விரக்தியும் வேதனையும் தான் தோணுது..."[49]

என்று வேதனையையும் புலப்படுத்துகிறார்.

## பெண்கள் மீதான சந்தேகம்

திருமணத்திற்குப் பின்னர் பெண்களுக்கு ஏற்படும் கொடிய தொந்தரவுகளில் ஒன்று ஆண்களின் சந்தேகப் பார்வை. இன்றைய நவீன உலக வாழ்விற்கு எற்பச் சிந்திக்காது பழைய மரபில் ஊறிய ஆண் வர்க்கம் பெண்களைப் பல கொடுமைகளுக்கு ஆளாக்குவதை ஆசிரியர் உணர்த்துகின்றார்.

‘பெண் உடம்பு அல்ல’ என்ற குறும்புதினத்தில் இதனைத் தெளிவுற அமைத்துள்ளார். ரேவதியை முன்பு வேறொருவன் காதலித்த நிலையைத் தெரிந்துக்கொண்ட சுந்தரம்,

> “மூச்சு விடுவதற்கு எளிமையாக இருக்கும்படி தலையணையை உயரப்படுத்திப் படுக்க வைப்பான். முதுகுப்புறத்திலும் ஆதரவாக அமுக்கித் தேய்த்துக் கொடுத்து, அவள் அமைதியாகத் தூங்கிய பிறகு தான் அவன் தூங்குவான்.
>
> ஆனால் இப்பொழுது, அவளைத் தொட்டுப் பணிவிடை செய்ய அவனுக்குத் துடிப்பு வரவில்லை.
>
> இதே பணிவிடைகளை ரமேஷும் அவளுக்குச் செய்திருப்பானோ? என்னவோ.”[50]

என்று சந்தேப்படுவதை ஆசிரியர் பாத்திரங்கள் மூலம் தந்தும், அதன் பாதிப்பால் ரேவதி,

> “இங்கே... பாருங்க... இதுதானே நீங்க படித்துப் பார்த்த கடிதம்? எனக்கு வந்த கடிதத்தை நீங்க ஏன் படிச்சீங்கன்னு நான் கேட்கலே... ஒரு கணவருக்கு அவ்வளவு உரிமை இருக்குங்கிறதை நான் புரிஞ்சிக்கிடறேன். ஆனா அந்த உரிமையை எடுத்துகிட்ட நீங்க, கணவர் என்கிற ஸ்தானத்தில் கடமையை விட்டுட்டீங்களே? கடிதத்தில் இருக்கிற விஷயங்களைப் பற்றி கணவன் என்கிற முறையிலே உங்க மனைவிகிட்டே பளிச்சினு கேட்டிருந்தா, உங்களுக்கு அந்த உரிமை இருக்குங்கிறது நிருபணமாகிறது.. ஆனா, யாரோ ஒருவன் உங்களுக்கு அறிமுகமே இல்லாத ஒருவன் எழுதிய கடிதத்துக்கு இவ்வளவு முக்கியத்துவம் கொடுத்து, என்னை ஒரே

ராத்திரியிலே அன்னியப்படுத்திட்டீங்களே?"[51]

என்று ஆண் மகன் சந்தேகப்பட, பெண்மகள் துடித்துப் புலம்பும் சூழலை ஆசிரியர் தருகின்றார். இவ்வகைச் சந்தேகத்திற்கு முற்றுப்புள்ளி வைக்கின்றார்.

> "இந்தக் காலத்தில் காலேஜ்களிலே இளைஞர்களும், இளம் பெண்களும் கலந்து படிக்கிறாங்க. பல பொருளாதார அவசியங்களினாலே பெண்களும் ஆபிஸ்களில் ஆண்களோடு சேர்ந்து வேலை பார்க்க வேண்டியிருக்கு. இன்னிக்குப் பல பொது இடங்களிலும் ஆண்களும், பெண்களும் பேசிப் பழகி ஒன்றாக நடமாட வேண்டியிருக்கு. அப்போ ஒருத்தருடைய அழகிலோ, குணத்திலோ மனம் ஈடுபட்டு அல்லது சூழ்நிலையால் உணர்ச்சியால் தூண்டப்பட்டு ஒருத்தரையொருத்தர் காதலிக்கிறாங்க. அவர்களில் சில பேர் தான் கல்யாணம் செய்து கொள்ள முடிகிறது. பலர் காதலில் தோல்வியடைந்து இன்னொருத்தரை மணந்து வாழ்கிறாங்க. இவர்களையெல்லாம் கற்பிழந்தவங்கன்னு சொல்லிட முடியுமா? ஏன் நீ கூட நம்ம ஆபிசிலே வேலை பார்த்த ஊர்வசி மேலே எவ்வளவோ ஆசைப்பட்டுத்தான் காதலிச்சே! ஆனா அந்தக் காதல் நிறைவேறலே. இப்போ ரேவதியை மணந்து கொண்டு சந்தோஷமா வாழலியா? இதே மாதிரித்தானே பெண்களுக்கும்...."[52]

என்று இன்றையச் சமூகச் சூழலில் எல்லோருக்கும் நிகழ்கின்ற பொதுவான நிகழ்வுகளைத் தவறாகப் பார்த்து சந்தேகப்படக் கூடாது என்பதையும் அய்க்கண் வெளிப்படுத்துகிறார்.

## அலுவலகத்தில் பெண்களின் நிலை

> "மாதர் தம்மை இழிவு செய்யும்
> மடமையைக் கொளுத்துவோம்"[53]

என்றான் பாரதி. பெண்களுக்குக் குடும்பத்தில் மட்டுமல்ல பேருந்தில் பயணம் செய்வது முதல் அலுவலகத்தில் பணி புரிவது வரையும் பல்வேறு நெருக்கடிகளுக்கும், பாலியல் வன்முறைக்கும் உள்ளாவதை அறியலாம்.

> "பெண் குமாஸ்தாக்கள் தேவை என்று விளம்பரம் செய்த இரண்டு மூன்று கம்பெனிகளின் இன்டர்வியூக்களுக்குப் போயிருந்தாள் ரஞ்சனா.
>
> ...................... அந்தக் கம்பெனிகளில் வீற்றிருக்கும் மானேஜர்கள் பெண்களின் படிப்பு, தகுதி, திறமையை விட, அவர்களுடைய உடலழகு, அவயங்களின் கவர்ச்சி முதலியவற்றையே ஆழமாகக் கவனிக்கிறார்கள் என்பதை ரஞ்சனா புரிந்துக்கொண்டாள்"[54]

என்றும்,

> "கம்பெனிக்குக் குமாஸ்தாக்கள் தேடுவதை விட தங்களது 'ஜாலி'க்கு 'கம்பெனி' தேடிப்பிடிப்பதையே, பல மானேஜர்கள் முக்கிய நோக்கமாகக் கொண்டிருந்தார்கள்"[55]

என்றும், அலுவலகத்தில் பெண்களுக்கு ஏற்படும் பாலியல் வன்மத்தையும் குறிப்பிடுகின்றார்.

> "சில சமயங்களில் ஆபிஸ் நேரம் முடிந்து, மானேஜரோடு முக்கிய வேலையாக வெளியே ஹோட்டல்களிலே தனியாகத் தங்க வேண்டியிருக்கும் சம்மதமா?'' என்று குழைந்து

> கொண்டே, அவளுடைய வாளிப்பான முன்கையை மெதுவாகத் தொட்டார் அவர். கையைச் சரேலென்று உருவிக்கொண்டு அவர் கன்னத்தில் அறையாத குறையாக, புயலாக எழுந்து சீறினாள் ரஞ்சனா.
>
> 'அதுக்குப் பணம் வாங்குகிற பெண்கள், தெருவிலே நிறையப் பேர் இருக்காங்க, அவங்களைத் தேடி போங்க, இப்படிப் பொம்பளைப் பொறுக்கிறதுக்குன்னு ஒரு ஆபிஸும், ஒரு மானேஜர்... த்தூ ..." காரி உமிழ்ந்து விட்டு வந்தாள்"[56]

என்று மேலாளரைக் காரி உமிழ்ந்து விட்டு வெளியேறுகின்ற சிறந்த பாத்திரத்தைப் படைத்திருக்கின்றார் சில அலுவலகங்களில் தினம் தினம் இத்தகையக் கொடுமை நிகழ்கிறது என்பதையும் ஆசிரியர் தருகின்றார்.

## பெண் அவலத்திற்குரிய காரணங்கள்

பெண்கள் அனைத்துப் பாதிப்புகளுக்கும் உள்ளாகுவதற்குரிய காரணி உடற்கூறே ஆகும். பிள்ளையைப் பெறுகின்ற தகுதியே சிறந்ததாயின் அதுவே பெண்ணினத்தை அழிக்கவும் செய்கின்றது. இதனை,

> "பெண்ணுக்கு உரிமை கேட்கலாம். விடுதலை கேட்கலாம். ஆனால் சமத்துவம் கேட்கக்கூடாது சாந்தா!.... ஷி கானாட் பி ஈ·க்வல் டு மேன். அவளைச் சமமாக ஆண்டவனே படைக்கலே. ஆணை ஆணாகப் படைச்சிருக்கான்; பெண்ணைப் பெண்ணாத்தான் படைச்சிருக்கான் – அவர்களைச் சமமாகப் படைக்கலே ஆண்டவன்..."[57]

என்றும்,

> "ஆணும், பெண்ணும் சமம்னு சொன்னியே, இப்போ என்ன ஆச்சு, உன் பாய் ஃப்ரண்ட் செய்த தப்புக்குச்

சாட்சியே இல்லை, ஆனா நீ செய்த தப்புக்கு, உன் வயிற்றிலேயே சாட்சி ஏற்பட்டிருக்குப் பாத்தியா?"[58]

என்று பெண்களின் அவலத்திற்குரிய காரணியாக 'குழந்தை பேறு' பெறும் தகுதியே, அவளை அழிக்கவும் செய்கிறது என்பதை விளக்குகின்றார்.

## பரத்தையர் வாழ்வு

பண்டையக் காலத்திலிருந்தே 'பரத்தையர் தொழில்' இருந்ததை இலக்கியங்களின் மூலம் அறிகிறோம்.

"பரத்தை வாயில் நால்வர்க்கும் உரித்தே"[59]

என்று தொல்காப்பிய இலக்கணம் குறிப்பிடும் விதிப்படி பரத்தையரை ஆண்கள் வைத்துக்கொள்வது இயல்பாகவே கருதப்பட்டது. திருவள்ளுவர் காலத்தில்தான் 'பரத்தைத் தொழில்' தவறானது என்பது சமூகத்தால் கருதப்பட்டது.

அய்க்கண் புதினத்தின் வழி சிற்றூர்களில் தேவரடியார்களாய் இருந்தவர்கள் பரத்தையர்களாய் மாறிய சூழலையும், வரலாற்றையும் அறிய முடிகிறது.

"மோகனாம்பாள், தஞ்சாவூரிலிருந்து கோலங்குடி அடைக்கலநாயகி அம்மன் கோயிலுக்கு அந்த காலத்தில் தேவரடியாளாக வந்தவள். திருவிழாக் காலங்களில் பத்து நாளும், மற்ற விசேஷ நாட்களிலும், கோயில் முன் உள்ள மேடையில் 'சதிர்' ஆடுவதும், திருவீதியுலா வரும்போது அம்மனுக்கு வெண்சாமரம் வீசி நடந்து வருவதும், தேவரடியாளுடைய முக்கிய கடமைகள்.

கோயில் ஊழியம் பார்ப்பதற்காக, ஆண்டுக்கு மொத்தமாக நெல்லும், சம்பளமும், தினசரி தளிகைச் சாதமும் ஊதியமாகக் கொடுப்பார்கள்.

சுற்றுப்புறங்களில், தனியாகத் தேவரடியாள் நியமித்துக்கொள்ள நிதி நிலைமை இடம் தராத சிறு கோயில்களுக்கும், கோலங்குடிக்கோயில் நிர்வாகஸ்தர் அனுமதியுடன் போய், சதிர் ஆடி சன்மானம் பெற்றுக்கொள்வதும் உண்டு.

பின்பு காலப்போக்கில், கோயில்கள் நிலங்களையும், சொத்துக்களையும் இழந்து வருமானம் குறைந்து, 'தேவர்' செல்வாக்கு க்ஷீணமடைந்து போது, தேவரவடியார்கள் ஊரடியார்களாக மாறும் நிலை ஏற்பட்டது.

கோயில் சந்நிதியில் மட்டும் நடனமாடியவர்கள், பணக்காரர்களின் 'சவுக்கை'களில் ஆடியும், அம்மன் இல்லாமல், தனியே 'திருவீதியுலா' வந்து தம் அழகால் இளைஞர்களின் ஆசைக்குச் சாமரம் வீசியும் வாழ ஆரம்பித்தார்கள்.!"[60]

என்று அய்க்கண் அவர்கள், இறைவனின் அடியார்களாக வந்தவர்கள். தவறான ஒழுக்கத்திற்கு ஈடுபடுத்தப்படும் சூழலுக்கு உட்பட்டார்கள் என்று குறிப்பிடுவதைக் காணலாம்.

இத்தகு பரத்தைத் தொழிலில் ஈடுபடுவோர் அனைத்துப் பாதிப்புகளுக்கும் உள்ளாகுகின்றனர். பரத்தைத் தொழிலை விட்டு சராசரிப் பெண்ணாக வாழ முற்படினும் சமூகத்தில் சிலர்அவர்களை வாழ விடுவதில்லை என்பதையும் 'வெள்ளைத் தாமரை'யில் தெளிவுற உணர்த்துகின்றார். பரத்தைத் தொழிலைத் தாய் விரும்புவதும், மகள் மறுத்து நிற்பதும் 'நிழலில் நிற்கும் நிஜங்களில்' வெளிப்படுத்துகிறார்.

## பரத்தை பற்றிய கருத்தியல்

'அவனுக்காக மழை பெய்கிறது' புதினத்தில் பரத்தையைப் பற்றி,

> "அவங்க உடம்பாலே தான் வேசி; மனசால ரொம்ப நல்லவங்க. ஆனால் இங்கே எத்தனையோ பேர் மனசாலே வேசியாயிருக்காகளோ!"[61]

என்று உணர்த்துகின்றார்.

## பரத்தைக் குடும்பமும், சிக்கல்களும்

சமூகம் பரத்தைக் குடும்பத்தைச் சார்ந்தவர்களை எவ்வாறு பார்க்கிறது என்பதனை,

> "விலைமாது குடும்பத்தில் பிறந்த ஒரு பெண்ணை, குடும்ப கௌரவத்தைப் போற்றும் எந்தக் குடும்பத்துப் பையனுக்கும் தாலிக்கட்டி மனைவியாக்கிக் கொள்ள சம்மதிக்க மாட்டார்களே?
>
> ஒரு வைப்பாட்டியின் மகளை, வைப்பாட்டியாகத்தான் ஏற்றுக்கொள்வார்களே ஒழிய, 'வொ.ஃய்ப்பாக அங்கீகரிக்க மாட்டர்களே"[62]

என்று பரத்தை குடும்பத்திற்கு ஏற்றவள் அல்ல என்றும்,

> "வெறும் சோறும் துணியும் மானத்தோட கெடச்சாப் போதும்னு நெனக்கிறவங்களும் இருக்காங்க. வெறும் சோறு பத்தாது! பால் சோறு சாப்பிடனும்; வெறும் துணி பத்தாது; பட்டுத்துணி வேணும்னு நெனக்கிறவங்களும் இருக்காங்க தெரியுமில்லே?.... மோகனா எப்படி வாழ்ந்தவள்னு உனக்குத் தெரியாது. வெறும் சோறு தண்ணி துணிமணியைப் பெரிசா நினைக்கிற குடும்பம் இல்லே அது. ரொம்ப சுகமாய்

ஆடம்பரமாய் வாழ நினைக்கிற சாதி – அதுக்காக எதையும் செய்யத் துணிகிற பழக்கம் உள்ளவங்க..."[63]

என்று சமூகத்தில் பரத்தையர்களைப் பற்றிய தவறான மதிப்பீட்டினை மக்கள் எவ்வாறு கொண்டுள்ளனர் என்று வெளிப்படுத்துகிறார்.

பரத்தைக் குடும்பத்தைச் சேர்ந்தப் பெண் மருமகளாக வந்தால் சமூகம் அதனை மறுக்கிறது என்பதை,

"அந்த வீட்டுக்கு ரஞ்சனா மருமகளாக வந்துவிட்டால், சமுதாயத்தில், அந்த வீட்டின் மதிப்பு போய்விடும். அந்த குடும்பத்தின் தரம், சாதி சமூகத்தால் மறுபரிசீலனைக்குள்ளாகி, கண்டனத்துக்கும் பகிஷ்காரத்துக்கும் ஆளாக நேரிடும்"[64]

என்று சமூகம் தவறாகவே மதிப்பிடுவதைச் சுட்டுகிறார் ஆசிரியர்.

## பரத்தையர்களின் வாழ்வு

பரத்தைத் தொழிலில் ஈடுபடும் பெண்கள் அத்தொழிலை விடுவதாகவுமில்லை. இச்சூழலும் அவர்களின் குடும்பத்திலேயே நடக்கிறது. பரத்தை ஒருத்தி தங்கள் தொழிலைப் பற்றி பின்வருமாறு,

"எங்கத் தொழிலுக்கு என்ன குறைச்சல்? இந்தத் தொழிலிலே, நாலு பேருக்குத் தெரிகிற மாதிரி, ஒசந்து வாழ்றதாலே, இதிலே இருக்கிற குறைகள் எல்லாம் பளிச்சினு வெளியே தெரியுது, சந்திரனிலே இருக்கிற இளங்கம் தெரிகிற மாதிரி... இந்தக் காலத்திலே, எத்தனையோ பொம்பளைகளைப் பத்தியெல்லாம் எனக்குத் தெரியும். வேற உத்தியோகம் பார்க்கிற பொண்ணுகளும் பத்தரைமாத்து தங்கங்களா?.... ஒவ்வொன்னையும் துருவி பார்த்தா, ஆயிரம் ஓட்டை இருக்கும்... குடும்பத்துப் பெண்கள் தப்புச் செஞ்சாலும்,

> அவங்க பத்தினி மாதிரி வீட்டிலே இருப்பாங்க, ஆனா ஒரு நடிகை எவ்வளவு ஒழுக்கமாயிருந்தாலும் விபசாரினுதான் சொல்லுவாங்க"[65]

என்று தங்கள் தொழிலை முழுவதும் ஆமோதிக்கிற சூழலும்,

பரத்தைத் தாயே தன் மகளை, வேறொருவனுடன் தொடர்பை ஏற்படுத்தும் நிலையை,

> "வீடுங்கிறது ஒரு பெண்ணுக்குப் பாதுகாப்பாயிருக்கிற இடம் தானே? எங்க வீட்டிலே இனிமேல் நான் பாதுகாப்பாக இருக்க முடியாது சுந்தரம். இந்த சினிமாக்காரன்கிட்டே என்னை ஏமாற்றிக்கொண்டு வந்து வீட்டுக்கதவைப் பூட்டிக்கிட்டுப் போனது, வேறு யாருமில்லை – என் அம்மா தான்...!"[66]

என்று 'நிழலில் நிற்கும் நிஜங்கள்' புதினத்தில் தன் தாயே பரத்தைத் தொழிலில் ஈடுபட வைக்கும் கொடுமையான சூழலை மகள் மூலம் எடுத்துக்காட்டுகின்றார்.

> "இந்த அநியாயத்தைக் கேளுங்க, ஐயா!.... இந்தப் பொண்ணு உலக நடப்புத் தெரியாம என்னனென்னமோ பேசுது?... எங்க சாதியிலே பொறந்த பொண்ணு, ஒருத்தனுக்கு மட்டும் பெண் சாதியா வாழ முடியுமா?.... நல்ல குடும்பத்தைச் சேர்ந்த எந்த மாப்பிள்ளையாவது, எங்க வீட்டுப் பெண்ணைத் தாலி கட்டிப் பொண்டாட்டியாக்கிக் குடும்பம் நடத்த சம்மதிப்பானா?... நீங்கள் சொல்லுங்க, ஐயா!.... என்னென்னமோ படிச்சிட்டு, ஏட்டுச் சுரைக்காயாய் பேசுறா என் மகள், அவளுக்கு நீங்க தான் புத்திமதி சொல்லித் திருத்தனும். இப்படியே விட்டுட்டா, கெட்டுப்போயிடுவா"[67]

என்று பரத்தைத் தொழிலை மறுத்த பெண்ணை, தாய் மிக இழிவாகப்

பேசுவதும், சிறந்தவளாய் மாறும் வெள்ளைத் தாமரை கெட்டுப் போயிட்டா என்று வர்ணிப்பதும் அவர்களின் சமூகத்திற்குள்ளேயே நிகழும் கொடுஞ்செயல் ஆகும். பரத்தை பெண்ணைத் திருமணம் செய்து கொண்டால் ஒட்டு மொத்த உறவினர்களும் வெறுத்து ஒதுக்குவர் என்பதைத் துணைப் பாத்திரங்களின் மூலம்,

> "நீ இந்த வீட்டுக்கு மருமகளாய் வந்திட்டா, இந்த வீட்டுப் பொண்ணுகளைக் கட்டிக்க, எங்க சாதிக்காரங்க யாரும் இந்த வீட்டுப்படியை மிதிக்க மாட்டாங்க..."[68]

என்று குறிப்பிடுகின்றார்.

'வெள்ளைத் தாமரை'யில் பரத்தைக் குடும்பத்தில் பிறந்த பெண் ஒழுக்கமுடைய பெண்ணாக மாறி, ஒருவனோடு மட்டுமே வாழ்வு நடத்துகின்றாள். சில காலத்தில் கணவன் இறந்துவிட, விதவை என்ற கோலத்தைப் பூண மறுக்கிறாள்,

> "ஊரிலே என்ன பேசுவாங்கனு எனக்குத் தெரியும். என்ன பேசுறாங்க என்பதையும் கேட்டுக்கிட்டுத்தான் இருக்கிறேன். தெருநாயைக் குளிப்பாட்டி நடுவீட்டிலே வச்சாலும், அது எச்சிலை பொறுக்கத்தான் போகும்னு பழமொழியாய்ச் சொல்றாங்க... நாளுக்கு ஒரு புருஷன் தேடற தேவடியாக் குடும்பத்திலே பொறந்தவ, ஒரு புருஷன் செத்ததற்காக விதவையாவாளானு எல்லாம் பேசறாங்க. அவங்க நிலையிலேயிருந்து அப்படிப் பேசறதிலே ஒண்ணும் ஆச்சரியமில்லே... நான் ஏன் என் புருஷனுக்கு விதவையாக மறுக்கிறேன் என்கிறதைச் சொன்னா, அதை அவங்க புரிஞ்சிக்க முடியாது"[69]

என்று பரத்தைத் தொழிலில் ஈடுபட்ட பெண் எவ்வளவு ஒழுக்கநிலையில்

இருந்தாலும், சமூகம் அவதூறாகவே தூற்றுகிறது சராசரிப் பெண்ணுக்குரிய பெண்ணுரிமைப் போக்கில், பரத்தை குடும்பத்துப் பெண் 'பெண்ணுரிமை' கையிலெடுத்தால் பல்வேறு வகையான துயரங்களுக்கும், துன்பங்களுக்குமே ஆளாக நேரிடுகிறது என்பதையும் அய்க்கண் தமது புதினங்களின் வாயிலாகத் எடுத்துக்காட்டுகின்றார்.

## பெண்கள் முன்னேற்றம்

ஆணும், பெண்ணும் சரிசமம் என்ற கருத்து உலகெங்கிலும் பரவி நிற்கிறது. காலம் மாறிக்கொண்டேயிருக்கிறது. பெண்களின் மேம்பாட்டிற்காகப் பல்வேறு அரசியல் கட்சிகளும், அரசியல் அமைப்புகளும் இயங்கி வருவதைக் காணலாம். அய்க்கண் புதினங்களில் பெண்கள் முன்னேற்றம் அடைவதற்குரிய வழிகளை ஆங்காங்கே வெளிப்படுகின்றார்.

பெண்கள் ஏன் வளர்ச்சி பெற முடியாது என்பதை,

> "நினைச்சால் எல்லாம் முடியும்... முதல்லே உங்க நினைப்பு மாறணும்... நீங்க பெற்றிருக்கிறது பெண்கள்னு நினைக்காம, பிள்ளைகள்னு நினைச்சுக்குங்க... நாலு பெண்களையும் பையன்கள் மாதிரியே நிறைய படிக்க வச்சு, உத்தியோகத்திலே சேர்த்துவிடுங்க... அவங்க வாழ்க்கையிலே, தனிச்சு நிற்கிற தைரியத்தையும், செக்யூரிட்டியையும் ஏற்படுத்திக்கொடுங்க... அப்புறம், அவங்க, தங்கள் வாழ்க்கையை அமைச்சுக்கிடுவாங்க... உங்க ஆதரவை அவங்க எதிர்பார்த்துக்கிட்டிருக்கமாட்டாங்க... அவங்களுக்கு அவங்க மேலேயே தன்னம்பிக்கை வந்திடும்... அந்த தன்னம்பிக்கை வந்திட்டா, அவங்களுக்கு கல்யாணம்

என்கிறது அத்தியாவசியம் என்கிற அபிப்ராயம் கூட மாறிடும், சில ஆண்களைப் போல அவர்களும் கல்யாணம் பண்ணிக்காம வாழ்ப்பழகிடுவாங்க... கல்யாணம் என்கிறது ஒரு பெண்ணுடைய வாழ்க்கையில் கடைசி லட்சியம் இல்லை... வாழ்க்கையில் எத்தனையோ லட்சியம், குறிக்கோள், புகழ், சாதனை எல்லாம் இருக்கு தெரியுமா?... மகாத்மாகாந்திக்கு, மகனால் வந்த பெருமையைவிட நேருவுக்கு மகளால் வந்த பெருமை அதிகம்"[70]

என்று பெண் முன்னேற்றம் குறித்த கருத்தைப் பதிவு செய்கின்றார்.

"ரொம்பபேர்,பெண்டாட்டிகளைக் கொடுமைப்படுத்துறாங்க... தன் பெண்டாட்டி தனியே இருந்து பிழைச்சுக்குவாள்னு தெரிஞ்சா, புருஷன்காரங்க பெண்டாட்டியைக் கொத்தடிமையாய் நடத்தப் பயப்படுவானுங்க... அதனாலே பெண்களுக்கு 'எக்கனாமிகல் செக்யூரிட்டியை ஏற்படுத்திக் கொடுக்கணும் நாம்... எக்னாமிகல் செக்யூரிட்டி வந்திட்டா, பெண்களுக்கு 'சோஷல் செக்யூரிட்டி'யும் 'மாரிட்டல் செக்யூரிட்டி'யும் வந்திடும்"[71]

என்றும் பெண் முன்னேற்றம் குறித்து அய்க்கண் வாதிடுகிறார்.

பெண்களின் உச்ச வளர்ச்சி நிலையை,

"சமமாவது?.... சமத்துக்கு மேலேயே பெண்கள் போயிட்டாங்க சோமு! உலகத்திலே மிகப்பெரிய ஜனநாயக நாட்டின் பிரதமராக இந்திரா காந்தி இருந்தாங்களே? அவங்க மந்திரி சபையில் ஒரே ஆண் அவங்கதான்னு வேடிக்கையாகச் சொல்லாங்களே கேள்விப்பட்டதில்லையா நீ? பிரிட்டன் என்கிற

வல்லரசுக்கு மார்க்ரெட் தாட்சர் இருந்தாங்க.... பிரச்சனை மிகுந்த இஸ்ரேல் நாட்டுப் பிரதமராக கோல்பர் மேயர் இருந்தாங்க... பிலிப்பைன்ஸ் நாட்டு ஜனாதிபதி, பாகிஸ்தான் பிரதமர்னு எத்தனையோ பெரும் பதவிகளிலெல்லாம் பெண்கள் இருந்திருக்காங்களே"[72]

என்று பெண்கள் அடைந்த முன்னேற்ற வளர்ச்சியையும் அய்க்கண் பெண் பாத்திரம் மூலமாகத் தருகின்றார். மேலும்,

"கவர்ன்மெண்ட் உத்தியோகங்களிலே, பெண்களுக்கு இத்தனை சதவீதம் இடம் ஒதுக்கணும்னு சட்டமே வந்திருச்சே"[73]

என்றும், பெண்களின் முன்னேற்ற வளர்ச்சியையும் பெண்களின் சிறப்பான செயல்பாடுகளையும் அய்க்கண் தமது புதினங்கள் வழியாகத் தெளிவுபட வெளிப்படுத்துகின்றார். பெண்களின் அனைத்து ஒடுக்குமுறைகளையும் வெளிப்படுத்தியதன்றி பெண்கள் வளர்ச்சி நிலையை எய்திவருவதையும் அய்க்கண் உணர்த்துகிறார்.

## தொகுப்புரை

பெண்ணியம் தோற்றம், வளர்ச்சி வகைகள் குறித்த கருத்துக்கள் சான்றுகளுடன் விளக்கப்பட்டுள்ளன.

இந்தியாவில், தமிழ்நாட்டில் பெண்ணியம் தோன்றி வளர்ந்த நிலைகள் சுட்டப்பட்டுள்ளன.

புதினங்களில் பெண்கள் சித்திரிக்கப் பெற்றுள்ள தன்மைகளைப் புலப்படுத்தி, அய்க்கண் புதினங்களில் பெண்ணிய நிலைகளின் பதிவுகள் சான்றுகளுடன் எடுத்துக்காட்டப்பெற்றிருக்கிறது.

தமிழகச்சூழலில் பெண்களுக்குரிய சமூக நிலை, சிறப்புக்கள், உரிமைகள், மதிப்புகள் குறித்த ஆசிரியரின் சிந்தனைகள் தெளிவுபடுத்தப்பட்டுள்ளன.

ஆணாதிக்கம், வரதட்சணைக் கொடுமை, பெண் சிசுக்கொலை, விலை மகளிர் நிலை போன்ற பெண்களுக்குரிய அவலங்களையும் ஆசிரியர் சுட்டிக்காட்டிருப்பதும் புலப்படுத்தப்பெற்றுள்ளன. ஆசிரியர் இவற்றிற்குக் கூறியுள்ள தீர்வுகளும் முன் வைக்கப்பட்டுள்ளன.

## சான்றெண் விளக்கம்


1. ச.முத்துச்சிதம்பரம், பெண்ணியம் தோற்றமும் வளர்ச்சியும், ப.9.
2. திரு.வி.க., பெண்ணின் பெருமை, ப.12.
3. Usha Nilson, Cracking the Mirror New Images of Women, p.47.
4. Miss Lynda Frieden, The Feminie Mystique, p.1.
5. Induprakash Singh, Women's Oppression Men Responsible, p.20.
6. தினமலர் நாளிதழ், நாள் 06.03.2006, ப.12.
7. ச.முத்துச்சிதம்பரம், பெண்ணியம் தோற்றமும் வளர்ச்சியும், ப.59.
8. இரா.பிரேமா, பெண்ணியம், அணுகுமுறை, ப.17.
9. மேலது, ப.37.
10. பாரதியார் பாடல்கள், ப. .
11. சங்ககால மகளிர் வாழ்வியல், ப.18.
12. எலிசபெத் பிகூர், மானிடவியல், ப.120.
13. தமிழர் மேல் நிகழ்ந்த பண்பாட்டுப் படையெடுப்புகள், ப.97.
14. தொல்காப்பியம், நூ.1045.
15. சங்ககால மகளிர் வாழ்வியல், ப.42.
16.. புறநானூறு, பா.246.
17. புறநானூறு, பா.73.
18. புறநானூறு, பா.71.
19. அய்க்கண், மறுபக்கம், ப.122.
20. அய்க்கண், விடிவெள்ளி, ப.32.
21. அய்க்கண், விடிவெள்ளி, பக்.157–158.
22. அய்க்கண், உயிர், ப.100.
23. அய்க்கண், மறுபக்கம், ப.142.
24. அய்க்கண், விடிவெள்ளி, ப.203.
25. அய்க்கண், நிழலில் நிற்கும் நிஜங்கள், பக்.181–182.
26. அய்க்கண், நிழலில் நிற்கும் நிஜங்கள், ப.182.

27. அய்க்கண், நிழலில் நிற்கும் நிஜங்கள், ப.183.

28. அய்க்கண், மண்ணின் மலர்கள், ப.17.

29. அய்க்கண், மண்ணின் மலர்கள், பக்.18–19.

30. அய்க்கண், ஜல்லிகட்டில் பசுமாடுகள், ப.49.

31. அய்க்கண், ஜல்லிகட்டில் பசுமாடுகள், ப.166.

32. அய்க்கண், ஜல்லிகட்டில் பசுமாடுகள், ப.167.

33. அய்க்கண், வெள்ளைத்தாமரை, ப.11.

34. அய்க்கண், தீர்க்க சுமங்கலி, ப.224.

35. அய்க்கண், தீர்க்க சுமங்கலி, பள்.226–227.

36. அய்க்கண், தீர்க்க சுமங்கலி, ப.227.

37. அய்க்கண், மண்ணின் மலர்கள், ப.18,

38. அய்க்கண், மண்ணின் மலர்கள், ப.20.

39. அய்க்கண், நிழலில் நிற்கும் நிஜங்கள், ப.152.

40. அய்க்கண், நிழலில் நிற்கும் நிஜங்கள், ப.170.

41. அய்க்கண், நிழலில் நிற்கும் நிஜங்கள், ப.168.

42. அய்க்கண், வெள்ளைத்தாமரை, ப.167.

43. அய்க்கண், ஜல்லிகட்டில் பசுமாடுகள், ப.130.

44. அய்க்கண், மறுபக்கம், ப.202.

45. அய்க்கண், ஜல்லிகட்டில் பசுமாடுகள், ப.48.

46. அய்க்கண், ஜல்லிகட்டில் பசுமாடுகள், பக்.48–49.

47. அய்க்கண், ஜல்லிகட்டில் பசுமாடுகள், ப.49.

48. அய்க்கண், அவனுக்காக மழை பெய்கிறது, ப.141.

49. அய்க்கண், ஜல்லிகட்டில் பசுமாடுகள், ப.34.

50. அய்க்கண், நிழலில் நிற்கும் நிஜங்கள், ப.41.

51. அய்க்கண், நிழலில் நிற்கும் நிஜங்கள், ப.166.

52. அய்க்கண், நிழலில் நிற்கும் நிஜங்கள், ப.186.

53. அய்க்கண், பாரதியார் பாடல்கள், ப.50.

54. அய்க்கண், நிழலில் நிற்கும் நிஜங்கள், ப.84.

55. அய்க்கண், நிழலில் நிற்கும் நிஜங்கள், ப.84.

56. அய்க்கண், நிழலில் நிற்கும் நிஜங்கள், ப.85.

57. அய்க்கண், நிழலில் நிற்கும் நிஜங்கள், ப.110.

58. அய்க்கண், நிழலில் நிற்கும் நிஜங்கள், ப.118.

59. தொல்காப்பியம், நூ.1169.

60. அய்க்கண், வெள்ளைத்தாமரை, ப.37.

61. அய்க்கண், அவனுக்காக மழை பெய்கிறது, ப.140.

62. அய்க்கண், நிழலில் நிற்கும் நிஜங்கள், ப.31.

63. அய்க்கண், நிழலில் நிற்கும் நிஜங்கள், ப.37.

64. அய்க்கண், நிழலில் நிற்கும் நிஜங்கள், பக்.74–75.

65. அய்க்கண், நிழலில் நிற்கும் நிஜங்கள், ப.83.

66. அய்க்கண், நிழலில் நிற்கும் நிஜங்கள், ப.52.

67. அய்க்கண், வெள்ளைத்தாமரை, ப.56.

68. அய்க்கண், நிழலில் நிற்கும் நிஜங்கள், ப.74.

69. அய்க்கண், வெள்ளைத்தாமரை, ப.87.

70. அய்க்கண், ஜல்லிக்கட்டில் பசுமாடுகள், ப.93.

71. அய்க்கண், ஜல்லிக்கட்டில் பசுமாடுகள், ப.78.

72. அய்க்கண், ஜல்லிக்கட்டில் பசுமாடுகள், ப.35.

73. அய்க்கண், ஜல்லிக்கட்டில் பசுமாடுகள், ப.35.

## இயல் – 5

# புதினங்களில் பண்பாட்டுக் கூறுகள்

## முன்னுரை

சமூகம், நம்பிக்கையின் அடிப்படையில் இயங்குகின்றது. நம்பிக்கையிலான பழக்க வழக்கங்கள் நாகரிகமாய், பண்பாடாய் உருப்பெறுகின்றன. அன்றாட வாழ்வில் நிகழ்கின்ற நிகழ்வுகளைக் கண்ட மனிதன் சில செயல்பாடுகளைத் தொடர்ந்து செய்ய; அவை நாளடைவில் பழக்க வழக்கங்களாய் உருமாற, அச்சிறந்த செயல்களைச் சமூகம் ஏற்றுக்கொண்டு இயங்குகின்றது.

ஒரு சமூகத்தினை நாம் அறிய வேண்டுமெனில் அச்சமூகத்தின் கலாச்சாரம், நம்பிக்கைகள், பழக்க வழக்கங்களை ஆய்வு செய்தால்தான் அறிய முடியும். சமூகத்தில் உருவாகின்ற இலக்கியங்களின் வழிச் சமூகப் பண்பாட்டுச் செயல்பாடுகளைப் பதிவு செய்கின்றனர். இதற்கேற்ப பேரா. அய்க்கண்ணின் புதினங்களில் பிறப்பு முதல் இறப்பு வரையிலான பண்பாட்டு நிகழ்வுகளைத் தமது புதினங்களில் பதிவு செய்திருப்பதை இவ்வாய்வு நோக்குகின்றது.

## பண்பாடு பற்றிய விளக்கம்

பண்பாடு என்பதற்குச் சங்க இலக்கியம்,

"பண்பெனப் படுவது பாடறிந்து ஒழுகுதல்"[1]

என்று குறிப்பிடுகின்றது.

> "பண்பு, என்ற சொல்லின் அடிப்படை பிற்காலத்தே உருவாக்கப்பெற்றது, 'பண்பாடு' என்ற பதமாகும். சொற்பொருள் நோக்கில் பண்பாடு என்பது, 'பண்படுதல்' என்னும் தொழிற்பொருளின் பொருண்மை கொண்டது"[2]

என்று பண்பாட்டின் பொருண்மையை விளக்குவர்.

> “இந்தியப் பண்பாட்டில் திராவிடப் பண்பாடு குறிப்பிடத்தக்க இடம் வகிக்கிறது. திராவிடப் பண்பாட்டின் சிறப்பினை அண்மைக் காலத்தில் ஆராய்ச்சி உலகம் அறிந்து அதன் தொன்மை மிக்க மரபுகளை அறிய முற்பட்ட நிலையில் திராவிட இயல் கல்வி (Dravidology) உலகின் பல பாகங்களிலும் வேரூன்றியது”[3]

என்று திராவிடப் பண்பாட்டின் தனித்துவத்தைக் கூறுவர்.

## பழக்க வழக்கம்

பழக்கம் என்பது, தான் கற்கும் செயலாகவும், வழக்கம் என்பது கற்கும் செயல் (அ) தொடரும் நிலை எனவும் கருதலாம்.

> “பழக்கம் வளர்ச்சி இன்றியமையாத கூறாகக் கருதப்படுகிறது. நனவுடன் தொடங்கிய செயல் நாளடைவில் நனவின்றியே நிகழக் கூடியதாக ஆகிவிடும் செயலையே பழக்கம் என்பர்”[4]

## பண்பாட்டின் நோக்கம்

பண்பாடானது எண்ணங்களை விரிவடையச் செய்வதாகும். ஆன்மீகவாதிகள் மனத்தினைத் தெளிவடையச் செய்வதென்கின்றனர், பண்பாட்டுக் கூறுகள் பொருள் பற்றிய போக்கில் மட்டுமில்லாது மக்களின் நடைமுறைச் செயல்களிலும் காணப்படுகின்றன. இத்தகைய பண்பாடானது சமூக அமைப்பின் அடிப்படையில் நின்று சமூகத்தில் மக்களின் வாழ்க்கையை நகர்த்துகின்றன.

> “சமூகத்தில் அதிகமாகப் பின்பற்றப்படும் பழக்கமான நடவடிக்கையே வழக்கமாகும். வழக்கத்தின் முக்கியப் பண்புகளாக ஒரு நிலையான நடவடிக்கை, வழிமுறை,

சமூகப்பண்பு, சரி தவறு என்ற மதிப்புத் தீர்ப்பு ஆகிய மூன்று காரணிகளைச் சமூகவியலார் (Sociologist) சுட்டுவர்"[5]

## சமூகமும் பண்பாடும்

ஒவ்வொரு நாட்டிற்கும் தகுந்தவாறு சமூகப் பழக்க வழக்கங்கள் மாறுபடுகின்றன. இதற்கு அடிப்படைக் காரணியாய் இயற்கைச் சூழல்களும் அமைகின்றன. குறிப்பாக நிலவியல் அடிப்படையில் காலத்துக்குக் காலம், இனத்துக்கு இனம் சூழலுக்கு ஏற்ப மாறுபடுகின்றன.

> "மனிதனின் சமூக வாழ்வு நிலத்துடன் பின்னிப் பிணைந்துள்ளது. அவனது வாழ்வின் வளமும் – வறட்சியும், வளர்ச்சியும் – தளர்ச்சியும், பீடும் – பெருமையும், ஏற்றமும் – வீழ்ச்சியும், நகைப்பும் – ஏக்கமும், ஒளியும் – இருளும், நில இயல் கூறுகளின் பின்னணியைப் பொறுத்திருக்கின்றன"[6]

என்று கூறுதலுக்கு ஏற்பவும் சமூகத்தில் பண்பாடுகள் அமைகின்றன.

சமூகத்தில் காலம் காலமாகப் பண்பாட்டினை மரபு வழிபட்டது என்று கூறுவர். இம்மரபுகள் சமூக நலன் கருதி ஏற்பட்டவையாக இருக்கின்றது. ஒரு சமுதாயத்தின் மரபினைப் பிறிதொரு சமுதாயத்தின் மரபு கட்டுப்படுத்துவதில்லை. மரபுகள் சமுதாயந்தோறும் மாறுபடினும் அவை அச்சமுதாயத்தின் சிறப்பியல்புகளைக் காக்க வல்லவையாக இருப்பதால் மானுடச் சமுதாயம் இன்றும் அவைகளைப் போற்றிப் பாதுகாத்து வருகின்றது. சமூகச் சிறப்பைப் போற்றிக் காத்து வரும் மரபாகவும் சமூகப் பண்பாடு அமைகின்றது.

## பண்பாட்டுக் கூறுகள்

பண்பாடு பற்றி பல்வேறு அறிஞர்கள் பல்வேறு கருத்துக்களைத் தந்திருப்பினும், எட்வர்டு பான்ட்டைலர் அவர்கள்,

> "பண்பாடு என்பது அறிவு, நம்பிக்கை, கலை, ஒழுக்க நெறிகள், சட்டம், வழக்கம் முதலியவைகளும் மனிதன் சமுதாயத்தில் ஓர் உறுப்பினனாக இருந்து கற்கும் பிற திறமைகளும் அடங்கிய ஒரு முழுமைத் தொகுதியாகும்"[7]

என்று குறிப்பிடுகின்றார். பொதுப் பண்பாட்டில் தனித்த தன்மைகளைக் கூறுகள் என்று வகைப்படுத்துகின்றனர்.

பண்பாட்டினை மேலும்,

1. பொருள் சாராப் பண்பாடு
2. பொருள் சார்ந்த பண்பாடு

என இருவேறு வகையாகவும் பிரிக்கலாம். பொருள்சாராப் பண்பாடானது குழந்தை பிறப்பு முதல் இறப்பு வரையிலான பழக்க வழக்கங்களும், இறை நம்பிக்கை முதல் துறவறம் உள்ளிட்ட நம்பிக்கைகளும் அடங்கும். பொருள் சார்ந்த பண்பாடானது பொருளை மையப்படுத்திச் செய்யும் பழக்க வழக்கங்கள். உதாரணமாக உணவுப் பழக்க வழக்கங்கள் முதல் மருத்துவம் உள்ளிட்ட பல பழக்க வழக்கங்களைக் கூறலாம். அய்க்கண் அவர்கள், பழக்க வழக்கங்களையும் சமூக நம்பிக்கைகளையும் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

> "நம்ம நாட்டு சாஸ்திரங்களும் கலாச்சாரமும் பழக்க வழக்கங்களும், வெறும் மூடப் பழக்க வழக்கங்கள்னு ரொம்பப்பேர் நினைக்கிறாங்க. ஆனால் உண்மையிலே, நம்ம சாஸ்திரங்கள் ஒவ்வொண்ணுக்கும் அர்த்தம் இருக்கு. ஸயன்டி∴பிக் ரீஸன் இருக்கு. ஆனா அதை நம் முன்னோர் சொல்லாமல், சாஸ்திரம்னு மட்டும்

சொல்லிட்டதாலே, இப்போ பல பேர் சாணி போடறது, வீட்டுக்கதவு நிலையிலே மஞ்சள், குங்குமம் பூசறது, மாவிலை தோரணம் கட்டுறது, வீட்டிலே துளசி மாடம் வைக்கிறது. எல்லாத்துக்கும்மே சுகாதார ரீதியான காரணம் இருக்கு. சாணம், மஞ்சள், குங்குமம், துளசி, மாவிலை எல்லாம் தொத்து நோயைத் தடுக்கக் கூடியது. அதே மாதிரி, வடக்கே தலைவைச்சுப் படுக்கக் கூடாது. வெட்ட வெளியிலே தூங்கக்கூடாது என்கிறதையெல்லாம், இப்போ விஞ்ஞான பூர்வமாகவே ஒப்புக் கொண்டிருக்காங்க... ஸயன்ஸ் மட்டுமில்லே ஸைக்காலஜீக்கலாகவும் நம்ம பழக்க வழக்கங்கள், மரபுகளை ஏற்படுத்தி வச்சிருக்காங்க..."[8]

என்று சமூகப் பழக்க வழக்கங்களைத் தெளிவுற விளக்குகின்றார்.

## அய்க்கண் உணர்த்தும் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும்

தமிழ்ச் சமூகத்தில் நிகழ்கின்ற பெரும்பாலான சமூகப் பழக்க வழக்கங்களை வெளிப்படுத்துகின்றார். அவற்றைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம். "ஒரு சமூகம் தன்னுடைய குலத்தை மாற்றும்போது அல்லது இழக்கும்போது அவற்றிற்கேற்ப முன்பே அமைந்திருந்த நடைமுறைகள் நம்பிக்கைகளாக அமைகின்றன"[9] என்று நம்பிக்கை குறித்து தமிழவன் கூறுகிறார்.

## இறை வழிபாடுகளும் நம்பிக்கைகளும்

இயற்கை வழிபாடுகள், இறை வழிபாடுகள் என இருவேறு வழிபாட்டு முறைகள் தமிழகத்தில் நிலவி வருகின்றன.

வழிபாடு என்பது நம் மனத்தை இறை உணர்வில் வழிபடுதல் ஆகும். "வழிபாடு என்னும் சொல் 'வழிபடு' என்ற அடிச்சொல்லிலிருந்து பிறந்து வழியிற் செல்லுகை, பின்பற்றுகை வணக்கம், பூசனை என்ற பொருள்களைத் தருவது"[10] என்று கழகத் தமிழகராதி சுட்டிக் காட்டுகின்றது.

இறை வழிபாட்டுக் கொள்கைகளையுடைய சமய நம்பிக்கைகளை 'மீவியல்புக் கொள்கை' என்றும் கூறுவர். இதனை,

> "மீவியல்பாற்றல்களை இயற்கைக்கு அப்பாற்பட்ட சக்திகள் எனக் குறிக்கும் வழக்குண்டு, இதுபற்றி ஔவை துரைசாமிப் பிள்ளை, 'இயற்கைக்கு அப்பாற்பட்ட நிகழ்ச்சிகள் என்பது இயற்கையுலகில் காணப்படாத தெய்வ, தெய்வீக நிகழ்ச்சிகளைக் குறிப்பதாகும். தெய்வங்களின் செய்கைகளும் தெய்வச் சார்பான நிகழ்ச்சிகளும் மக்கள் வாழ்வில் நேரில் காணப்படாமல் இயற்கை வாழ்வுக்கு அப்பாற்பட்டு நின்று தொடர்பு பெறுவது பற்றி அவை இயற்கைக்கு அப்பாற்பட்டவையெனக் கருதப்படுகின்றன."[11]

என்ற கூற்று நோக்கத்தக்கதாகும்.

குறிப்பாகப் பழந்தமிழரின் சமயக் கோட்பாடு அச்சத்தை அடிப்படையாகக் கொண்டதாகவே தெரிகின்றது. மனிதன் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளவும், இயற்கையிலிருந்தும், இயற்கையின் இடர்ப்பாடுகளிலிருந்தும் தம்மைப் பாதுகாத்துக் கொள்ளவும் முயன்ற நிலையில் கடவுள் கோட்பாடும் வழிபாடுகளும் தோன்றின என்று கூறுவர்.

## இறைவழிபாட்டுப் பிரிவுகள்

இறைவழிபாடானது காலம் செல்லச் செல்ல பெருந்தெய்வம், சிறு தெய்வம் என இருவேறு வழிபாடுகளாய் தோன்றின எனலாம்.

அய்க்கணின் புதினங்களில் பெருந்தெய்வ வழிபாட்டைக் காட்டிலும் சிறு தெய்வ வழிபாடுகளை அதிகமாகக் காண முடிகின்றது.குறிப்பாகக் காரைக்குடி, சிவகங்கை உள்ளிட்ட இடங்களில் நிகழ்ந்த இறை வழிபாட்டு முறைகளைக் காணலாம்.

> “விளாங்குடியைச் சுற்றியுள்ள ஆறு ஊர்களிலுள்ள பெண்களும் மதுக்குடம் தூக்கி வந்து, தேரில் இருக்கும் உய்ய நாயகியம்மையைச் சுற்றி வந்து வணங்கிய பிறகு, பக்கத்திலுள்ள தேவ நாச்சியம்மன் கோயிலிலே காணிக்கை செலுத்தித் திரும்பும் விழா ‘ஆறூர்ச் செவ்வாய்’ என்று விமரிசையாக நடைபெறும். ஆண்டுதோறும் வைகாசி மாதம் முதல் செவ்வாய்க் கிழமை நடக்கும் இந்த விழா”[12]

என்று ஆறு ஊர்களும் இணைந்து செய்கின்ற திருவிழா ஆதலாலும், செவ்வாய் அன்று நடக்கின்ற திருவிழா ஆதலாலும், இது ‘ஆறூர்ச் செவ்வாய்’ திருவிழாவாக ஒரு குறிப்பிட்ட மக்களிடத்தில் நிகழ்ந்து வருகின்றது.

மனித வழிபாடும், கடவுள் வழிபாடும் ஒன்றொடொன்று பின்னிப் பிணைந்து அமைகின்றன. ஆதி காலத்தில் மக்கள் இயற்கையின் சீற்றத்திற்குப் பெரிதும் பாதிக்கப்பட்டார்கள். இப்பாதிப்பிலிருந்து விடுபெற இயற்கையை வழிபட்டனர். இதனால்,

> “கதிர் வழிபாடும், மழை வழிபாடும், விண் வழிபாடும், மண் வழிபாடும் தோன்றி இருக்கக்கூடும்”[13]

என்று குறிப்பிடுகின்றார் க.பா.அறவாணன்.

இதில் இறைவன் வழிபாட்டை முறையாக,

> “தென்னம்பாளையின் மேல் மட்டையை உரித்து எடுத்துவிட்டு,. குடத்திற்குள்ளே நிறுத்தி வைத்து, அந்த பாளைக்குப் பூ, வெற்றிலை எல்லாம் அழகாகச் சுற்றிக்கட்டி அலங்கரித்து அந்தக் குடத்தைத்

தலைமேல் வைத்துக் கொண்டு ஒவ்வொரு ஊர்ப் பெண்களும் ஊராருடன் நடந்து வந்து, தேரைச் சுற்றி குலவையிட்டுக் கொண்டே வரும் அழகு, கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும்.

ஒவ்வொரு ஊராக வரும் பெண்கள் கூட்டத்தில், திருமணத்திற்குக் காத்திருக்கும் மங்கைகளைப் பார்த்துத் தேர்ந்தெடுப்பதற்கு, இளவட்டங்கள் அந்த திருவிழாச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்வது பழக்கம்"[14]

என்று அவ்வூரில் இறை வழிபாட்டு முறையையும், பழக்க வழக்கங்களையும் அய்க்கண் விளக்குகின்றார்.

ஊரகங்களில் இறை வழிபாடுகளும் தெய்வத்தின் மீதான பயமும் மிக அதிகமாகவே இருக்கிறது. அவனுக்காக மழை பெய்கிறது புதினத்தில், இறைப் பயத்தின் உச்சத்தை,

"புத்திலேயிருந்து நாகவல்லியம்மன் வந்திடும். வந்ததும் ஒரே போடாய் போட்டு உன்னை பலி வாங்கும்... கைகால்களெல்லாம் படபடன்னு துடிச்சு, காக்காய் வலிப்பு மாதிரி வெட்டி இழுக்கும், உடம்பெல்லாம் விண்ணுனு தெரிச்சி இரத்தம் சுண்டி தசையெல்லாம் எரியும், கொஞ்சம் கொஞ்சமாய் ரத்த ஓட்டம் நின்னு ஜில்லுனு நீலம் பாரிச்சுக் குளித்து போயிடும்"[15]

என்று பூசாரி மூலம் அய்க்கண் வெளிக்கொணர்கிறார்.

"வேலங்குடியில் 'ஏழூர்த் திருவிழா' நிகழ்வை, சித்திரை மாதம் வேலங்குடி ஏழூர்த்திருவிழாவில், ஏழு ஊர்களிலிருந்தும் பெரியநாயகியம்மன் கோயிலுக்கு வரும் மதுக்குடங்களைப் பார்க்கப் பெருங்கூட்டம் கூடியிருந்தது.

ஒவ்வொரு ஊரிலிருந்தும், பெண்கள் தலையில் பாளை வைத்து அலங்கரித்த குடங்களுடன், பவனி வந்து, அம்மனுக்குக் காணிக்கை செலுத்தி விட்டுப் போவதைப் பார்த்துவிட்டு திரும்பினார்கள்”[16]

என்று இறைவழிபாட்டுப் பழக்க வழக்கங்களைத் தீர்க்க சுமங்கலியில் அய்க்கண் வெளிப்படுத்துவதைக் காண முடிகிறது.

## சிவன்

இயற்கை வழிபாட்டிற்குப் பின்னர் உருவான இறைவனின் உருவத்தில் தலையாயது சிவனின் உருவம் ஆகும். இச்சிவனின் உருவத்திற்குரிய காரணத்தை,

“உலகம் யாவையும் தாமுளவாக்கலும், நிலைபெறுத்தலும் நீக்கலும், நீங்கிலா அலகிலா விளையாட்டுடைய – தன்னேரில்லாத் தலைவருக்கு ஒரு பெண் ஏன் அத்தான்?”

அவர் கடவுள் தான் – ஆனால் கடவுளையும் இயக்கும் சக்தியல்லவா பார்வதி? செயல்செய்பவன் ஆண்; அந்தச் செயலுக்குச் சக்தி தருபவள் பெண். இந்த அருமையான தத்துவத்தை உள்ளுறையாக வைத்துத்தான், ‘அர்த்த நாரீசுவரர்’ என்று நம் முன்னோர் அமைத்திருக்கிறார்கள்”[17]

என்று இறைவனின் தோற்றத்தினைப் பாத்திரத்தின் வாயிலாகக் குறிப்பிடுகின்றார்.

## மக்களின் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும்

குழந்தை பிறப்பு முதல் இறப்பு வரையில் பல்வேறு விதமான பழக்க வழக்கங்களையும் நம்பிக்கைகளையும் கொண்டுள்ளனர்.

"இவற்றைச் செய்தால் தரும், இவற்றைச் செய்தால் தராது என்று பல காலத்திற்கு முன்னால் பிரித்து வைத்த செய்திகள் எல்லாம் காலப்போக்கில் காரணம் அறியாமலேயே நம்பிக்கைகளாகவும், பழக்கவழக்கங்களாகவும் மாறுகின்றன"[18] என்பர் வி.சரஸ்வதி.

1. குழந்தை பிறப்பு
2. பூப்பெய்தல்
3. திருமணச் சடங்குகள்
4. இறப்புச் சடங்குகள்.

போன்ற சடங்கு முறைகள் மக்களோடு ஒன்றிணைந்தவையாக உள்ளன. அய்க்கண் அவர்கள் சடங்குகளைப் பற்றி,

> "ஒரு நாட்டின் சடங்குகள் ஒருத்தனை மூடனாக்கி விடுவதில்லை. அவனுடைய சிந்தனைகளும், செயல்களும் தான் அவனை மூடனாகவோ, அறிவாளியாகவோ ஆக்குகின்றன"[19]

என்கிறார்.

## குழந்தைப் பிறப்பு

குழந்தைகள் பிறப்பு முதல் வளர்ச்சி பெறும் வரை பல்வேறு சடங்குகள் நிகழ்கின்றன. அவற்றுள் குழந்தை இல்லாதவர்கள் சில நம்பிக்கைகளைக் கொண்டுள்ளனர்.

> "எத்தனையோ கோயிலுக்குப் போனார்கள்; எவ்வளவோ அரச மரத்தைச் சுற்றினார்கள். ராக்காயி மூழ்காத குளம் இல்லை; ஆனால் அவள் 'முழுகாமல்' இருக்கவே இல்லை"[20]

குழந்தை வேண்டி கோயிலுக்குச் சென்று இறை வழிபாடு செய்வது, கோயிலுக்கு அருகில் உள்ள அரச மரத்தைச் சுற்றி வருவது, கோயில் குளங்களில் குளிப்பது போன்ற பல்வேறு பழக்கவழக்கங்களைத் தமிழர்கள் கொண்டிருக்கின்றனர் என்பதை அறிய முடிகிறது.

## பூப்பெய்தல்

பெண்ணானவள் பூப்பெய்தினால் அதற்கென ஒரு விழாவே கொண்டாடுவது நம் சமூகப் பழக்கமாகும்.

> "தன்மகள் பூப்பெய்திய செய்தியை ஊரெல்லாம் சொல்லி, திருமஞ்சன நீராட்டி, எல்லோருக்கும் தொன்னையில் சீனியும், ரொட்டியும் விநியோகம் செய்தாள்"[21]

இந்நிகழ்வுகள் ஊர்களுக்குத் தகுந்தாற் போலவும், சில இனத்திற்கு ஏற்ப மாறுபட்டும் அமைகின்றன.

## திருமணம்

திருமணம் என்பது மானுட வாழ்வில் இன்றியமையாத ஒன்றாக அமைந்துள்ளது. ஓர் ஆணும், பெண்ணும் இணைந்து வாழும் வாழ்வே திருமண வாழ்வு எனலாம்.

சமூகத்தில் திருமணச்சடங்குகள் ஏராளம். பெண் பார்த்தல், திருமணம், கர்ப்பக் காலச் சூழல், சடங்குகள், எனப் பல சடங்குகள், திருமணம் சார்ந்து தமிழகத்தில் நிகழ்கின்றன. "மானுட உறவுமுறைகளில் ஆழ்ந்த மிகவும் சிக்கலான ஒரு பந்தமே திருமணமாகும். இது சமுதாயத்தின் ஒரு சந்தி முறையாகவும், சமுதாய அமைபிபன் மிக் முக்கியமானதொரு பகுதியாகவும் விளங்குகிறது"[22] என்று புரோபில்லா கபூர் கூறுகிறார்.

திருமணமின்றி ஓர் ஆணும் பெண்ணும் பழகுவது மேல்நாட்டுப் பண்பாடாக விளங்குகின்றது. தமிழ்ச் சமூகமானது இதனை ஏற்பதில்லை. ஒருவனுக்கு ஒருத்தி என்பதே தமிழர் பண்பாடாகும். "மக்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒரு சடங்கின் மூலம் ஆணும் பெண்ணும்

புதிய குடும்பத்தை உருவாக்கிக் கொள்ள நிறுவப்பட்ட ஒரு வினையே 'மணம்' ஆகும். எனவே அதுவும் ஒரு நிறுகூனம் ஆகும். மனத்திற்குப் பிறகு கணவன், மனைவி உறவு நிலைப்பெற்றதாகிறது"[23] என்பார் சமூகவியலார்.

திருமணம் நிகழ்கின்ற பொழுது நடக்கும் சூழலை,

> "அம்மி மிதித்து அருந்ததி பார்த்து அக்னி சாட்சியாக மாங்கல்யம் அணிந்து மருமகளாகப் புக்ககம் போனவள்"[24]

என்று, திருமணம் நிகழ்கின்ற முறையையும், திருமணத்திற்கு முன்பு ஆண் வீட்டார் பெண் வீட்டாருக்குச் சென்று பெண் கேட்பது வழக்கமாகும். இதனை,

> "மாப்பிள்ளை வீட்டுக்கு, நம் பெண் வீட்டார் போய் சம்பந்தம் பேசுறது வழக்கமில்லையே"[25]

என்றும் சமூகப் பழக்கத்தை வெளிக்கொணர்கிறார்.

ஜாதகம் பார்க்கும் பழக்கம் எல்லோரிடமும் இருக்கின்றது. இரண்டு நபர்களுக்குரிய பொருத்தத்தைப் பார்த்து அதற்குப் பிறகு திருமணம் முடிவு செய்தலை இந்திய மக்களே பெரும்பாலும் பழக்கமாகக் கொண்டுள்ளனர்.

> "பெண்ணைப் பெத்தவங்க, கல்யாணப் பேச்சை ஆரம்பிக்கிறதுக்கு, இந்த ஜாதகம் தானே முதல் பரிவர்த்தனையாயிருக்கு? பொண்ணு வீட்டுக்காரங்க, ஜாதகத்திலே நம்பிக்கை வச்சு, நம்ம ஜாதகத்தையும் வச்சுப் பார்க்கத்தானே வேண்டியிருக்கு"[26]

என்று சமூகத்தில் நவீனச் சிந்தனையுடையோர் ஜாதகங்களை மறுத்தாலும் அதைச் சமூகப் பழக்கமாகவே பெண் வீட்டார்கள் பார்க்கின்றார்கள் என்ற கருத்து நிலையையும் காண முடிகிறது என்பதை ஆசிரியர் முன்நிறுத்திக் குறிப்பிடுகின்றார்.

இத்திருமணம் நிகழ்கின்ற இடங்கள், சாந்தி முகூர்த்தம் பற்றிய மக்களின் பார்வையை,

"ஏன் கல்யாணம் தான் உங்க வீட்டிலேயே
நடந்திட்டுதே? சாந்தி முகூர்த்தம் மாப்பிள்ளை
வீட்டிலே வச்சுக்கிறது தான் வழக்கம்"[27]

என்று தீர்க்க சுமங்கலி புதினத்தின் மூலம் வெளிப்படுத்துகின்றார் அய்க்கண்.

## கர்ப்பக் கால நம்பிக்கை

பெண் கர்ப்பம் அடைந்ததும் அதற்குச் சிலச் சடங்குகள் செய்கின்ற வழக்கம் உள்ளன. மேலும் கர்ப்பக் கால நம்பிக்கைகள் பலவும் காணப்படுகின்றன. அவற்றுள்,

"கர்ப்பமா இருக்கிறவங்க ஆசைப்படறதை வாங்கிக்
கொடுக்கலேன்னா பிறக்கிற குழந்தைக்குக் காதிலே
சீழ் வடியும்னு சொல்லுவாங்க..."[28]

என்று பெண்ணின் விருப்பத்தை உடனே பூர்த்தி செய்தல் கர்ப்பக் கால நம்பிக்கையாகவும், அவை இன்றைய நடைமுறையிலும் இருந்து வருவதைக் காண முடிகிறது. இதனை நன்குணர்ந்த ஆசிரியர் தம் புதினத்தின் வழியாக உணர்த்துகின்றார்.

## விதவைச் சடங்கு முறைகள்

கணவர் இறந்ததும், பெண்கள் பல்வேறு சடங்கு முறைகளை மேற்கொண்டு 'நோன்பு நோற்று' தனியே வாழ்கின்ற சூழல் தமிழகத்தின் பண்டையப் பண்பாடாகவே இருந்து வருகின்றது. இத்தகு நிலையைப் பல்வேறு 'பெண்ணுரிமை' வாதிகள் மறுத்து வருகின்றனர். எனினும் இத்தகையப் பழக்க வழக்கம் இன்னும் மக்களிடம் நடைமுறையில் உள்ளது.

"சின்ன வயசிலே புருஷனைப் பறி கொடுத்திட்டு....
ஒரே பையனை வளர்த்து ஆளாக்கினாங்க. இப்போ
அந்த பையனுக்கு நடந்த கல்யாணத்திலே அவங்க

முன்னாலே வரக்கூடாது. மாங்கல்யத்தைத் தொட்டு, ஆசிர்வாதம் பண்ணக்கூடாதுனு சொல்லி, மூலையிலே ஒதுக்கி வச்சிட்டாங்க....

விதவையாயிட்டால், நம்ம நாட்டிலே அவ்வளவு தான் மரியாதை! சுப காரியங்களிலே அவங்க கலந்துக்கக் கூடாதுன்னு சொல்லிவிடுவாங்க"

அது என்ன நியாயம்? இத்தனை நாள் வளர்ந்து ஆளாக்கின தாயை ஒதுக்கி வச்சிட்டு, அவ பிள்ளைக்குக் கல்யாணமா? அந்த பிள்ளையோட வாழ்க்கையிலே அந்தத் தாயை விட அக்கறை உள்ளவங்க, வேறு யார் இருக்காங்க?'' என்று பொருமினாள் லலிதா,

"அதுதான் இங்கே பழக்கம்..."[29]

என்று விதவையான பெண் வெளியில் செல்லக்கூடாது. சுப காரியங்களில் கலந்து கொள்ளக்கூடாது போன்ற நடைமுறைகளும், பழக்க வழக்கங்களும் மக்களிடம் இன்னும் பரவலாகக் காணப்படுகின்றது என்பதை விளக்குகிறார். மேலும், கணவன் இறந்ததும்,

> "முற்றத்தில் உட்கார வைத்துச் சுற்றிலும் பெண்கள் கூடி நின்று, அவளை நீராட்டி, கழுத்தில் கிடந்த தாலிச் சரட்டைக் கழற்றினார்கள்.
>
> கிராமங்களில் இந்த சடங்கின்போது பெண்களிடையே அழுகையும், புலம்பலும் வெடித்து பீறிடும்...
>
> அடுத்து, வெள்ளை போடும் சடங்கு, கல்யாணி உடுத்தியிருக்கும் வண்ணப் புடவையை மாற்றி, வெள்ளைப் புடவை அணிவித்து அழைத்து வந்து ஒரு மூலையில் உட்கார வைக்க வேண்டும்.
>
> பின்பு, நெருங்கிய உறவினர்கள், ஆளுக்கு ஒரு வெள்ளைச் சேலை கொண்டு வந்து, அவளுடைய தலையின் மேல் வைப்பார்கள்."[30]

மேற்கூறிய செயல்கள் கணவன் இறந்த பின்னர், ஊர் மக்கள் கூடி நிற்க கணவனை இழந்ததும் மனைவி செய்யும் சடங்கு முறையாகும்.

## இறப்புச் சடங்குகள்

ஆணோ அல்லது பெண்ணோ இறந்ததும், அவர்களுக்குரிய இறப்புச் சடங்குகள் செய்தல் மரபு வழிப்பட்டச் செயல்பாடாகும். பண்டையக் காலத்தில் இறந்தவரின் உடலை வைத்துப் புதைத்துச் சடங்கு செய்தல் மரபாக இருந்தன.

அய்க்கண் இன்றையச் சமூகத்தில் நிகழும் இறப்புச் சடங்குகளைக் குறிப்பிடுகின்றார்.

> "காரைக்குடிக்குச் சடலம் எடுத்துச் செல்லப்பட்டு ஈமக் கிரியைகள் நடந்தன...
>
> எட்டாம் நாள் கருமாதிக்கு, உறவினர்கள் எல்லோரும் வந்திருந்தார்கள்.
>
> ராஜப்பாவுக்குப் பிரியமான பொருள்களையும், உணவு பண்டங்களையும் படைத்து வணங்கினார்கள்.
>
> கருமாதி முடிந்து, எல்லோரும் புறப்படும் முன்பு, இது போன்ற கருமாதி வீட்டிலே ஒரு சுப காரியத்தைப் பற்றி ஒரு கல்யாணத்தைப் பற்றி பேசுவது அந்த வட்டார மரபு"[31]

என்ற இறப்புச் சடங்கு நிகழ்வையும்,

> "அடக்கம் முடிந்து மறுநாள் காலை காடாற்றும் சடங்கும் நிறைவேறி எட்டாம் நாள் கருமாதி....
>
> பின்புறத்தில் இரண்டு மூன்று கல் அடுப்புகள் போட்டுப் பலகாரங்கள் செய்து கொண்டிருந்தார்கள் பெண்கள்.

படையலுக்கான ஏற்பாட்டை ‘குடி அம்பட்டன்’ செய்து கொண்டிருந்தான்.

ஒரு நீண்ட கம்பின் குறுக்குவட்டில் இரண்டு சிறு குச்சிகளைக் கட்டி, சுவர் ஓரமாக நீளவாக்கில் நிறுத்தி வைத்துக் கம்பின் உச்சியில் ஒரு தலைப்பாகையைச் சுற்றி வைத்துச் சிறு குச்சிகளில் கணேசனுடைய சரிகை வேட்டியையும் துண்டையும் மடித்துப் போட்டு, அதன் முன்னாலே பெரிய வாழையிலையைப் பரப்பி வைத்தான்.

இலைக்குப் பக்கத்திலே கணேசனுடைய ஆடைகளை அடுக்கி வைத்தார்கள். அவனுக்குப் பிரியமான பலகார வகைகளைச் சமையற் கட்டிலிருந்து கொண்டு வந்து வாழையிலையில் பரப்பிப் படையல் செய்தார்கள். பொழுது சாய்ந்ததும், உறவினர்கள் குறிப்பாகப் பெண்களும் சிறுவர்களும் படையல் முன் நின்று தீபாராதனை செய்து சாம்பிராணிப் புகை எழுப்பி கும்பிட்டார்கள்”[32]

மேற்கூறியபடி இறந்ததும் ஈமச் சடங்கு முடித்து விட்டு மறுநாள் சடங்குச் செய்வது எட்டாம் நாள் கருமாதி செய்வது போன்ற நிகழ்வுகளும், அந்நிகழ்வில் இறந்தவர்க்காகச் செய்வதால் அவருக்குப் பிடிக்கின்ற உணவு வகைகளைத் தயார் செய்து வைத்துப் படையல் போட்டு வழிபடுவதும் மரபாக இருந்து வரும் பழக்கமாகும். இதனை அய்க்கண் புதினத்தில் தெளிவுபடக் குறிப்பிடுகின்றார்.

## ஏனைய பழக்க வழக்கங்கள் மற்றும் நம்பிக்கைகள்

சிற்றூர்க் கட்டுப்பாடு சமூகத்திற்கும் சமூகம் வேறுபடும். பிற நிகழ்வுகளுக்கும் தலையாதது ஆகும். சிற்றூர் மக்களின் தலைவர்,

செயலாளர் உள்ளிட்ட சிலர் தேர்ந்தெடுக்கப்படுவர். அவர்களே அவ்வூரின் நன்மைகள், தீமைகள் அனைத்தையும் ஆராய்ந்து தீயவற்றினைக் களைந்து மக்களை நல்வழிக்குக் கொண்டு செல்வர்.

இத்தகு பழக்க வழக்கம் சிற்றூர்கள் தோறும் நடைமுறை உள்ளது. சிற்றூர் கூட்டம் நடைபெறுவதற்கும், சிற்றூர்க் கூட்டத்தைக் கூட்டுவதற்கும், கூட்டத்தில் தலைமை தாங்குவதற்கும், குறிப்பிட்ட சிலருக்கே உரிமை உண்டு. அதனை, வயல் புதினத்தில் அய்க்கண் வெளிப்படுகிறார்.

> "ஊரின் நடுவேயுள்ள அந்த ஆலமரந்தான் கிராமத்தின் பொதுச் சபை கூடுமிடம்
>
> கர்ணம் ஏற்பாடு செய்திருந்தபடி ஊரார் யாவரும் ஆலமர நிழலில் கூடியிருந்தார்கள்,
>
> ஊராருக்கு ஒரு விஷயம்..."[33]
>
> என்று பேசிய பின்னர் எல்லோருக்கும் சம்மதமா? எனக் கேட்கின்றனர்.
>
> "தண்டல்காரர் எழுந்து நின்று, "அந்தப்படி ஊரார் எல்லோருக்கும் சம்மதந்தானுங்களே?'' என்று கேட்டார்.
>
> 'சம்மதந்தான், சம்மதந்தான்' என்ற குரல்கள் கூட்டத்தினிடையே கேட்டன."[34]

இறுதியில் கூட்டத்தைக் கலைப்பதற்காகத் தண்டல்காரர் பேசுகிறார்.

> தண்டல்காரர், "கூட்டத்தைக் கலைக்கலாம் என்கிறதுக்கு, எல்லோருக்கும் சம்மதந்தானுங்களே?" என்று உரக்க கூவினார்.
>
> 'சம்மதந்தான்' என்ற குரல்களுடன் கூட்டம் எழுந்து கலைந்து சென்றது"[35]

ஒரு சிற்றூர்க் கூட்டம் ஆரம்பிப்பது, பேசுகின்ற செய்திகளை அங்கீகரிப்பது, இறுதியில் கூட்டத்தைக் கலைப்பது உள்ளிட்ட அனைத்து நிகழ்வுகளையும் மக்களின் உணர்வுகளைக் கேட்டுச் செயல்படுவது பழக்க வழக்கமாய், கிராமத்தின் மரபாய் காலம் காலமாகக் காணப்படுகின்றன.

'அவனுக்காக மழை பெய்கிறது' புதினத்தில் இதனைக் குறிப்பிடுகின்றார். ஊர்க் கூட்டம் நடைபெறும் நாளில் ஊரை மறித்துவிடுவர். மக்கள் யாரும் வேலைக்குச் செல்லாமல் கூட்டத்திற்கு வர வேண்டும் எனத் தெருவில் கூறிக்கொண்டு செல்வர்.

> "மறிக்கப்பட்டு விட்டால், சம்மந்தப்பட்டவர்கள் ஊர்க் கூட்டத்துக்கு வந்து, வாக்குமூலம் கொடுத்து பஞ்சாயத்துக்கு உட்பட வேண்டும் இது கிராமத்தின் மரபு"[36]

என்றும் அய்க்கண் உணர்த்துகிறார்.

## முளைப்பாரி

'முளைப்பாரி' என்பது தென்மாவட்டங்களில் சில இடங்களில் நிகழும் வளமைச் சடங்காகும். குறிப்பாக வறட்சி மிகுந்த பகுதியில் இப்பழக்க வழக்கம் நடக்கின்றது. "முளைப்பாரிகளில் போட்டிருக்கும் பயிர்கள் நன்றாக முளைத்து வளர்ந்திருந்தால் அவ்வருடம் ஊரிலே மழை பெய்து நன்றாக வளங்கொழிக்கும் என்பது மக்கள் நம்பிக்கை"[37] என்று அய்க்கண் குறிப்பிடுகின்றார்.

> "மாரியம்மன் கோயில் திருவிழாவுக்காக கோயிலிலே 'முளைப்பாரிகள்' போட்டிருந்தார்கள். பானையின் கீழ்ப்பாகத்தை வட்டமாக உடைத்துவிட்டு, வாய்ப்பகுதியைக் கீழ்புறமாக வைத்து, மேலே காய்ந்த எரு, குப்பை மண் எல்லாம் கொட்டி நிரப்பி,

அதிலே மொச்சை, சோளம், கேப்பை முதலிய பயறுகளை வட்ட வட்டமாக விதைத்துச் சூரிய வெளிச்சம்படாமல் கோயிலுக்குள் வைத்திருப்பார்கள். அதற்குத் தினசரி அதிகாலையிலும் சாயந்திரப் பொழுதிலும் தண்ணீர் ஊற்றி வளர்ப்பார்கள்.

அந்தப் பயிர்கள் நன்றாக வளர்ந்து உயர்ந்து அழகாக வட்ட வடிவில் காட்சியளிக்கும். மாரியம்மன் திருவிழா அன்று அவற்றைப் பெண்கள் தலைமேல் தூக்கிக் கொண்டு ஊர்வலமாகச் சென்று கண்மாயில் கொட்டுவார்கள்.

முளைப்பாரிகளுக்குத் தண்ணீர் ஊற்றும் வேலையை, பத்து பன்னிரண்டு வயதுக்குள் உள்ள பையன்களோ, சிறுமிகளோ தான் செய்ய வேண்டும். வயதுக்கு வந்துவிட்ட பெண்களும் பெரியவர்களும் அறைக்குள்ளே போய் தண்ணீர் ஊற்றக்கூடாது என்பது மரபு"[38]

மழை வேண்டித் திருவிழாக் காலங்களில் 'முளைப்பாரி' விழா எடுத்து நிகழ்வதையும் காண முடிகின்றது. இவ்விழா இன்றும் நடைபெறுகின்றது. இத்தகு நம்பிக்கைகள் பழக்க வழக்கங்களாய் மாறி நிற்பதையும் புதினங்கள் வழி நாம் அறிய முடிகிறது. மேலும்,

"கிராமங்களின் கண்மாய்க் கரையில் இருக்கும் அய்யனார் கோயிலுக்கு, 'குதிரை எடுப்பு' நடத்தினால், மழை பெய்து கண்மாய் நிரம்பும் என்பது கிராமத்து மக்களின் நம்பிக்கை"[39]

என்பதையும் அய்க்கண் குறிப்பிடுகிறார்.

## மூட நம்பிக்கைகள்

ஒரு நாட்டின் பண்பாட்டில் நம்பிக்கைகளும், பழக்கவழக்கங்களும் பெரும் பங்கு வகிக்கின்றன. "நம்பிக்கைகளும் பழக்கவழக்கங்களும் பண்பாட்டு வளர்ச்சியின் படிக்கற்கள்"[40] என்று சு.சக்திவேல் குறிப்பிடுகின்றார்.

நம்பிக்கையானது முயற்சி வயப்பட்டதாக இருக்க வேண்டும். சிலர் 'விதி' எனும் பெயரில் மூட நம்பிக்கையையும் சமூகத்தில் பரப்பி விட்டிருக்கின்றனர். இதனையும் அயக்கண் உணர்த்தத் தவறவில்லை. இத்தகைய மூட நம்பிக்கைகளால் உயர்ந்த பண்பாடு உடைய சமூகம் கீழ்நிலைக்கும் தள்ளப்பட்டிருக்கிறது என்பதில் யாதொரு ஐயமில்லை.

> "வாழ்க்கையில் நம்பிக்கை தேவை, நம்பிக்கை என்ற அச்சில் தான் உலகம் சுழலுகிறது. ஆனால் அந்த நம்பிக்கை மூட நம்பிக்கையாக இருக்கக் கூடாது. ஆதிசேடன் என்ற பாம்பு தலைமேல் தாங்கிக் கொண்டிருக்கிறது என்பது மூடநம்பிக்கை. கோயிலில் கடவுள் இருக்கிறார் என்பது நம்பிக்கை'. அவர் பூணூல் போட்டுக் கொண்டு வேதம் ஓதுகிறார் என்பது மூட நம்பிக்கை"[41]

என்று நா.தனராசன் 'பிரபஞ்சனின் புதினக் கலை' எனும் தன் நூலில் குறிப்பிடுவது நோக்கத்தக்கதாகும். இது போன்று பல்வேறு மூட பழக்கவழக்கங்களும் மக்களிடம் பரவி இருக்கிறது என்பதை அய்க்கண் உணர்த்துகிறார்.

மூடநம்பிக்கையைத் தகர்த்தெரியும் பொருட்டு, 'தீர்க்க சுமங்கலி' புதினத்தில் ஜாதகத்தின் தவறைச் சுட்டி உணர்த்துகிறார். பல பேர் பெண் பார்த்துவிட்டுச் செல்கின்றனர். 'களத்ர தோஷம்' என்பதால் அப்பெண்ணை ஒதுக்கி விடுகின்றனர். இறுதியில் அதனை மீறித் திருமணம் செய்து கொண்டு நல்வாழ்வு வாழ்பவளாக ஊரினுள் மதிக்கப்படுகிறாள் என்ற கருத்துடைய கதையை அய்க்கண் உணர்த்துகின்றார்.

"லலிதாவோட ஜாதகம் அப்படி ஒன்னும் விசேஷமானதில்லை. ரொம்ப சுமாரான ஜாதகமாய்த் தானிருக்கும்னுதான் நினைச்சேன், ஆனால் மோசமான ஜாதகமாயிருக்கும்னு நினைக்கலே' என்ற ஜோசியரின் குரல் உடைந்து பிசிராக ஒலித்தது. ....

ஜாதகத்திலே, எட்டாம் இடத்தில் களத்ர ஸ்தானத்தில் சுய கிரகம் நீச்சடைந்து ராகு இருக்கிறதனாலே...?...

லலிதாவுக்குக் களத்ர தோஷம் இருக்கு, அவளுக்குத் தாலி கட்டுற புருஷனுக்கு அல்பாயுசு, ரொம்ப நாள் லலிதா சுமங்கலியாயிருக்கமாட்டா"[42]

என்று சோதிடர் குறிப்பிடுகின்றார்.

"பிறந்ததிலிந்தே துக்கிரி, பீடை என்று தூற்றியதையெல்லாம் தாங்கிக் கொண்டு, ஜாதகத்திலே களத்ர தோஷம் என்று ஏற்பட்ட துரதிஷ்டத்தையும் பொறுத்துக் கொண்டு, காதலாலே ஏற்பட்ட எதிர்ப்புகளையும் சோதனைகளையும் எதிர்த்து நின்று, வறுமை, கஷ்டம் எல்லாவற்றையும் சமாளித்து உழைத்துப் பாடுபட்டு, குழந்தைகளை வளர்த்துப் படிக்க வைத்து உருவாக்கி – ஓ லலிதா! நீ எத்தனை போராட்டங்களில் நின்று ஜெயித்திருக்கிறாய் அம்மா"[43]

என்று கணவனே மனைவியைப் புகழ்ந்து பேசுவதும் இறுதி வரை கணவனை இழக்காமல் சுமங்கலியாய் வாழ்வதுமாய் புதினத்தை நகர்த்தி ஆசிரியர் அய்க்கண் இது போன்ற மூடநம்பிக்கைகளைத் தகர்த்தெறிந்துள்ளார். 'மறுபக்கம்' நாவலில், முதன்மைப் பாத்திரமான சேதுவின் ஜாதகம் பற்றி,

"சேதுவின் ஜாதகம், அவ்வளவு சிறப்பாக இல்லை என்று அபிப்பிராயப்பட்டார் அந்தச் சோதிடர்.

ரொம்பச் சுமாரான ஜாதகம்தான்... ஏதோ வாய்க்கும் கைக்கும் எட்டுறாப்பலே, ஜீவனம் நடத்துற ஜாதகம், மற்றபடி ஓகோனு பிரமாதமா வர்ற ஜாதகம் இல்லே... என்று உதட்டைப் பிதுக்கிவிட்டார் ஜோசியர்.

இந்த சேதுராமனுக்கா பிரகாசமான எதிர்காலம் வரப்போகிறது? ... ஊஹூம்...

என்ன ஸார், இவனாவது விதியை வெல்றதாவது?... இவன் பிறந்தன்னிக்கே தாயை விழுங்கின துக்கிரி ஸார்!" என்று கந்தசாமி ஆரம்பித்ததும், சட்டென்று மாணிக்கம் ஸார், 'கந்தசாமி' என்று கூவுகிறார்."[44]

என்று சோதிடத்தால் துக்கிரியாகப் பார்க்கப்பட்ட சேது உழைப்பால் மிகப் பெரிய பணக்காரனாய் மாறி, சிறந்த பண்பு உள்ளவனாகவும் இருக்கிறான் என்பதாக கதை அமைகின்றது. அய்க்கண் அவர்கள் திருவள்ளுவரின் 'முயற்சி திருவினையாக்கும்' என்ற கருத்திற்கு ஒப்பவே சோதிடத்தை எதிர்த்துச் சிறந்த சீர்த்திருத்தவாதியாய் பரிணமிக்கிறார்.

பெண்கள் தவறு செய்தால் மழை பெய்யாது என்ற மூட நம்பிக்கையும் சிற்றூர்களில் இருந்துள்ளது. இதனைப் பாத்திரங்களின் மூலம்,

"ஊரிலே, மழை பெய்யலே, மழை பெய்யலேன்னு மேலே பார்த்தா என்ன பிரயோசனம்? இப்படி பொம்பளையெல்லாம் தப்புப் பண்ணினா, மழை எப்படி பெய்யும்?"[45]

என்று மூடப் பழக்கவழக்கங்களோடு இருப்பதை அய்க்கண் உணர்த்துகின்றார்.

புகைப்படம் எடுத்தால் ஆயுள் குறைவு என்பதை,

"ஐயையோ! 'போட்டோ பிடிக்கிறதா?... போட்டோ பிடிச்சால் ஆயசு குறைவுனு எங்க ஊரிலே சொல்வாங்க"[46]

என்று கூறும் தவறான நம்பிக்கைகளும் ஊர்களில் இருப்பதை அய்க்கண் உணர்த்துகின்றார்.

## சகுனம் பார்த்தல்

ஓர் இடத்திற்குச் செல்லும் பொழுது நேரம், காலம் பார்த்துச் செல்வர். இத்தகைய பழக்க வழக்கம் பழங்காலமாக நடந்து வருகிறது.

> "முகூர்த்தம் பார்க்க, ஜாதகத்தை எடுத்துக் கொண்டு
> ஆடியபாதம் புறப்பட –
>
> அந்தச் சமயம் பார்த்து, எதிர்வீட்டிலிருந்த ஓடிய
> எலியைக் குறிபார்த்து, ஒரு பூனை குறுக்கே பாய –
>
> சடாரென்று திரும்பி வந்து வீட்டில் உட்கார்ந்துவிட்டார்
> ஆடியபாதம்"[47]

எலியைப் பூனை விரட்டுவது இயல்பான நிகழ்வுகள். ஆனால் தடை ஏற்பட்டதென மக்கள் நினைக்கிற தவறான பழக்க வழக்கங்களையும் அய்க்கண் உணர்த்துகின்றார். இது போன்று பல்வேறு விதமான மூட பழக்க வழக்கங்களையும் அய்க்கண் தமது புதினங்களின் வழி தெளிவுற உணர்த்துகின்றார்.

## மருத்துவம்

சிற்றூர் மக்கள் இயற்கை நெறி சார்ந்த அதனோடு பின்னிப்பிணைந்த வாழ்வை மேற்கொள்கின்றனர். ஆதலால் அவர்கள் சுயச் சார்புடன் பல மருத்துவக் கலைகளைக் கற்றுத் தேர்ந்துள்ளதைக் காண முடியும்.

நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம் என்பது ஆன்றோர் வாக்கு, பண்டையக்காலம் முதல் இன்று வரை நோய் இன்றி ஆரோக்கியமாக வாழ்கின்ற வாழ்வே நல்வாழ்வாக மக்கள் கருதுகின்றனர்.

மருத்துவத்தின் சிறப்பைப் பற்றிச் சங்க இலக்கியங்கள் சிறப்பாக எடுத்தியம்புகின்றன "வருந்திய செல்லல் திற்றை ஒருவன் மருந்து அறை கோடலின் கொடிதே"[48] என்பன போன்ற மருத்துவர்களுக்கே உரிய சிறந்த பண்புகளை நூல்கள் சுட்டுகின்றன.

மருத்துவர்கள் நல்ல கொள்கைகளையும், தூய ஒழுக்கத்தையும் உடையவர்களாயிருந்தார்கள் என்பதை "விளங்கிய கொள்கை ஆயுள் வேந்தர்"[49] என்று சிலப்பதிகாரம் குறிப்பிடுகின்றது.புதினங்கள் வழியாக அய்க்கண் மக்களிடம் வழக்கத்தில் உள்ள மருத்துவ முறைகள் சிலவற்றைக் குறிப்பிடுகின்றார்.

வயிற்று வலிக்குத் தவுட்டு ஒத்தடம் கொடுத்தல் பழக்கத்தில் உள்ளது.

> "ஆத்தா! வேண்டாம், இதுக்கு ஏன் வைத்தியரு?...
> இது சும்மா சூட்டு வழிதான்... கொஞ்சம் ஒத்தடம்
> கொடுத்தா, கொஞ்ச நேரத்திலே சரியாய்ப் போயிடும்"
> என்று தம்பியே வைத்தியம் சொன்னான்"[50]

என்றும்,

> "காய்ச்சல் அடித்த நாலைந்து நாட்களும் அவன்
> பக்கத்திலேயே இருந்து, மருந்து ஊட்டி, வெந்நீர்
> கொடுத்து, நெற்றியிலே நாமக்கட்டிப் பற்று போட்டு,
> பத்திய உணவை ஊட்டிக் கவனித்துக்
> கொண்டாள்"[51]

மேற்கூறியது போன்ற சில வைத்திய முறைகள் மக்களிடம் வழங்கப்படுவதை அய்க்கண் உணர்த்துகின்றார்.

## கலை

மனிதன் சமூகத்தில் தாம் அனுபவித்த நிகழ்வுகளைப் பிறருக்கு ஏதோ ஒரு வகையில் அறிவிக்க விரும்புகிறான். அதற்கெனப் புதிய வடிவம் தேடுகிறான். அவையே கலை வடிவங்களாக உருமாறுகின்றன.

சமூகத்தின் நல்வளர்ச்சிக்கும், இன்ப நுகர்ச்சிக்கும், கலையே அவசியமாகின்றது. 'ஆடி பாடி வேலை செய்தால் அமுப்புத் தெரியாது' என்பார் பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம். மனிதனுக்கு இன்பம் பயக்க வல்லதாம் கலையே அனைத்திலும் முதன்மையிடம் பெறுகின்றது.

அய்க்கண் அவர்கள் தமது புதினங்களில் கூத்துக் கலைகளைத் தெளிவுற விளக்குகிறார். திருவிழாக் காலங்களிலும், மக்கள் ஒன்று சேரும் காலங்களிலும், பல்வேறு நாடகங்கள், கூத்துக்கள் ஆகியவற்றைச் சிற்றூர் மக்கள் ஒன்றிணைந்து நடத்துவர். இத்தகைய பழக்கம் இன்றும் மக்களின் வழக்கமாகவே உள்ளது. 'அய்க்கண்' அவர்கள் சிற்றூர்களில் நடக்கின்ற பல்வேறு நாடகங்களைப் புதினங்களில் பதிவு செய்துள்ளார். நடிகர்கள் தனித்துவம் மிக்கவர்களாகவும், மிகுந்த பண்புடையவர்களாகவும் கலைத்துறையில் இருந்துள்ளனர்.

> "ராஜபார்ட் ராஜப்பாவைப் பற்றி எல்லோருக்கும் நன்றாகத் தெரியும். நடிகர்களுக்கு உள்ள எந்தத் தீய பழக்கமும் அவரிடம் இல்லை. குடி, பெண்ணாசை, பொடி, புகை மற்றும் எந்த தீய பழக்கமும் இல்லாதவர்"[52]

என்று நடிகர்களில் சிலர் தூய தன்மையுடையோராய் இருந்ததை ஆசிரியர் விளக்குகின்றார். ஸ்த்ரி பார்ட் நடிகையின் சிறப்பை,

> "சுந்தரி பாயையா தெரியாது? ஸ்பெஷல் நாடகங்களிலே ஸ்த்ரி பார்ட் நடிப்பாலோ, மதுரை சுந்தரி – அவள்தானே?... அடேயப்பா!... அந்த காலத்திலே அவள் மேடையில் நடிக்கிற நடிப்பு,

ஜொலிக்கிற அழகு, அருமையான சங்கீத ஞானம்... ஆகா! அந்த அழகும் பாட்டும் இன்னும் என் கண்ணுக்குள்ளே நிக்குதுங்க. ஸ்ரீ வள்ளி திருமண நாடகத்திலே, தினைப்புனக் காட்சியில்

ஆலோலம்.. ஆலோலம்... சோ... சோ....னு பாடிகிட்டு வரப்போ, கிளிகள் மட்டுமா பறக்கும்"[54]

என்று ஸ்ரீ வள்ளி திருமணத்தின் நாடக நடிகையின் சிறப்பையும், ஸ்ரீ வள்ளி திருமணம் நாடகத்தில் நிகழும் நிகழ்வையும், எடுத்துக்காட்டுகின்றார். அக்கதையில்

"தங்கள் வேட்டுவ குல தர்மத்திற்கிணங்க, பருவம் அடைந்த இளம் பெண்கள், தினைப்புனம் சென்று, பயிர்களைத் தின்ன வரும் பட்சியினை விரட்ட வேண்டிய கடமையைப் பற்றித் தந்தை நம்பிராஜன் சொன்னதும், அதற்கு வசனத்தில் பதில் சொல்லிவிட்டு, வழக்கமான சங்கரதாஸ் சுவாமிகளின் சாகித்யத்தைப் பாட வேண்டிய ஸ்ரீவள்ளி நாயகி, தன் சொந்த மனக் குழப்பத்தில், சாகித்யத்தின் பல்லவி நினைவுக்கு வராததால், தந்தையிடம் தொடர்ந்து ஏதோதோ சுற்றி வளைத்து பேசிக் கொண்டிருப்பதைக் கவனித்தான் கருப்பையா"[54]

போன்ற பல்வேறு கலைத் தொடர்புகள் மக்களின் பண்பாட்டோடு இணைந்திருந்ததை அய்க்கண் அவர்கள் தமது புதினங்ளில் இணைத்துக் கதையை நகர்த்தியிருகின்றார். புதினம் மக்களோடு தொடர்புடையது, மக்களுக்கே உரியது, இவை வெறும் கற்பனையல்ல. நாளைய சூழலில் வரலாற்றை ஆய்வு செய்யும், பண்பாட்டை உணர்த்தும் என்ற நோக்கினில் ஆராய்ந்தால் முதன்மையிடத்தில் 'அய்க்கண்' புதினங்கள் அமையும் எனலாம்.

## விளையாட்டுக்கள்

மக்களோடு தொடர்புடைய கலைகளில், வீரத்தின் நிலையை வெளிப்படுத்தும் ஆண்களுக்குரிய விளையாட்டுக்கள், பெண்களுக்குரிய விளையாட்டுக்கள் இரண்டறக் கலந்திருக்கின்றன. “உடலுக்கு நலம் தரும் விளையாட்டுப் பயிற்சியையும் உடற்பயிற்சியாகக் கொள்வர். விளையாட்டை மனமகிழ்ச்சயூட்டும் செயல் என்பர். அவ்விளையாட்டு பொழுதுபோக்காக மட்டுமின்றி நடல்நலம், மனநலம், பேணுவதாகவும் உள்ளது. விளையாட்டில் உடல் செயல்கலின்றி உள்ளச் செயல்களும் இடம் பெறுகின்றன”[55] என்று சு.சக்திவேல் கூறுகின்றார்.

அறிஞர்கள் விளையாட்டைப் பற்றிக்கூறும் பொழுது “மன மகிழ்ச்சிக்காகச் செய்யப்படும் செயல்கள் ஒழுங்குமுறை ஆட்டமாகவும் அதுவே உடல்திறன், உடற்பயிற்சி ஆட்டமாகவும் வளர்ச்சிப்படி நிலைகளில் மாறுகிறது”[56] என்பர்.

மேற்கண்ட கருத்துகளின் அடிப்படையில் நோக்கினால், பொழுதுபோக்கு நிலைக்காக ஆரம்பிக்கப்பட்டு மனமகிழ்ச்சியூட்டும் நிலைக்கு மாறிய செயல் வடிவங்களே விளையாட்டு என்று கூறலாம்.

குறிப்பாக, ‘மஞ்சு விரட்டு’ விளையாட்டு இன்று உலகெங்கும் கொண்டாடப்படும் சிறந்த விளையாட்டாக உள்ளது. தனது உயிரைத் தியாகம் செய்து, விளையாடும் மஞ்சுவிரட்டுக்கு நிகரான விளையாட்டு ஏதுமில்லை எனக் கருதலாம். அவ்விளையாட்டினையும், ஏனைய விளையாட்டுக்களையும் சமூக மரபுகளாகவும், பண்பாடாகவும் போற்றி மக்கள் வளர்க்கின்றனர் என்பதை அய்க்கண் தமது புதினங்களின் மூலம் வெளிப்படுத்துகின்றார்.

விளையாட்டுக்களில்,

1. மஞ்சுவிரட்டு
2. சிலம்பாட்டம்
3. ஆடுபுலி ஆட்டம்
4. கிளித்தட்டு விளையாட்டு

போன்றவற்றைப் பண்டையப் பண்பாட்டுடன் நினைவில் நிறுத்துகின்றார். துவக்க காலச் சிற்றூர் மக்களில் சிலர் விளையாட்டுக்களில் சிறந்து விளங்குவர் என்பதை,

> "குஸ்தி, சிலம்பம், மஞ்சுவிரட்டு எல்லாவற்றிலும் முதலில் நிற்பார். எந்தக் கெட்ட பழக்கமும் அவரைக் கண்டு பயந்து நெருங்கவில்லை"[57]

என்பதன் வழி அறியமுடிகிறது. இவ்விளையாட்டுக்களினால் சிறந்த வீரர்களாகவும், வலிமை மிக்கவர்களாகவும் விளங்கியது குறிப்பிடத்தக்கது.

> "இளம் வயதிலே, அந்த நெடிய கையிலே சிலம்பக் குச்சியை எடுத்துவிட்டால், பெரிய பெரிய வஸ்தாதுகள் எல்லாம் குச்சியை நேரே நட்டுச் சலாம் வைத்து மண்டியிட்டுப் போய்விடுவார்கள்"[58]

என்று கையில் பெரிய குச்சிகளை வைத்துக் கொண்டு ஆடும் சிலம்பாட்டம் பற்றியும்,

> "வலுவான கால்களைக் கீழே ஊன்றி, கைகளால் கொம்புகளைப் பிடித்துவிட்டால், பெரிய பெரிய ஜல்லிக் கட்டுக்காளைகளெல்லாம் அசைய முடியாமல் மூச்சுமுட்டிக் கீழே சாய்ந்து கால்களைப் பரபர என்று உதறித்துடிக்கும்"[59]

என்று மஞ்சு விரட்டுப் பற்றியும் ஆசிரியர் பாத்திரங்களின் மூலம் விளக்குகின்றார்

மஞ்சுவிரட்டில், காளையின் கொம்பில் பணம், நகை எல்லாம் கட்டி விடுவது பழக்க வழக்கமாக இருக்கின்றது. இதனை,

> "கொம்பிலே ஆயிரம் ரூபாய் கட்டிய திமிரில், சிறாவயல் மஞ்சுவிரட்டில், கொம்பைச் சிலுப்பித் தூசி கிளப்பிக் கொண்டு சிம்ம நடைநடந்த பாளையூர்

கோயில் காளையை, ஒரே பிடியில் சவுள் பாய்ந்து கழுத்தை நெருக்கிக் கீழே சாய்த்து, வலிப்புக்காரனைப் போல் அது கால்களை வெட்டி உதற அமுக்கி அடக்கி பந்தயப் பணத்தையும், துண்டையும் பறித்த வீரம், இன்னும் அந்த உடலிலும், அந்தப் பகுதி வரலாற்றிலும் முத்திரைப் பதிந்திருந்து”[60]

என்று மஞ்சுவிரட்டில் நிகழும் நிகழ்வை அய்க்கண் வெளிப்படுகின்றார். தமிழ்ச் சமூக விளையாட்டுக்களில் ஆண்களுக்குரிய விளையாட்டுக்கள் வீரம் சார்ந்த விளையாட்டாகவே காணப்படுகின்றன. பெண்களுக்குரிய விளையாட்டுக்கள் மென்மையான விளையாட்டுக்களாக இருக்கின்றன. வீட்டில் இருந்தபடியே விளையாடும் விளையாட்டுகளும் உள்ளன.

“மரத்தடிகளிலும் வீட்டுத் திண்ணைகளிலும் வயது வந்த ஆண்கள் உட்கார்ந்து, ஆடுபுலி ஆட்டம், தாயக்கட்டம் முதலிய விளையாட்டுக்களில் மும்முரமாக ஈடுபட்டிருந்தார்கள்”[61]

என்றும்,

“ஏண்டி, இன்னிக்கு என்ன விளையாட்டு விளையாடலாம்?” என்றாள் ஒருத்தி.
“கிளித்தட்டு”
“நேத்துதானே கிளித்தட்டு ஆடினோம்’”
“பாண்டி”
‘வேண்டாம்.. சடுகுடு ஆடலாமா?’
ஆடலாம்... ஆடலாம்”[62]

என்று எல்லோரும் குதித்து ஆமோதித்தார்கள் என்று கிளித்தட்டு, ஆடுபுலி ஆட்டம், தாயம், பாண்டி, சடுகுடு போன்ற விளையாட்டுக்களையும் அய்க்கண் குறிப்பிடுகின்றார்.

இத்தகைய விளையாட்டுக்கள் அனைத்தும் வீரம் சார்ந்ததாகவும், அறிவுக்கு வேலை கொடுப்பதாகவும் சிற்றூர்களில் வழக்கத்தில் இருந்து வருகின்றன. இதனை நன்கு ஆய்ந்து புதினங்களில் பதிவு செய்துள்ளார். இத்தகு நோக்கு தமிழகப் பண்பாடுகள், பழக்க வழக்கங்களை உலகிற்கு எடுத்துணர்த்தும் போக்கில் அமைந்துள்ளது.

## பொருள்சார் பழக்கவழக்கங்கள்

மக்கள் அவர்களின் பயன்பாட்டிற்காக ஏற்படுத்திக் கொள்ளும் அனைத்துப் பொருட்களும் பொருள்சார் பழக்கவழக்கங்களாய் இருக்கின்றன. உணவு, உடை, வீட்டு உபயோகப் பொருட்கள் என மக்கள் பயன்படுத்தும் பொருட்கள் என அனைத்தும் அடங்கும். தேவைக்கு ஏற்ப அய்க்கண் புதினங்களில் பொருள்சார் பழக்க வழக்கங்களை வெளிப்படுத்தியுள்ளார். தீர்க்க சுமங்கலி நாவலில்,

> "எல்லோரும் டிபன், காபி சாப்பிட்டார்கள், ஆகா! காப்பி ரொம்ப பிரமாதம்..."[63]

என்றும்,

> "தன் மகள் பூப்பெய்திய செய்தியை ஊரெல்லாம் சொல்லி, திருமஞ்சன நீராட்டி, எல்லோருக்கும் தொன்னையில் சீனியும், ரொட்டியும் விநியோகம் செய்தாள்"[64]

என்றும், பொருள் சார்ந்த பண்பாட்டு முறைகளை அய்க்கண் குறிப்பிடுகின்றார்.

> "மேரியாத்தா! மாப்பிள்ளைக்கு பிரமாதமாய் சமைக்கணும்... நான் போய் வண்டியைப் பண்ணையார் வீட்டிலே விட்டுட்டு, மாவு ஆட்ட வந்திடறேன். இடியாப்பம், பால் பணியாரம் எல்லாம் செஞ்சு கொடுக்கணும்"[65]

என்று உணவு சார்ந்த பொருட்களை அய்க்கண் தமது புதினங்களில் வெளிப்படுத்துகின்றார். ‘அவனுக்காக மழை பெய்கிறது’ என்ற புதினத்தில்,

> “தாரை, தம்பட்டை, மேளம், தவுலர், முழங்க
> மாரியம்மன் கோயிலுக்குச் சென்று, அம்மன்
> சன்னதியில் அவற்றை வரிசையாக வைத்துவிட்டு
> ஆட்டம் பாட்டங்களில் கலந்து கொண்டார்கள்”[66]

என்று இசைக் கருவிகளான தாரை, தம்பட்டை, மேளம், தாளம் போன்ற பல்வேறு இசைக்கருவிகளை, பயன்படு பொருட்களை அய்க்கண் பயன்படுத்தியுள்ளார். சமகால நடைமுறை வாழ்க்கையில் பயன்படுத்தும் அலைபேசி, கடிகாரம், மூன்று சக்கர வாகனம், சிற்றுந்து, பேருந்து, திரையரங்கு, போன்ற பல்வேறு பொருட்களையும் ஆசிரியர் கையாண்டுள்ளார்.

### தொகுப்புரை

பண்பு என்ற சொல் ‘ஒழுகுதல்’ ‘பண்படுதல்’ என்று பொருள் குறிப்பதை அறிகிறோம். மனிதனின் பழக்க வழக்கங்கள் நாளடைவில் பண்பாடாய் உருப்பெறுகின்றன. இத்தகு பண்பாடு பொருள் சாராப் பண்பாடு, பொருள் சார்ந்த பண்பாடு என இருவகையாக உள்ளதையும் காண முடிகின்றது.

பண்பாடு ஒரு சமூகத்தின் நிலவியல் அமைப்போடு தொடர்புடையதாகவும், சமுகத்தினைப் பற்றிய மதிப்பீட்டை நன்கு தெரிந்துக் கொள்ளவும் துணை புரிகின்றது. பண்பாடு, வரலாறுகளை உறுதி செய்கின்றது. இத்தகையப் பண்பாடுகளை இலக்கியங்களில் பயன்படுத்துவதன் மூலம் சமூக மதிப்பீட்டைப் பாதுகாக்க முடியும். இதனை அய்க்கண் நன்கு கையாண்டிருப்பதைக் காண முடிகிறது.

இயற்கை வழிபாடுகள், இறை வழிபாடுகள் என இருவேறு வழிபாட்டு முறைகள் தமிழகத்தில் நிலவி வருகின்றன.

அய்க்கண் புதினங்களில் மக்கள் குழந்தைப் பிறப்பு முதல் இறப்பு வரையில் பல்வேறு விதமான பழக்க வழக்கங்களையும், நம்பிக்கைகளையும் கொண்டுள்ளமையை விளக்கியுள்ளார்.

சிற்றூர் கட்டுப்பாடு சமூகத்திற்கும், சமூகம் சார்ந்த பிற நிகழ்வுகளுக்கும் தலையாயது ஆகும். இத்தகு பழக்க வழக்கம் சிற்றூர்கள் தோறும் நடைமுறையில் உள்ளது.

மூட நம்பிக்கைகளால் உயர்ந்த பண்பாடு உடைய சமூகம் கீழ்நிலைக்கும் தள்ளப்பட்டிருக்கிறது என்பது அறியலாகிறது.

சிற்றூர் மக்கள் இயற்கை நெறி சார்ந்த அதனோடு பின்னிப் பிணைந்த வாழ்வை மேற்கொள்கின்றனர். ஆதலால் சுயச்சார்புடன் பல மருத்துவக்கலைகளைக் கற்று தேர்ந்துள்ளதைக் காண முடிகிறது.

விளையாட்டுகளைச் சமூக மரபுகளாகவும் பண்பாடாகவும் போற்றி மக்கள் வளர்க்கின்றனர் என்பதைக் காணமுடிகிறது.

## சான்றெண் விளக்கம்


1. கலித்தொகை பா.133.

2. தமிழ்ப் பண்பாட்டு வரலாறு, பாகம்–1. ப.1

3. தமிழர் பழக்கவழக்கங்களும், நம்பிக்கைகளும், ப.9.

4. கலைக் களஞ்சியம், தொகுதி–7. பக், 29–30.

5. சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள், ப.54

6. தமிழக வரலாறும் பண்பாடும், ப.1

7. எட்வர்டு பான்ட்டைலர, ப.1.

8. அய்க்கண், தீர்க்க சுமங்கலி, ப. 234.

9. தமிழவன், நாட்டுப்புற நம்பிக்கைகள், ப.6.

10. கழகத் தமிழகராதி, ப.822.

11. செந்தமிழ்த்தொகுதி–51, சிலப்பதிகாரமும் இயற்கைக்கும் அப்பாற்பட்ட நிகழ்ச்சிகளும், ப.257.

12. அய்க்கண், அவனுக்காக மழை பெய்கிறது, ப.63.

13. க.பா.அறவாணன், மரபு வழிபாடு திராவிட ஆப்பிரிக்க ஒப்பீடு, ப.11.

14. அய்க்கண், அவனுக்காக மழை பெய்கிறது, ப.63.

15. அய்க்கண், அவனுக்காக மழை பெய்கிறது, ப.109.

16. அய்க்கண், தீர்க்க சுமங்கலி, ப.26.

17. அய்க்கண், உயிர், ப.32.

18. வி.சரஸ்வதி, நாட்டுபுறப்பாடல் சமூக ஒப்பாய்வு, ப.152.

19. அய்க்கண், மண்ணின் மலர்கள், ப.27.

20. அய்க்கண், மறுபக்கம், ப.9.

21. அய்க்கண், தீர்க்க சுமங்கலி, ப.31.

22. Promila Kapur, Love Marriage and Sex, p.82.

23. எஸ்.ஜே.பாஸ்கல், கில்பர்ட், சமுதாய அடிப்படைக் கோட்பாடுகள், ப.281.

24. அய்க்கண், வெள்ளை தாமரை, ப.960.

25. அய்க்கண், அவனுக்காக மழை பெய்கிறது, ப.194.

26. அய்க்கண், தீர்க்க சுமங்கலி, ப.58.

27. அய்க்கண், தீர்க்க சுமங்கலி, ப.228.

28. அய்க்கண், கரையை தேடும் அலைகள், ப.38.

29. அய்க்கண், தீர்க்க சுமங்கலி, ப.146.

30. அய்க்கண், வெள்ளைத் தாமரை, பக். 10–14.

31. அய்க்கண், தீர்க்க சுமங்கலி, ப.130.

32. அய்க்கண், வெள்ளைத் தாமரை, பக். 9–10.

33. அய்க்கண், வயல், ப.55.

34. அய்க்கண், வயல், ப.55.

35. அய்க்கண், வயல், ப.58.

36. அய்க்கண், அவனுக்காக மழை பெய்கிறது, ப.39.

37. அய்க்கண், அவனுக்காக மழை பெய்கிறது, ப.27.

38. அய்க்கண், அவனுக்காக மழை பெய்கிறது, ப.27.

39. அய்க்கண், அவனுக்காக மழை பெய்கிறது, ப.28.

40. அய்க்கண், அவனுக்காக மழை பெய்கிறது, ப.66.

41. சு.சக்திவேல், நாட்டுபுறவியல் ஆய்வு, ப.152.

42. அய்க்கண், தீர்க்க சுமங்கலி, பக். 48–49.

43. அய்க்கண், தீர்க்க சுமங்கலி, ப.248, ப.39.

44. அய்க்கண், மறுபக்கம், பக். 12–13.

45. அய்க்கண், வெள்ளைத் தாமரை, ப.19.

46. அய்க்கண், வயல், ப.68.

47. அய்க்கண், கரையை தேடும் அலைகள், ப.111.

48. அய்க்கண், அவனுக்காக மழை பெய்கிறது, ப.74.

49. கலித்தொகை, பா.129.

50. சங்க இலக்கியம், கருத்தியல் வளம், ப.45.

50. அய்க்கண், கரையை தேடும் அலைகள், ப.87.

51. அய்க்கண், தீர்க்க சுமங்கலி, ப.125.

52. அய்க்கண், அவனுக்காக மழை பெய்கிறது, ப.82.

53. அய்க்கண், அவனுக்காக மழை பெய்கிறது, ப.85.

54. அய்க்கண், தீர்க்க சுமங்கலி, ப.28.

55. அய்க்கண், தீர்க்க சுமங்கலி, ப.35.

56. அய்க்கண், தீர்க்க சுமங்கலி, ப.35.

60. அய்க்கண், தீர்க்க சுமங்கலி, ப.35.

61. அய்க்கண், இரண்டாவது ஆகஸ்ட் 15, ப.23.

62. அய்க்கண், அவனுக்காக மழை பெய்கிறது, ப.70.

63. அய்க்கண், தீர்க்க சுமங்கலி, ப.7.

64. அய்க்கண், தீர்க்க சுமங்கலி, ப.30.

65. அய்க்கண், அவனுக்காக மழை பெய்கிறது ப.122.

66. அய்க்கண், அவனுக்காக மழை பெய்கிறது பக். 71-72.

இயல் – 6

# புதினங்களில் புலப்பாட்டு உத்திகள்

## முன்னுரை

ஓர் இலக்கியத்தின்அடிப்படைக் கூறுகள், உணர்ச்சி, கரு, பாத்திரம், வடிவம் என்பனவாகும். இந்நான்கினையும் இயைபுடன் புலப்படுத்திப் படிப்பவர்களை ஈர்ப்பதற்குத் துணை செய்வன உத்திகளாகும். அவை மொழி நடை, உவமை, உருவகம், கற்பனை, பழமொழி, விடுகதை, சொலவடை, கொண்டு கூட்டுதல் என பலவகைப்படும். அய்க்கண் அவர்கள் தம் படைப்புகளில் கரு மற்றும் பாத்திரப் புலப்பாட்டிற்குக் கையாண்டிருக்கும் உத்திகள் பற்றிக்காண்பது இவ்வியலாகும்.

மனித குல சமூகத்தின் வளர்ச்சியானது பல்வேறு தேடலுடன் தொடங்கியுள்ளது. அத்தேடலில் மொழி தனித்தன்மை பெற்றதாய் விளங்குகிறது. மொழியே சமூகம் உருவாகுவதற்குரிய வித்தாகும். அம்மொழி இலக்கியம், கலை, பண்பாட்டு நிகழ்வுகளையும் வாழ்வின் அனைத்துக் கூறுகளையும் பிறருக்கு எடுத்துக்காட்டி, விளக்கிக் கூறும் காலப்பெட்டகமாய் அமைந்துள்ளது.

கருத்துப் பரிமாற்றக் கருவியே மொழி என்றும், சமூகத்தின் தோற்றமே மொழி என்றும் பல அறிஞர்கள் பல்வேறு கருத்துக்களை வெளிப்படுத்தியுள்ளனர். தமிழிலக்கிய வரலாற்றில் மொழியின் தன்மையை மொழிநடைப் போக்கினூடாக அறிய இயலும். சங்க இலக்கியங்கள் தொடங்கி இக்கால இலக்கியங்கள் வரையிலும் மொழிநடையானது மனிதர்களின் தேவைக்கேற்பப் புதிய நடையில் மாறிக்கொண்டே வந்துள்ளது. புதிய மொழிநடைப் போக்கு, புதியதொரு உலகத்தை வெளிக்காட்டுகிறது.

## புதினங்களில் புலப்பாட்டு உத்திகள்

தொடக்கக் காலத்தில் பாட்டி சொன்ன கதை, விக்கிரமாதித்தன் கதை என்ற வகையில் கதைகள் தோன்றின. அதன் பின்னர் அரசர்களின் வாழ்வை

மையமிட்ட கதைகள் எழுந்தன. அரச குடும்பக் கதைகளை மட்டும் மக்கள் விரும்பி படித்ததால், அக்கதைகளே மிகுதியாயின. அரச வாழ்வையும், சமுதாயத்தையும் இணைத்துக் காட்டும் பின்னணி மக்களை மிகுதியாகக் கவர்ந்தது. அய்க்கண் இவ்வகையான புதினங்களையே மிகவும் படைத்துள்ளார்.

படைப்பாளன் தான் கூற விரும்பும், கருத்துக்களை மக்கள் மனத்தில் பதிய வைக்க எண்ணுகிறான். அதற்காகச் சொல்லும் முறையில் சில உத்திகளைக் கையாளுகிறான். "இலக்கியத்தில் உத்தி என்பது கூற விரும்பும் பொருளை நேரடியாகக் கூறாது அதனை விளக்குவதற்குப்பொருத்தமான அல்லது இணையான மற்றொரு பொருள் மூலம் பெற வைத்தல்"[1] என வரும் பகுதியின் மூலம் படைப்பாளன் தான் கூறக்கருதிய பொருளை வெளிப்படுத்தப் பயன்படுத்தும் நுணுக்கமே உத்தி என்பதை உணர முடிகிறது.

## உத்தி நிலைகள்

இலக்கியத்தில் பயின்று வரும் உத்திகளில் பொருட்கூறு மட்டுமல்லாது ஏதேனும் ஒரு நோக்கமும் அமைந்திருக்கும். "படைப்பாளன் ஏதேனும் ஒரு நோக்கம் குறித்து ஒரு சொல், தொடர், பொருண்மை, கருத்து, பொருள், உணர்வு, பாத்திரம், செயல், நிகழ்ச்சி, இடம், காலம், கனவு, கடிதம், வருணனை, விளக்கம், ஆடல், பாடல், காட்சி, நிறம் என ஏதாவது ஒன்றினைக் கையாளும்போது அதில் உத்தி காணப்படுகிறது"[2] என்கிறார் ச.வே.சுப்ரமணியன்.

முதன்மைப் பாத்திரங்களைத் தாம் விரும்பியவாறு படைத்தளித்த ஆசிரியர் பலவகை உத்திகளை மேற்கொள்கின்றார். முதன்மை பாத்திரங்கள், துணைப் பாத்திரங்கள் என்னும் இருவகை பாத்திரப் படைப்பிலும் இவ்வுத்திகள் கலந்தே வருவதால் இருபாலரையும்

உள்ளடக்கும் முதன்மைப் பாத்திரங்களின் படைப்பிற்கே ஆசிரியர் மேற்கொள்ளும் உத்திகள் பொதுவான நிலையில் சுட்டப்பெறுகின்றன.

## உத்தியின் வகைகள்

படைப்பாளன் ஒரு சமுதாயத்தின் நிலையை அதே சமுதாயத்திலுள்ள ஒருவனுக்குக் கூடி விரும்புகின்ற போது, எளிமையாகக் கூறலாம். ஒரு நுணுக்கத்தோடு கூற வேண்டும். இதனைப் பயன்பாட்டு உத்தி என்கிறோம்."உத்திகள் பல வகைப்படுகின்றன. இவை அந்தாதி, வருக்க மாலை, அடி முதல் முடி வரை வருணித்தல், மதிகம, சதகம், உலா, தூது, ஆற்றுப்படை என்பன போன்ற இலக்கிய வகைகள் தோன்றுவதற்கு காரணமாக அமைந்துள்ளன"[3] என்ற மா.இராமலிங்கம் கூறியுள்ளார்.

எல்லா இலக்கியங்களும் பொதுவானவை என்றும், குறிப்பிட்ட இலக்கியங்களுக்கு மட்டும் உரியவை என்றும் உத்திகளை அவர் பகுத்துக் காட்டியுள்ளார்.

ஒலி உத்தி, சொல் உத்தி, பொருள் உத்தி, தொடர் உத்தி, வெளியீடு உத்தி, அணி உத்தி, வடிவ உத்தி, கடித உத்தி, அமைப்பு உத்தி, நடை உத்தி, நோக்கு நிலை உத்தி எனப் பலவகைகளாக உத்தி அமைகின்றது.

புதின இலக்கியத்தில் நோக்குநிலை உத்தி, பின்னோக்கு உத்தி, முன்னோக்கு உத்தி, உச்சத்தைத் தொடரும் அழுத்த நீக்க உத்தி, கூற்று உத்தி, வெளியீட்டு உத்தி, கடித உத்தி, தொகையுரை காட்சி, நினைவுக்காட்சி, காலவுணர்வு உத்தி போன்ற உத்திகள் இடம் பெறுகின்றன.

## நோக்கு நிலை உத்தி

பாத்திரமோ, ஆசிரியனோ கதையை நடத்திச் செல்லும்போது வாசகன் சோர்வடையாதவாறும், கருத்துக்களை எளிதில் புரிந்து கொள்ளும் வகையிலும் கதைப்போக்கு அமைய வேண்டும். இதையே கதை சொல்லும் காலம் என்று அறிஞர் குறிப்பிடுகின்றார்.

"1. கதைத் தலைவன் அல்லது தலைவி தங்கள் வாழ்க்கையில் கூறுவது போல அமைந்த புதினம்

2. கதைத் தலைவனும், தலைவியும் மாறிமாறிக் கூறுவது போல் அமைந்த புதினம்

3. கதை மாந்தர் பலரும் மாறி மாறிக்கூறுவது போல் அமைந்த புதினம்

4. ஆசிரியரே படர்கையிடத்தில் நின்று கதையைச் சொல்வது போல் அமைந்தவை"[4] என நான்கு நிலையில் புதினம் அமையும். பாத்திரங்களைப் பேச வைத்து கதையை நகர்த்திச் செல்லும் நோக்குநிலை உத்தியை அய்க்கண் தனது நாவலில் மிகுதியும் பயன்படுத்தியுள்ளார்.

## நடை விளக்கம்

மனிதனை இனம் காட்டுவது அவனது தனித்த நடை என்பர்.

> "நடைஇயல் என்பதை ஆங்கிலத்தில் Stylistics என வழங்குகின்றனர். Stilus என்ற இலத்தீன் சொல்லிலிருந்து Style என்ற ஆங்கிலச் சொல் உருவாயிற்று"[5]

என்று நடை Style என்ற சொல் உருவான விதத்தைக் கூறுவர். மொழிநடையானது செய்தியினை இலக்கியத்தினில் கூறும் முறையாகக் கொள்வர். ஒரே செய்தியைக் கற்றவர்களுக்கு ஒரு வகையிலும், கல்லாதவருக்கு மறு வகையிலுமாக எழுதி அமைக்கும் முறை என்றும் விளக்குவர் மொழிநடைப் பற்றி,

> "இலக்கியத்தின் உயிர் நாடியாக இருப்பது மொழிநடையே. கருத்துக்களைக் கூறும் போதுதான் நடை சிறக்கும் என்பதை உரிய சொற்கள் உரிய இடங்களில் பொருத்தி நடப்பதே நடை"[6]

என்று நடையின் சிறப்பைச் சுந்தரமூர்த்தி சுட்டுகிறார்.

நடையைப் பற்றி பல்வேறு அறிஞர்கள் பல்வேறு விளக்கங்களைத் தருகின்றனர் கருத்து விளக்கத்தின் கருவியே நடையாகும். படைப்பாளன் எதை உணர்த்த வேண்டுமென்று நினைக்கிறானோ அது படிப்பவரின் மனத்தில் ஆழமாகப் பதிவதற்கு உதவுவது நடை. கருத்தின் கட்டையெனப் போப்பும், மேனியின் தோல் நடையெனக் கார்லைலும் குறிப்பிடுகின்றனர். மு.வ. அவர்கள் 'கருத்துப் பரிமாற்றக் கருவியே' என்று கூறுவது நோக்கத்தக்கதாகும்.

நடை குறித்து அனைவராலும் ஒப்புக்கொள்ளக் கூடிய விளக்கம் கிடைக்கவில்லை. "ஒரு புதினத்தின் வெற்றிக்கு அடிப்படையிலான இயல்புகளில் ஒன்று நடைச்சிறப்பு. புதினத்தின் கதைப் பின்னல் சிறப்பாக அமைந்து நிகழ்ச்சிகள் எதிர்பார்ப்பு நடத்துவதாக அமைந்திருந்தாலும் அதை எடுத்தவர் முடிக்கும் வரை தொடர்ந்து படிக்கச் செய்வது ஆசிரியர் நடை சொற்கள் இணைந்து, சுவை மிகுந்த வருணனையை உரையாடல்களாக, நிகழ்ச்சி விளக்கங்களாக உணர்ச்சி ஓவியங்களாக வெளிப்பட்டுப் படிப்போரைப் புதினத்தில் ஈடுபடுத்துவது நடையே"[7]

கரு, உரு ஆகியவற்றிற்கிடையே காணப்படும் உறவு எத்தகைய உத்திகளால் பின்னப்படுகிறதோ அவ்வுத்திகளின் ஒட்டு மொத்தத்தை நடைக் கூறுகளாக ஏற்றுக்கொள்ளலாம். தெரிவுகள், அனுபவங்களின் பாதிப்புகள், மொழியின் கட்டமைப்பு ஆகியவைப் படைப்பாளிகளுக்கிடையே வேறுபாட்டிற்குக் காரணமாகின்றன. அவ்வேறுபாடு மூலமாகவே ஒரு படைப்பாளியை இனம் கண்டு கொள்ள முடிகிறது. ஒருவருடைய படைப்பாற்றலை அவன் நடையின் மூலமும் அளவிட முடியும்.

> "தலைசிறந்த ஓர் இலக்கியத்தின் பகுதிகளைப் படித்தவுடன் அவற்றின் நடையைக் கொண்டே அவ்விலக்கிய ஆசிரியர் யார் என்பதை உணர்ந்து கொள்கிறோம். இளங்கோவடிகள், கம்பர், திருத்தக்கத் தேவர் ஆகியோர் தம் காப்பியப் பாடல்களின் நடைவெவ்வேறாக ஒவ்வோர் இலக்கிய ஆசிரியன் நடையும் அவரவர் தன்மைக்கேற்ப அமைகிறது"[8]

என்ற கருத்து நோக்கத்தக்கதாகும்.

> "நல்ல நடை என்பது படிப்பவரைக் கடைசி வரை சலிப்பூட்டாமல் தன்னோடு இழுத்து செல்ல வேண்டும். இந்த ஈர்ப்பு சக்தி, நடையில் காணப்படவில்லை என்றால் அது நல்ல நடையென்றே சொல்வதற்கில்லை. தொடர்பில்லாத வாக்கிய அமைப்புகள், மிகையான போக்கு, வாசகரைக் கவர வேண்டும் என்பதற்காகப் பிரயோகப்படுத்தப்படும் சப்த ஜாலங்கள் இவை அனைத்துமே படிப்போருக்குத் தளர்ச்சியை உண்டாக்கும். இவ்வகைக் குற்றங்கள் ஏதுமின்றி இயல்பானதாகவும் கருத்துக்கள் கருக்கொண்டதாகவும், எளிமை, இனிமை, முதலிய பண்புகளோடு இயல்வதே சிறந்த நடை. 'நடை' ஒரு வலை போன்றது"[9]

என்று மா.இராமலிங்கம் 'நாவல் நடையியல்' எனும் நூலில் குறிப்பிடுகிறார்.

> "நடை என்பது பலராலும் ஒத்துக்கொள்ளக்கூடிய விளக்கம் கிடைக்கவில்லை எனினும் கரு, உரு ஆகியவற்றிற்கு இடையே காணும் உறவு எத்தகைய உத்தி முறைகளில் பின்பற்றப்படுகிறதோ அவ்வுத்திகளின் ஒட்டு மொத்தத்தை நடைக் கூறுகளாக ஏற்றுக்கொள்ளலாம்"[10]

என்றும் கூறுவர்.

பல்வேறு அறிஞர்களும், திறனாய்வாளர்களும் பல கருத்துக்களைத் தந்திருக்கின்றனர். படைப்பாளர்கள் வாசகர்களை எளிதில் படிக்கச் செய்யவும், முழுமையாகப் புரிந்து கொள்ளவும் இலக்கிய மொழிநடையே பயன்படுகின்றன. அக்கால நடையே அன்றைய காலக்கட்டத்தின் சிறந்த நடையாக அமைகின்றன.

## நடையின் இன்றியமையாமை

ஒவ்வொரு படைப்பின் சிறப்பிற்கும் நடையும் முக்கியத்துவம் வாய்ந்ததாகிறது. நடையானது படைப்பாளியின் முகம் காட்டும் கண்ணாடியாகும். நடையின் மூலம் ஆசிரியரின் மனப்பாங்கும், நடப்பியல் பாங்கும் தெளிவாகப் புலனாகின்றன. கற்பனையும், கருத்தும் கொண்ட பாரதி, பாரதிதாசன் போன்றோரின் இலக்கிய நடை மக்களிடையே மிகுந்த ஈர்ப்பை உண்டாக்கும் எனக் கருதலாம்.

> "இலக்கிய வடிவம் இயற்கையாகவோ தன்னியல்பாகவோ அமைவதன்று என்பதை உணர வேண்டும். இலக்கியம் ஒரு கலை, அதன் வடிவம் உன்னிப்பாகவும், சிந்தித்தும் அமைக்கப்படுவதாகும். சிறந்த கவிஞன் பறவை பாடுவது போலத் தன் உள்ளக்கருத்தைக் கொட்டுவதில்லை. அவனுடைய இலக்கியப்படைப்பு அவன் தன் அனுபவத்தின் உண்மை விளக்கமாகும். எனவே அவன் தன் அனுபவத்தின் கருத்தையும், உணர்ச்சிகளையும் உணர்த்த முயல்கிறான். ஆகவே தான் உரைப்பதைப் பற்றி சிந்திப்பதோடு அதற்காக அமைக்கும் சொற்றொடர் படிப்பவர்கள் உள்ளத்தைக் கவருமா என்பதையும் அவன் சிந்திக்க வேண்டும்"[11]

என்று தா.ஏ.ஞானமூர்த்தி அவர்கள் நடையைப்பற்றியும், அதன் இன்றியமையாமையையும் விளக்குவதைக் காணலாம்.

> "ஒரு படைப்பாளியின் மொழிநடையை ஆராய்வதன் மூலம் அவரது எழுத்தின் தனித்தன்மையை இனங்கண்டு கொள்ள முடியும்"[12]

என்று நீதிவாணன் மொழிநடையின் இன்றியமையாமையைப் பற்றிக்கூறுவார்.

## நடையியலும் கருத்தியலும்

சொல்லும், பொருளும் கலந்த கலவையே இலக்கியம். இத்தகு இலக்கியத்துள் கருத்திற்கு எவ்வளவு முக்கியத்தும் தரப்படுகிறதோ அவ்வளவு முக்கியத்துவம் நடைக்கும் தர வேண்டும். அப்போது தான் இலக்கியம் முழுமையடையும்.

> "சிறந்த கருத்தின்றியே நடையினை ஆற்றலோடு அமைக்கும் திறம் ஒரு சிலருக்கு உண்டு. எனினும் உயர்ந்த கருத்தின்றி நடை மட்டும் ஆற்றல் மிக்கதாய் இருக்குமாயின் அவ்விலக்கியத்தை உயர்தரமென மதிக்க இயலாது. பொதுவாக ஒருவருக்கு ஆழ்ந்து சிந்திக்கும் ஆற்றலும், பிழை இல்லாமல் சிந்திக்கும் வன்மையும் இன்றிக் கருத்தை சிறந்த நடையில் வெளியிட முடியாது. எனவே நடையின் சிறப்பு இவ்வகையில் பொருளின் சிறப்பை ஒட்டியதாகும்"[13]

என்ற கூற்று இலக்கியத்திற்கு முக்கியமானது. அதனை மொழிநடையே மக்களுக்குத் தருகின்றது.

> "நடைச் சிறப்பில்லாத இலக்கியப் படைப்பு எதனையும் மக்கள் போற்றமாட்டார்கள். சிறப்பான நடைச் சிறப்பில்லாத நாவல் வாசகமும், வண்ணமும் அற்ற காகித மலராகத் தான் திகழும். ஒரு நாவலின் சில பக்கங்களைப் படித்து இது இவர் எழுதியது என்று எளிதில் ஆசிரியர் பெயரைப் பிழையில்லாமல்

ஒருவரைச் சொல்லச் செய்வது நடையே"[14]

என்று குறிப்பிடும் கருத்து நோக்கத்தக்கதாகும்.

## புதின நடையின் நோக்கம்

மனத்திலுள்ள கருத்தினை எழுத்தாய் செலுத்திக் கற்றவர்க்குச் செய்திகளை வெளிப்படுத்துவதே நடையின் நோக்கமாகும். சுருங்கக் கூறி உரைக்கும் செவ்வி அல்லது முறையே மொழிநடை எனக் கூறலாம். சாதாரண மக்களும் எளிமையாகப் படிக்கும் வண்ணம் நடையைப் பெற்றிருப்பதே சிறந்த இலக்கியமாகும்.

## நடையின் போக்கு

இலக்கிய நடையின் போக்கானது பண்டைக் காலம் தொட்டு இன்று வரை மாற்றம் பெற்று வந்துள்ளது. பண்டைய இலக்கியங்கள் முழுவதும் இலக்கண வரையறைக்கு உட்பட்டதாகவே அமைந்திருந்தன. பின்னர் இக்கால இலக்கியங்களில் மாறுபடத் தொடங்கியது.

நவீன விஞ்ஞான வளர்ச்சிக்கொண்ட 18ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் சூழலமைவுக்கு ஏற்ப உரைநடை, கவிதை, நாடகம், புதினம், சிறுகதை எனப்பல்வேறு இலக்கிய வடிவங்களும் மக்களோடு மக்களாக வழக்குச் சொல்லோடும், புதிய வடிவங்களிலும் தான்றின மொழிநடைப் போக்கும் மாறுபட்டிருக்கின்றது.

மொழிநடை ஆய்வானது சமுதாயம், மொழி, கருத்து, வளர்ச்சி போன்றவற்றின் அடிப்படையில் அமைகின்றது. ஆசிரியரின் சமுதாயம், மொழி, பண்பாடு, சூழலமைவு, வட்டார வழக்கு, வடமொழி, ஆங்கில மொழித்தாக்கம், பத்தி நடை, உரையாடல் முதலிய கூறுகளின் பின்னணியில் இலக்கியங்கள் அமைகின்றன.

## நடையின் ஆற்றல்

ஒவ்வொரு இலக்கிய வடிவத்திற்கும் ஏற்ப நடை அமைகின்றது. நாடகம், புதினம், சிறுகதை, கவிதை ஆகிய இலக்கிய வடிவங்களும், முறைகளும் மாறுபட்ட ஆற்றல் கொண்டவையாகும்.

நாடகம் முழுமையும் கேள்வி கேட்டல், பதில் கூறல் என்ற கூற்று அடிப்படையில் அமையும். புதினம் இயற்கை, சமூகம் என அனைத்துச் சூழலையும் வெளிப்படுத்தும் பாங்கில் இருக்கும். சிறுகதை குறுகிய கதை வடிவம் பெற்றால் வருணனைகள் குறைந்து காணப்படும். இலக்கிய வடிவங்கள் பல்வேறு ஆற்றலுடன் அமையும். பொதுவாக எளிமை, இனிமை, நயம் என மூவகைப் பண்புகளைக் கொண்டு விளங்கும்.

## நடையின் வகைகள்

ஒருவரின் மொழிநடையைப் போன்று இன்னொருவரின் மொழிநடை அமைவதில்லை. அவரவர் அறிவு, ஆற்றல் முதலியவற்றிற்கு ஏற்ப அவர் எழுதும் நடையமைப்பு அமையும். ஓர் ஆசிரியர் தனது படைப்பில் அமைக்கின்ற தொடர்கள் அடிப்படையில் அவரது மொழிநடையைச் சில வகைகளாகப் பகுக்கலாம். அவை,

கட்டுமை நடை, விளக்க நடை, விவரிப்பு நடை கவிதை என்பனவாகும்.

இவ்வகைப் பாகுபாடுகளைத் தவிர தற்கால இலக்கியங்களில் வேறு சில மொழிநடை உத்திகளையும் காண முடிகிறது. அவையாவன,

1. பேச்சு வழக்கு
2. வட்டார வழக்கு
3. பிறமொழிச் சொற்கள்
4. கிளைக் கதைகள்
5. முன்னோர் கருத்தைப் போற்றல்

6. வருணனை

7. உவமை

8. உருவகம்

9. பழமொழி

10. இலக்கிய மேற்கோள் காட்டல்

11. புராணச் செய்திகள்

12. நாட்டுப்புறப் பாடல்கள்

13. தத்துவச் செய்திகள்

14. வரலாற்றுச் செய்திகள்

ஆகியவை குறிப்பிடத்தக்கதாகும். இத்தகைய மொழிநடை உத்திகள் புதினத்தைப் படிப்பவரின் உள்ளத்தில் சுவையை ஊட்டுவதோடு ஆசிரியரின் கருத்தைப் புரிந்து கொள்ளவும் பயன்படுகின்றன.

## அய்க்கண்ணின் மொழிநடை

அய்க்கண் தமது சமுதாயப் புதினங்களில் மொழிநடை, உத்திகள் பலவற்றைப் பயன்படுத்தித் தமது படைப்புகளுக்குத் தனித்திறனைத் தந்துள்ளார். அவரது மொழிநடை, உத்திகள் கலைக்கூறுகளாய் அமைந்து அவரது கருத்திற்கு எளிமைத் தன்மையையும், அவரது படைப்பிற்கு முருகியல் தன்மையையும் தந்துள்ளன எனலாம். எளிய சொற்களைப் பயன்படுத்திச் சாதாரண மக்களும் புரிந்து கொள்ளும்படி எழுதி வருபவர் அய்க்கண், அவரது எழுத்துக்கள் படிப்பவரின் உள்ளத்தில் பதிந்து உணர்வுகளைத் தூண்டக்கூடிய ஆற்றல் பெற்றவையாய் அமைகின்றன.

> “நாவலாசிரியர் எவ்வளவு பெரிய மேதையாக இருந்தாலும் அவர் நாவலில் உத்திகள் நுட்பமாகக் கையாளப்படவில்லை என்றால் நாவல் சிறப்படைவதில்லை”[15]

என்ற கருத்திற்கு ஒப்ப, புதினம் மட்டுமின்றி பல்வேறு இலக்கிய வகைகளிலும் தம்மை ஈடுபடுத்திக் கொண்டவர் அய்க்கண்.

> "கதைக்கு அவர் எடுக்கின்ற கருவும், அதற்குக் கொடுக்கின்ற உருவும், அதைத் தொடுகின்ற முறையும் ஆங்காங்கு சிதறி விழும் கருத்துக்களும் அவர் ஒரு புதுமை சிந்தனையாளர் என்பதைத் தெளிவாகக் காட்டும்"[16]

என்று நா.ஆறு.நாகராஜன் 'உயிர்' புதினத்தின் அணிந்துரையில் குறிப்பிடும் கருத்துக்கள் படைப்பாசிரியர் அய்க்கணின் எழுத்தாளுமைத்திறனை நன்கு உணர்த்தும். அய்க்கண்ணின் மொழிநடையைப் பின்வருமாறு குறிப்பிடலாம்.

## 1. பேச்சு நடை

"ஓர் ஆசிரியரின் நடை என்பது அவர் கையாளும் மொழியின் அமைப்பும் முறையும் ஆகும். இது அவர் அமைக்கும் சொற்களாலும், தொடரமைப்புக்களாலும் உருவாக்கப்படுவதாகும்"[17]

அய்க்கண் அவர்களின் சமுதாயப் புதினங்களில் கதைக்களம், காலம், மக்கள், சூழல் இவைகளுக்கு ஏற்பவும், பாத்திரங்களின் தன்மைக்கு ஏற்பவும் மொழிநடை அமைக்கப்பட்டுள்ளது. கதை நிகழ்வுகளுக்கு ஏற்பப் பொருத்தமான பேச்சு நடை வழக்கை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார். மேலும்,

"மொழி நடை என்பது எழுத்தாளனின் உளப்பாங்கும் உணர்ச்சியும் எப்படியோ அப்படியே அமைவது என்றும் மொழிநடையே எழுத்தாளன் என்றும் எழுத்தாளனே மொழிநடை"[18] என்பர்.

மறுபக்கம் புதினத்தில்,

> "சேது!... கடைத் தெருவுக்குப் போய் ஒரு கிலோ சீனி வாங்கி, நம்ம வீட்டிலே கொடுத்திட்டு வா.... இந்தா பணம்!..." என்று பணத்தைக் கொடுத்து அனுப்புகிறார்,

அவன் சென்ற பிறகு பேச்சைத் தொடங்குகிறார் மாணிக்கம்.

கந்தசாமி! பையனை வச்சிட்டு, இந்த மாதிரி துக்கிரின்னு சொல்லலாமா?.... அவன் ஓர் இளம் மொட்டு, அந்த மொட்டை இப்பவே கிள்ளி நசுக்கிடாதே... சேதுவின் எதிர்காலம் ரொம்ப சிறப்பாயிருக்கும்னு நான் நம்புறேன்..."[19]

என்று பேச்சு நடையை அழகாக அய்க்கண் பயன்படுத்தியுள்ளார்.

"ஏய் மணி! ஒரு சாக்லெட் வாங்கிக் கொடுப்பா!

மணியண்னே!... எனக்கு ஒரு மிட்டாய்

"ப்ளீஸ்... ஒரு சாகலைட் வாங்கித்தா எனக்கு..."

இதே பாணியில் கூட்டத்தில் கோரஸ் எழும்புகிறது.

"சரி சரி... கத்தாதீங்கடா!.... என்று அவர்களை அடக்குகிறான் மணி.

டேய் தயாநிதி! இவங்க எல்லோருக்கும், ஆளுக்கு இரண்டு சாக்லேட், மூனு பெப்பர்மின்ட் கொடுடா... இந்த அஞ்சு ரூபாய்... என்று பணத்தைக் கொடுத்து ஆணையிடுகிறான் மணி"[20]

ஒரு மாணவன் மற்றவர்களுக்குப் பணம் கொடுத்துத் திண்பண்டம் வாங்கிச் சாப்பிடச் சொன்னச் செய்தியைப் பேச்சு வழக்கு நடையில் ஆசிரியர் திறம்பட கையாண்டுள்ளதைக் காணலாம்.

தந்தை, மகளின் பேச்சு நடையை,

"முகப்புக்கு வந்தாள் வித்யா...
என்ன வித்யா! ரத்னாவுக்குக் காய்ச்சல் எப்படியிருக்கு?..." என்று பரபரப்போடு கேட்டான் அவன்.
"காய்ச்சல் அப்படியே தான் இருக்கு டாடி!.... டாக்டர் எப்போ வருவார்"

"இன்னும் கொஞ்ச நேரத்திலே வருவார், வித்யா!.. அது சரி ரத்னா மருந்து சாப்பிட்டாளா?

இல்லே, டாடி! நான் எவ்வளவோ கெஞ்சியும் சாப்பிடமாட்டேன்னு அடம் பிடிக்கிறா.... என்று ஆற்றாமை பொங்கும் குரலில் தெரிவித்தாள் வித்யா"[21]

இது போன்று நீண்ட பேச்சு நடையையும் அய்க்கண் தமது புதினங்களில் கையாண்டுள்ளார்.

"பரவாயில்லை... நீங்க வேணும்னா செஞ்சீங்க?... இல்லே... உங்க மேல தப்பில்லே... கார்னு இருந்தா, அது வேகமாத்தான் போகனனும் வீதியிலே ஆட்கள் நடந்து போறாங்களேனு, காரிலே போகிறவங்களும் மெதுவாகப் போகனும்னா அப்புறம் கார் வச்சுகிறதிலேர அர்த்தம் இல்லாமல் போயிடுமே? பரவாயில்லிங்க... நீங்க போங்க.... நீங்க இவ்வளவு தூரம் வருத்தப்பட்டு எக்ஸ்யூஸ் கேட்டுக்கிட்டதே பெரிய காரியம் என்று அவளை மன்னித்து விட்டான்"[22]

என்று நீண்ட பேச்சுநடையை ஆசிரியர் 'நெஞ்சில் ஓர் நெருஞ்சி' புதினத்தில் பயன்படுத்தியுள்ளார். இது போன்று அவரின் புதினங்களில் நீண்ட பேச்சு நடை காணப்படுகிறது.

"சரி.. சரி.. நல்லாப் பார்த்து புடைங்க... நல்ல அரிசியையும் உமினு நெனச்சித் தள்ளிடாதீங்க!" என்று சொல்லி மீண்டும் சிரித்தப்படி வாசலைக் கடந்து உள்ளே சென்றாள் கல்யாணி.

அவளைப் பார்த்ததும், 'அத்தே' என்று கூவியபடி ஓடிவந்து அவனது கால்களைக்ட கட்டிக் கொண்டான் சிறுவன்.

கருப்பணாக் கண்ணு!... நல்லாயிருக்கியா? என்று

பரிவோடு அவனை வாரித் தூக்கிக்கொண்டாள் கல்யாணி"[23]

என்று பேச்சு வழக்கு நடையை மேலும் அய்க்கண் பயன்படுத்தியுள்ளார்.

இந்திய வீரர்கள் போர் முனையில் நின்று கொண்டு

"லாகூரைப் பிடித்தால்தான், பாகிஸ்தானுக்குப் புத்தி வரும். அமைதியை விரும்புபவரெல்லாம் போருக்குப் பயந்தவர்கள் என்ற சீனாவின் தத்துவத்தை நம்பி, ஆழம் தெரியாமல் காலைவிட்ட பாகிஸ்தானுக்கு அதுதான் சரியான பாடமாயிருக்கும்'' என்றான் சரவணன்.

"பாகிஸ்தானுக்குத் தெம்பு ஊட்டத்தானே, சீனா நம் வட எல்லையில் நின்று கொண்டு கடைசி எச்சரிக்கை விட்டு பயமுறுத்தியது?–ஜமேதார் கிருஷ்ணன், டீ கோப்பையைக் கையில் வைத்துகொண்டே சிரித்தார்"[24]

ராணுவவீரர் சரவணன், ஜபேதார் கிருஷ்ணன் பேசும் பேச்சு நடையை 'மாபெரும் நாடு மாபெரும் மக்கள்' எனும் புதினத்தில் கையாண்டுள்ள விதத்தைக் காணலாம்.

'கரையைத் தேடும் அலைகள்' புதினத்தில்,

"வேடப்பன் படிப்பிலே ரொம்ப மக்காயிருப்பான்னு தோணுது

அப்படியில்லீங்க பண்ணையார் வீட்டுப் புள்ளைங்கறதனாலே, கொஞ்சம் விளையாட்டுப் புத்தி அதிகமாகயிருக்கு: படிப்பிலே கொஞ்சம் அக்கறை குறைவாயிருக்கான மத்தபடி ரொம்பக் கெட்டிக்காரன்"[25]

என்று மகனைப் பற்றி விவாதிக்கும் போக்கைக் காணலாம்.

‘நெஞ்சில் ஓர் நெருஞ்சி’யில்

"ஸார்! உங்களுக்கு ரொம்ப நன்றி.. நான் வர்றேன் ஸார்!"

மகாலிங்கம், பர்ஸிலிருந்து இருபது ரூபாய் நோட்டை எடுத்து அவனிடம் நீட்டினார்.

"இந்தா முத்து! உனக்கு சார்ஜ்..."

"என்கிட்டே சில்லறை இல்லை, சார்!"

"சில்லறை வேண்டாம்பா!.. நீயே வச்சுக்கோ..."

"இருபது ரூபாய் வேண்டாம் ஸார்! தியேட்டரிலிருந்து இந்த இடத்துக்குப் பத்து ரூபாய் தான் ஸார்!"

"பரவாயில்லேப்பா!... என் அன்பளிப்பாய் வச்சுக்கே..." என்று அழுத்திச் சொன்னார் மகாலிங்கம்"[26]

என்றும்,

விடிவெள்ளியில்,

"முனியாண்டி! இன்னிக்கு இதோ இந்தத் தம்பி, பட்டணத்திலிருந்து என்னைப் பார்க்க வந்திருந்தாங்க... இவர்கிட்டே இன்னும் பேச வேண்டியிருக்கு... நாளைக்கு மீனாட்சியும் வையைக்கரைக் கருப்பர்கோயிலுக்குப் போறா... அதனாலே நாளைக் காலையிலே நான் அங்கே வர்றேன்று சொல்லு... என்ன சரிதானே? என்று சுப்பையா அம்பலக்காரரின் பேச்சில், ரகசியத்தைவிட, கம்பீரம் இன்னும் ஓங்கி ஒலிப்பதை உணர்ந்தான் நிருபர்,

"சரிங்க, அய்யா! என்று மெல்லிய குரலில் சொல்லிவிட்டு நகர்ந்து சென்றான் முனியாண்டி"[20]

என்று தமது புதினங்களில் பேச்சு நடையைப் பயன்படுத்தி பல்வேறு வகை

உத்தி முறைகளைப் படைப்பாசிரியர் அய்க்கண் பயன்படுத்தியுள்ளார். குறிப்பாகப் பாத்திரங்களுக்கு ஏற்ப தமது நடையின் மூலம் உயிரோட்டத்தைத் தந்துள்ளார்.

## வட்டார வழக்கு

அய்க்கண்ணின் புதினங்கள் பெரும்பாலும் மண்சார் பதிவுகளாகப் பரிணமிக்கின்றன. குறிப்பாகக் காரைக்குடி வட்டார வழக்குச் சொற்களையும், சில சமூகத்தின் பேச்சு வழக்கையும் பெரும்பகுதி தமது புதினங்களில் இடம்பெற வைத்துள்ளார். 'வட்டார வழக்கு' ஒரு பகுதியின் பேச்சு மொழியாக மிகவும் இன்றியமையாத அம்சமாக அமைகிறது என்பதை உணர்ந்து கதை நிகழிடங்களுக்கு ஏற்ப பயன்படுத்தியுள்ளார்.

'அவனுக்காக மழை பெய்கிறது' புதினத்தில் எதிர்நிலைப் பாத்திரமான சங்கிலி,

> "அந்தப் பக்கம் வந்த தம்பியைப் பார்த்து,
>
> 'டேய், தேவடியாப் பயலே!... கருப்பண்ணன் கடைக்குப் போயி நாலு புட்டி கள்ளு வாங்கிட்டு வாடா...' என்று பணத்தை நீட்டினான்...
>
> 'முடியாதண்ணே!... நான் கள்ளெல்லாம் வாங்கியார மாட்டேன்' என்று மறுத்துவிட்டு நகர்ந்தான்"[28]

என்று வட்டார வழக்குப் பேச்சினைக் காணலாம். அப்புதினத்திலேயே,

> "ஒரு 'பீடி' இன்னொரு 'பீடி'யிடம் கேட்டான்
>
> 'ஏண்டா டேய்! பீடி வாங்க ஒனக்கு ஏதுடா துட்டு?'
>
> 'எங்க ஆத்தா, அப்பனுக்குத் தெரியாம புளிப்பானையிலே அஞ்சு அஞ்சு காசாய் சேர்த்து வைக்குது, அதிலே ஒண்ணு ரெண்டு காசு எடுத்தா, அதுக்குத் தெரியவா போகுது"[29]

என்று கூறுவது வட்டார மொழி வழக்கைப் பிரதிபலிப்பதாகும்.

## நம்பிக்கைகள்

நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்பட்டு அம்மக்களாலேயே பாதுகாக்கப்படுகின்றன. மனிதனின் தன்னல உணர்வு சமுதாய உணர்வுமே நம்பிக்கைகளை வளர்த்து வருகின்றன. அச்சத்தின் காரணமாகத் தோன்றிய நம்பிக்கைகள், நாட்டுப்புறத் தன்மைகள், வாழ்வியலை அறியும் பொதுக்கூறு (Common Denominator) எனப்படும்.

> "நம்பிக்கைகள் காலங்காலமாக ஒரு தலைமுறையினரிடமிருந்து மற்றொரு தலைமுறை-யினருக்கு பரவி வருகின்றன. மனிதன் பிறப்பு முதல் இறப்பு வரை பலவித நம்பிக்கைகளைக் கொண்டிருக்கக் காண்கிறோம். நம்பிக்கைகளை மனித வாழ்வினை இயக்குகின்றன என்று கூறுமளவிற்கு அவன் வாழ்வில் பெரும் பங்கு வகிப்பதையும் காண்கிறோம்"[30]

மூட நம்பிக்கையை மறுத்து, 'தீர்க்க சுமங்கலி' புதினத்தில்,

> "துக்கிரியாவது புடலங்காயாவது...? அதெல்லாம் மூட நம்பிக்கை, ஒவ்வொருத்தன் சாகிறதுக்கும், குழந்தையா காரணமாயிருக்கும்?... போங்கடா வெங்காயம்"[31]

என்று வட்டார வழக்குப் பேச்சு நடையை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

சிவகங்கை, புதுக்கோட்டை மாவட்டங்களில் வாழும் மக்களின் சமூகப் பழக்க வழக்கங்களையும் ஆழமான மொழிநடையையும் ஆசிரியர் வெளிப்படுத்தியுள்ளார். இதனை அவரே தமது புதினம் ஒன்றில்,

> "சிவகங்கை, புதுக்கோட்டை மாவட்டங்களில் வாழும் ஒரு சமுதாயத்தினரைப் பற்றிய வட்டார நாவலாக இது தோன்றினாலும், வழக்கமான 'வட்டார நாவலாக' வாசகர்களை விட்டு விலகி நிற்காது பேச்சு மொழியையும், நிகழ்வுகளையும் எல்லா

வட்டாரத்தினரும் புரிந்து கொள்ளும் வகையில் மெனக்கட்டு அமைத்திருக்கிறேன்"[32]

என்று குறிப்பிட்டுள்ளார்.

விடிவெள்ளியில்,

"ஏய் சீக்கிரம் எறங்கித் தொலைங்க... ஏர்ற போது எம்புட்டு வேகமாய் ஏர்றீங்க?.... எறங்குற போது மட்டும் மசமசனு நகர்றீர்களே?"[33]

என்று பேருந்து நடத்துனர் பேசும் வட்டார வழக்கு நிலையையும்,

ஆண்பிள்ளை பிறக்க வேண்டும் என்று பேசும் மக்களின் பேச்சு நடையை,

> "ஊருக்கெல்லாம் உதவுகிற மகராசியோட வயித்திலே ஒரு புழு பூச்சி வைக்கலியே ஆண்டவன்?.... ஆத்தா வயிறு திறக்கிறதுக்கு ஆண்டவன் எப்போ கண் திறக்கப்போறானோ என்று அங்கலாய்ப்பார்கள்.
>
> ஏத்தா, நம்ம நல்லூர் அரியநாயகியம்மனுக்குப் பால் காவடி எடுக்கிறேன்னு நேர்ந்துக்கோ, அடுத்த வருஷமே தங்க மகன் உன் வயித்திலே வந்து பொறப்பான்
>
> கண்ணனூர் வையக்கருப்பருக்குக் கரும்புத்தொட்டி கட்டுறேன்னு பிரார்த்தனை செஞ்சுக்கோ தாயி!... ராசா வாட்டம் ஆம்பிள்ளைப்புள்ளை பொறக்கும் தாயி"[34]

என்று வட்டார வழக்கு மொழிநடையைத் தேவையான இடங்களில் தமது புதினங்களில் பயன்படுத்தியுள்ளார்.

## பிறமொழிச் சொற்கள்

தமிழகத்தில் நிகழ்ந்த பிற ஆட்சியாளர்களின் தாக்கத்தால் அவ்வக்கால அரசியல் சூழல்களில் பல்வேறு மொழிகள் தமிழரிடையே பதிவுகளை ஏற்படுத்தியுள்ளன. இவ்வாறு படைப்பாளர்கள் தங்கள் புதினங்களில் பிறமொழிச் சொற்கள் கலந்து வருவது தவிர்க்க

இயலாததாகிறது. கதைக் கருவிற்கும், கதைப் பின்னணிக்கும், குறிப்பாகப் பாத்திரங்களின் தகுதிக்கு ஏற்பப் பேச்சு நடையில் பிறமொழி சொற்கள் கலந்து அமைகின்றன. இதனை அய்க்கண் அவர்கள் தேவையான இடங்களில் கையாண்டுள்ளார்.

"பிற மொழியிலிருந்து வந்த வழக்குவன அனைத்தும்
திசைச் சொற்களே"[35]

என்று திறனாய்வாளர்கள் கூறுவர். அய்க்கண் ஆங்கிலம், வடமொழி கலந்த சொற்களைத் தமது எழுத்தின் மூலம் வெளிப்படுத்தி, எதார்த்த ஓட்டத்தைப் புதினங்களுக்கு வழங்கியிருக்கிறார்.

## ஆங்கில மொழிநடை

கற்றவர்பாத்திரங்களுக்கேற்ப ஆங்கிலச் சொற்களையும், தமிழ்ச் சொற்களையும் கலந்து பேசும் பேச்சினை உரையாடலாக அமைத்துள்ளார். தற்செயலாக வந்த இரு கல்லூரி பெண்களின் மீது எச்சில் பேப்பர்கள் விழுந்து விடுகின்றன. உடனே அவர்கள்,

"யூ ஸ்டுப்பிட்!... ஃபூல்ஸ்!... இடியட்ஸ்!.. கண்
தெரியலையா உங்களுக்கு?.... கன்ட்ரி ப்ரூட்ஸ்!..."

மணி அண்ட கம்பெனிக் காக்கைகள் திடுக்கிட்டுப்
போய் நடுங்கிறார்கள்.

"எக்ஸ்யூஸ் மீ... ப்ளீஸ்... தெரியாம வீசிட்டோம்...
மன்னிச்சுக்குங்க.... ப்ளீஸ்... மன்னிச்சுகுங்க..."[36]

என்று ஆங்கிலமும், தமிழும் கலந்து பேசும் பேச்சு வழக்கைப் பாத்திரங்களுக்கு ஏற்ப 'அய்க்கண்' பயன்படுத்தியுள்ளார்.

"எக்ஸ்யூஸ் மி, மிஸ்!... நான் கிளாசுக்குப் போறேன்..."[37]

என்றும்,

"ஜாக் ஆஃப் ஆல் ட்ரேட்ஸ்... ஏன்டா நிறுத்திட்டே?–ஜாக்
ஆப் ட்ரேட்ஸ்... பட மாஸ்டர் ஆஃப் நத்திங் என்று சேர்த்தே

சொல்லிடு' என்று சிரிக்கிறான் தயாநிதி"[38]

என்றும்,

"எக்ஸாமினேஷன் பீஸ் கட்டுவதற்காக வந்திருக்குதா? அப்போ இன்னிக்கு என்ன ப்ரோகிராம்? உட்லாண்ட்ஸ் ஹோட்டலுக்குப் போயிட்டு 'மினர்வா'லிலே பஸ்ட் கிளாஸ் புக் பண்ணலாமா?" என்று குதித்தான் சேகர்"[39]

என்றும்

"ஐ யாம் கொய்ட் ஓ.கே.மிஸஸ் லதா"[40]

என்றும் கல்லூரி மாணவர்களின் இன்றைய ஆங்கிலம் கலந்த பேச்சையும், அரசு, தனியார்த் துறைகளில் வேலை பார்க்கும், கற்றவர்களின் பேச்சு வழக்கினையும் ஆங்கில நடையோடு தமிழ் கலந்து எதார்த்தமான, உயிரோட்டமான பாத்திரங்களாய் நுகர்வாளருக்கு (வாசகர்களுக்கு) ஆசிரியர் தந்துள்ளார்.

## வடமொழிச் சொற்கள்

அய்க்கண் புதினங்களில் தமிழ் மக்களிடம் வழங்கும் வடமொழிச் சொற்களை ஆங்காங்கே, கையாண்டுள்ளார். குறிப்பாகப் பாத்திரங்களின் தன்மைக்கேற்ப நீண்ட வடசொற்களையும் கையாண்டுள்ளதை அறிய முடிகிறது.

'தீர்க்க சுமங்கலி'யில் ஒரு சாமியார் தன்னுடைய கருத்தை வடமொழியில் வெளிப்படுத்துகிறார்.

"ப்ராஹ்மன க்ஷத்ரிய விசாம் சூத்ராணாம்ச பரந்தப கர்மாணி ப்ரவிபக்தானி ஸ்வபாப்ரப வைர்குனண' என்னும் பகவத்கீதை, குணங்களுக்கு ஏற்பவே ஒரு மனிதன் இன்ன குலம் என்று பிரிக்கப்படுகிறான் என்பதை சொல்கிறது. மன அடக்கம், இந்திரிய அடக்கம், தவம், தூய்மை, பொறுமை, நேர்மை, சாஸ்திர

ஞானம், சுவானுப ஞானம், ஈஸ்திர நம்பிக்கை இவையெல்லாம் பிராமணனுக்கு உரிய குணங்கள் என்று கீதை சொல்கிறது"[41]

என்று நூலில் உள்ளக் கருத்தைச் சான்றாதாரங்களோடு பிறமொழிச் சொற்களை அப்படியே பயன்படுத்துகிறார்.

மேலும், கூத்தரியர்களைப் பற்றிக் கூற வரும் அய்க்கண்,

"க்ருஷிகோரக்ஷ்ய வாணிஜ்யம் வைச்ய கர்மஸ்வ பாவஜம் பரிசர்யாத்மகம் கர்ம சூத்ரஸ்பாமி ஸ்ஙவபாவஜம்"[42]

என்று தேவையின் பொருட்டு மட்டும் வடமொழிச் சொற்களைப் பாத்திரத்தின் தகுதிக்கேற்ப வெளிப்படுத்தியுள்ளார். அவருடைய அனைத்துப் புதினங்களிலும் பல்வேறு வடமொழிச் சொற்களைப் பயன்படுத்தியுள்ளார். அவற்றுள் சில.

சுவாமிஜி, விசேஷ, விசேஷகம், ராஜபார்ட், ராஜாபோல், ஸ்திரிபார்ட், விவஸ்தை, ஸ்பெஷல், விஷயம், மனுஷாள், பௌருஷம், மேஜை, ஹீரோ, கர்ஜித்து, ஜாதிகள், கஷ்டப்படுத்திடாதே, பகிர்ஷ்கரிப்பது, ஸ்பஷ்டமான, ஜ்வாலைகளாக, பகிஷ்கரிக்க, ஏன்மம், ஆஸ்பத்திரி, மனுஷங்க, கஷ்டங்களெல்லாம், குமாஸ்தா, ஜீப், கேஷம், ஜீவியான, உத்தியோகம், வருஷமாய், அங்க பிரதட்சணம், இஷ்ட, பேஷாய், ஜாதிக்காரா சமிக்ஞை, ஜீவனும், ஹீன, கஷ்ட, ஜாடை இவை போன்ற பல்வேறு சொற்களைப் படைப்பாசிரியர் அய்க்கண் தேவைக்கேற்ப பயன்படுத்தியுள்ளார்.

## வருணனை நடை

புதினத்தில் அமையும் வருணனை வெளியீட்டு உத்திகளுள் ஒன்றாகக் கருதப்படுகின்றது. படிப்போரின் உள்ளத்தில் காட்சிப்படுத்திக்காட்டும் வகையில் அமையும் விரிவான விளக்கமே வருணனை ஆகும். அது இட வருணனை, உருவ வருணனை, பொழுது வருணனை, பின்பு வருணனை,

செயல் வருணனை எனப் பலவகைகளாகப் பயன்படுத்தப்படுகிறது. நிகழ்ச்சியையும், பாத்திரத்தின் பண்பையும் விளக்க இவ்வுத்தி உதவுகின்றது.

கதை சொல்லும் போக்கில் வருணனைக் கொடுப்பதன் மூலம் கருப்பொருளின் நிலையை நன்கு உணர்ந்து கொள்ள முடியும். புதினம், காப்பியம், நாடகத்தில் நீண்ட வருணனைகள் இடம்பெறும். சிறுகதையில் மிகவும் நீண்ட வருணனையோ, பொருளற்ற வருணனையோ இடம்பெறக் கூடாது என்பர்.

வருணனையை மூன்றாகப் பிரித்துக் கூறுவர். அவை,

1. பாத்திர வருணனை,
2. இட வருணனை
3. இயற்கை வருணனை – ஆகியனவாகும்.

## பாத்திர (உருவ வருணனை)

பாத்திரங்களை வெளிப்படுத்தும் ஆசிரியர் அவர்களின் உருவத்தினை நம் கண் முன் கொண்டு வந்து நிறுத்துவதைக் காண முடிகிறது. உருவ வருணனையில் பெரும்பாலும் பெண்ணின் அழகைப் பற்றிய வருணனை தந்திருப்பதைக் காண முடிகிறது.

"ஒரு வருணனை என்பது வேண்டாததாய் சலிப்பூட்டுவதால் அமையாமல் தனித்தன்மையும் கவர்ச்சியும் தோன்ற வரையப்பெறுதல் வேண்டும்"[43] என்று தாஸ்தா வெங்கி கூறியதை இரா.மோகன் எடுத்துக்காட்டியுள்ளார்.

விடிவெள்ளி'யில் ஓர் இளைஞனை அறிமுகப்படுத்தும் அய்க்கண்,

> "படிய வாரிய சுருள்முடியும், அவசியத்திற்காக அன்றி,
> அழகுக்காக அணிந்திருந்த தங்க ஃப்ரேம் போட்ட
> மூக்குக் கண்ணாடியும், மெல்லிய சலவை மடிப்புக்

கலையாத பட்டுச் சட்டையும், முண்டா பனியனையும் மீறி வெளியில் தெரியும்படியாகத்திரண்ட கழுத்தில் புரளும் 'மைனர்' செயினும், தூய வெள்ளைச் சரிகைப் பட்டு வேட்டியுமாக, மேல்நாட்டு 'சென்ட்' மணம் முன்னே வந்து கட்டியம் கூற, உள்ளே விஜயம் செய்தான் மேஜரான 'மைனர்'......."[44]

என்று அறிமுகப்படுத்துகின்றார். 'மறுபக்கம்' புதினத்தில், ஓர் இளைஞனைப் பற்றி,

"பெரிய வீட்டுப் பிள்ளைகளுக்கே உரிய நெடிய வளர்ச்சி, கொழுகொழுப்பான சிவந்த உடம்பு, எஸ்டேட் கம்பீரம் பதிந்த முகம், செல்லம் துள்ளும் நடை..."[45]

என்று இளைஞனைக் கண்முன்னே தமது வருணனையின் மூலம் அய்க்கண் கொண்டு வந்து நிறுத்துகிறார்.

'மாபெரும் நாடு மாபெரும் மக்கள்' புதினத்தில், ஒரு பெண்ணை,

"அழகே உருவான சிலை போன்ற அவள், தன் கைகளின் அணைப்பிலே கொடிபோல் துவண்டு கிடக்க, அவளுடைய அகன்ற கண்களிலே தன்னையும் அவனுடைய கண்களிலே அவள் தன்னையும் பார்த்து பார்த்து மகிழ்ந்து"[46]

என்று பெண்ணை உருவகம் செய்கிறார்.

'இரண்டாவது ஆகஸ்ட் 15' என்னும் புதினத்தில்,

"சிவந்த நெடிய உடலும், ஒளி சுடரும் நீலக்கண்களும் ரோஜாவாய் மின்னும் கன்னங்களும் நிமிர்ந்த நெடிய நாசியுமாக, நிறைந்த அழகு பொலிய நின்ற அந்த நடுத்தர வயதுப் பெண்ணுக்குச் சிவந்த இதழ்களில் உயிர்த்த புன்சிரிப்பு மேலும் அழகூட்டியது"[47]

என்று பெண்ணைச் சிறப்புற வருணிக்கிறார். ஒரு நடிகையை வருணிக்கும்

ஆசிரியர்,

> "வயதுக்கு மீறிய வளர்ச்சியும், வளர்ச்சிக்கும் மீறிய கவர்ச்சியும், கவர்ச்சிக்கு மீறிய சதைக் காட்சியுமாக, மெழுகு பொம்மையாய் ஜொலிக்கும் ரம்பாவை பார்த்து கிராம மக்களுக்கு ஒரே ஆச்சரியம்"[48]

என்று விவரிக்கிறார். மேலும், பல்வேறு உருவ வருணனைகளைத் தமது புதினங்களில் தந்துள்ளார்.

## இட வருணனை

கதைக் களத்திற்கு ஏற்ப ஓர் இடத்தை அறிமுகப்படுத்தும் ஆசிரியர் இட வருணனையைத் தேவையான சில இடங்களில் மட்டும் பயன்படுத்தியுள்ளார்.

"புதினத்தில் வரும் வரும் வருணனைகள் ஆசிரியரின் கவித்துவ ஆற்றலைக் காட்டுவதாகும், கதையோடு பொருந்தியதாகவும், கற்பவருககு விருப்பூட்டும் வகையிலும் அமைந்திருக்க வேண்டும்"[49] என்று கூறுவர் மா.இராமலிங்கம்.

விடிவெள்ளியில், தெருவைப் பற்றி வருணிக்கும் ஆசிரியர்,

> "வாசற்படியை அடுத்து கிழக்கு மேற்காக சிமெண்ட போட்ட நீளமான நடைபாதை: நடைபாதையின் இருபுறமும் கிடந்த காலி இடத்தில் தென்னை மரங்களும் வரிசையாகச் சுற்றுச்சுவரை ஒட்டி நின்றன. நடைபாதை போய் வேரும் இடத்தில், தெற்கு வடக்காக அழகான பத்தி; பழங்கால கோனாப்பட்டுப் பளிங்குக் கற்கள் பதிக்கப்பட்ட அந்தப் பத்திக்கு மேலாக ஓர் அடி உயரத்தில் இரண்டு பக்கமும் ஆட்கள் உட்காருகிற ஆள் வீடு: வடக்கிலும், தெற்கிலும் அமைந்திருந்த பிரம்மாண்டமான ஜன்னல்கள் வழியே, காற்று சுகமாக உள்ளே நடமாடிக்கொண்டிருந்தது..."[50]

என்று ஓர் இடத்தினைப் படம்பிடித்துக் காட்டுவது போல வர்ணிக்கிறார்.

சிற்றூரைப் பற்றி வருணனை செய்யும் ஆசிரியர், இரண்டாவது ஆகஸ்ட 15 என்னும் புதினத்தில்,

> "தெருக்களிலே, 'இன்று விழுவோமா, நாளை விழுவோமா?' என்று யோசித்துக்கொண்டிருப்பது போல் நின்றன வீட்டுச் சுவர்கள்... அங்கும் இங்குமாய் குவிந்து கிடக்கும் குப்பைகள் காற்றிலே நாற்றத்தை ஏற்றுமதி செய்து கொண்டிருந்தன. எருமை, பசு மாடுகள்... பசிய இலைகளைத் தேடி கொண்டிருந்தன இளைத்த ஆடுகள்... மரத்தடிகளிலும் வீட்டுத் திண்ணைகளிலும் வயது வந்த ஆண்கள் உட்கார்ந்து, ஆடு–புலி ஆட்டம், தாயக்கட்டம் முதலிய விளையாட்டுக்களில் மும்முரமாக ஈடுபட்டிருந்தார்கள்"[51]

என்று ஒரு சிற்றூரில் தினந்தோறும் நிகழும் எதார்த்தச் சூழலை வீடு, வீட்டைச் சார்ந்த குப்பை மேடுகள் முதல் எருமை, பசு, ஆடுகள் வரை அனைத்தையும் தெளிவுற வருணிக்கிறார்.

## ஒலிக் குறிப்புச் சொற்கள்

ஒலி உச்சரிப்பில் இருந்தே மொழி உருவாயின என்பர். ஒரு பொருளை உணர்த்த ஓசையை எழுப்பியே காலந்தொட்டு பிற உயிரினங்களின், பிற சப்தங்களின் வெளிப்பாட்டை உணர்த்த படைப்பாசிரியர் ஒலிக்குறிப்புச் சொற்களை இலக்கியங்களில் பயன்படுத்துவர். ஆசிரியர் அய்க்கண் தமது புதினங்களில் 'ஒலிக் குறிப்புச் சொற்கள்' பயன்படுத்தியிருப்பதைக் காண முடிகிறது.

ஒலிகள் தனித்தும் இணைந்தும் செயல்படுவதே ஒலி நிலையாகும். சொற்கள் மிகுதியாகப் பயன்படுத்தப்படுகின்றன. உரைநடையிலும், ஒலி நிலைச் சொற்கள் சிறப்பாகக் கையாளப்படுகின்றன. ஒலி நிலையில் ஒலிகுறிப்புச் சொற்கள், இரட்டைக் கிளவி, அடுக்குத்தொடர், எதுகை, மோனை போன்றவை இடம் பெறுகின்றன.

ஒலிக் குறிப்புச் சொற்கள் இனிமையைத் தந்து சூழலோடு ஒன்ற வைக்கின்றன. படிப்பவர் கதைச் சூழலின் மனத்தை ஒன்ற வைக்கின்றன. படிப்பவர் கதைச் சூழலின் மனத்தை அவற்றின் வழி நுகர முடிகின்றது எனலாம்.

"ஒலிக்குறிப்புகள் முதலில் தோன்றிய பின்னர் அவற்றிலிருந்து சொற்கள் தோன்றின"[52]

திருமணம் மிகச் சிறப்பாக நடந்ததை இன்று நாம் வழக்குச் சொற்களில் 'ஜாம் ஜாம்னு' திருமணம் நடந்தது என்று சொல்வது வழக்கம். இதனை,

"கல்யாணியின் கல்யாணத்தை ஜாம் ஜாம்னு நானே
முன்னால நின்று நடத்தப் போறேன்..."[53]

என்று பாத்திரத்தின் கூற்று மூலம் ஒலிக்குறிப்புச் சொல்லைக் கையாண்டுள்ளார் சிரிப்பைப் பற்றிக் கூறும் ஆசிரியர்,

"அவனைக் கூர்ந்து பார்த்த அம்பலக்காரர் பழைய
கடகட சிரிப்பு – வெண்கல சிரிப்பு – சிரித்தார்"[54]

என்று சொற்களைக் கையாண்டுள்ளதைக் காணலாம்.

சோகத்தில் திடீரென்று அழுவது இயற்கை. இதனை விடிவெள்ளியில்

"சுப்பையாவின் 'குபுக்' என்று கண்ணீர்
ஊற்றெடுத்தது"[55]

என்று அழுகையை வெளிப்படுத்துகிறார்.

பூஜை மணியின் சப்தத்தை,

"பக்கத்திலிருந்தே பூஜை மணியெடுத்து 'கிணிங்
கிணிங்' என்ற ஒலியை எழுப்பினாள். மணியோசை
கேட்ட கண்ணன் திரும்பிப் பார்த்தான்"[56]

என்றும்,

தொலைபேசியின் சப்தத்தை,

"அந்த வேளையில் – 'டிரிங் டிரிங்...'
தொலைபேசி மணி ஒலித்தது"[57]

என்றும் சப்தங்களுக்கேற்ற ஒலிக்குறிப்பு சொற்களைப் படைப்பாசிரியர் தேவையான இடங்களில் பயன்படுத்தியிருப்பதைக் காணலாம்.

நோய்வாய்ப்பட்ட ஒரு பெண்ணைப் பற்றி கூறவரும் பாத்திரம்,

> "அவளுக்கு எப்போதுமே அந்த நோய் உண்டு. கண்கள் ஜிவ்வென்று எரிந்து சிவக்கத் தொடங்கும். கடினமாக நடமாடும் மூச்சி, கிசுமுசு என்று மெல்லிய கீச்சொலியுடன் இளைக்க ஆரம்பிக்கும்"[58]

என்று குறிப்பிடுகிறார்.

இது போன்ற பல்வேறு வகையான ஒலிக்குறிப்புச் சொற்களைப் புதினங்கள் முழுவதிலும் தேவைக்கேற்ப ஆசிரியர் கையாண்டுள்ளதை அறிய முடிகிறது.

**உவமை நடை**

தாம் கூற வரும் கருத்தை நன்கு தெரிந்த பொருளோடு போல, புரைய, மான, ஒப்ப போன்ற உவம உருபுச் சொற்களோடு இணைத்துக் கூறும் முறை 'உவமை நடை ஆகும். கருத்தினை உவமைப்படுத்தி உரைக்கும் பாங்கு அய்க்கணின் புதினங்கள் முழுவதிலும் காண முடிகிறது.

உவமை என்பது பொருள் புலப்பாட்டிற்குப் பயன்படுவது ஆகும். ஒரு பொருளை அதனோடு தொடர்புடைய பரிதொரு பொருளோடு ஒப்பிடுதல் உவமை எனப்படுகிறது. உவமையின் இலக்கணமாக

"பண்பும் தொழிலும் பயனும் என்றிவற்றின்
ஒன்றும் பலவும் பொருளோடு பொருள்புணர்ந்து
ஒப்புமை தோன்றச் செப்புவது உவமை"[59] என்று தண்டியலங்காரம் குறிப்பிடுகின்றது.

இலக்கியங்களுக்குச் சிறப்பளித்து ஆடை அணிகலன்கள் உடலுக்கு அழகைத் தருவது போன்று உவமை கற்பனைக்கு, கற்பனை சார்ந்த நிகழ்வுகளை மனிதனிடம் புலப்படுத்துவதற்கு அணிகலனாய் அமைகிறது.

'மறுபக்கம்' புதினத்தில், ஒரு பெரியவரின் சிரிப்பை உணர்த்த முற்பட்ட ஆசிரியர்,

> "வெண்கலக் கடையிலே யானை புகுந்து உருட்டினாற் போன்ற வெண்கலச் சப்தம் அந்த சிரிப்பிலே ஒலித்தது"[60]

என்றும், மேலும் ஒருவரின் குரலை வெளிப்படுத்த முற்படும் அய்க்கண்,

> "அவரது குரலில் இடியோசை கேட்ட பாம்பு போல், நடுங்கி ஒடுங்கி நின்றான் சின்னையா"[61]

என்றும் சுட்டியுள்ளார்.

ஒருவரை ஒருவர் பார்க்கின்ற சூழலை,

> "ஏதோ ஒரு பிராணியைப் பார்ப்பது போல அவனை ஏற இறங்கப் பார்த்தாள் ஞானாம்பாள்"[62]

என்று புதிய நோக்கில் உவமையை ஆசிரியர் கையாண்டுள்ளார். குறிப்பாக 'மறுபக்கம்' என்னும் புதினத்தில் 'விஞ்ஞானத் தன்மை' கொண்ட உவமைகளைப் பயன்படுத்தியிருப்பது சிறப்பிற்குரியதாகும்.

> "அணுவின் நடுவே இருக்கிற நியூக்ளியஸை, எலக்ட்ரான்கள் சுற்றி வருகின்றன. அது மாதிரி என் வாழ்க்கைக்கு நீதான் நியூக்ளியஸ்; உன்னைச் சுற்றித்தான் என் பிஸினஸ், செல்வம் வாழ்க்கை எல்லாம் சுழன்றுக்கிட்டிருக்கு"[63]

என்று உவமித்துக் கூறுவது சிறப்பிற்குரியதாகும்.

> "கணவனின் உயிரைத் தேடி சென்றது போல், பிரிந்த மனைவியின் உயிரைப் பற்றி கிராமமே அதிசியத்தது"[64]

என்று துக்க நிகழ்வைக் கூட உவமை நடையில் கூறுகிறார் ஒவ்வொன்றையும் நுணுக்கமான முறையில் ஆசிரியர் நகர்த்தியுள்ளார். இவ்வுவமைகள் படிப்பவரின் மனதினை ஈர்க்கும் ஆற்றலுடையனவாக அமைகின்றன.

## அய்க்கண் கையாண்டுள்ள உவமைகளில் சில

1. சிவபூஜையிலே கரடி நுழைந்த மாதிரி (பக்.133, மறுபக்கம்)

2. ஓர் அணுவிலிருந்து நியூக்ளியஸைப் பிரித்துவிட்டால் அந்த அணு நொறுங்கி அழிந்து போயிடும்னு உனக்குத் தெரியுமே, அது மாதிரித்தான் நானும்...(பக்.134, மறுபக்கம்)

3. தாய்க் கோழியின் சிறகுக்குள் ஒடுங்கும் குஞ்சுகள் போல (பக்.163, மறுபக்கம்)

4. யானை, குட்டியாயிருந்த காலத்தில் ஏற்பட்ட சிறு காயத்தைக்கூட மறந்துடாது...என்று உறுதியாகச் சொல்கிறான் மணி (பக்.189, மறுபக்கம்)

5. பெரிய லட்சாதிபதி!... மழைக்காலத்துக் காளான் மாதிரி!... சேது! (பக்.204, மறுபக்கம்)

6. கும்பிட வந்த தெய்வம் குறுக்கே வந்தது போல (பக்.206, மறுபக்கம்)

7. மனித வாழ்வின் நிலையாமையை நிருபித்துக்காட்டுவது போல (பக்.226, மறுபக்கம்)

8. வேதாளம் முருங்கை மரம் ஏறிய மாதிரி (பக்.241, மறுபக்கம்)

9. தங்கச் சிலை போல ஓர் ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள் (பக்.129, விடிவெள்ளி)

10. மஞ்சள்காமாலை நோய்க்கு, கீழாநெல்லியின் வேர் மாதிரி (பக்.191, விடிவெள்ளி)

11. புறப்படும் போது ஏதோ கும்பிட வந்த கோயிலை மறுபடியும் திரும்பும் முன்னர் தரிசிப்பது போல (பக்.206, விடிவெள்ளி)

12.அத்திப் பூப்பது போல் தான், அவன் சிரித்துப் பேசுவதும் அடைமழைக் காலத்தில் ஏதோ ஓரிரு சமயங்களில் மட்டும் தலையக் காட்டுமே சூரியன், அதைப்போல் கண்ணன் எப்போதோ ஓரிரு சமயங்களில்தான் சிரிப்பான் (பக்.17, உயிர்)

13.பலாப்பழம் போல வெளியே முரட்டுத்தன்மை இருந்தாலும் உள்ளத்தில் இனிய பண்புகள் உடையவன் (பக்.24–25, உயிர்)

14.அசைக்க முடியாத கற்பாறையை, சிறிது சிறிதாகத் திறனைச் செலுத்தி அசைப்பது போல், அவரிடம் அன்பை மேலும் செலுத்தி அவரை வெல்ல நினைக்கிறதா? (பக்.66, உயிர்)

15.தான் பிரிந்து சென்ற உலகத்தை மீண்டும் பார்க்க விரும்புவது போல, நான்கு பக்கங்களிலும் திரும்பி பார்த்தது நாய் (பக்.69, உயிர்)

16.'விலைவாசி போல உயரே பறந்து கொண்டிருந்த அந்த வதந்தி' (பக்.8 நிழலில் நிற்கும் நிறுங்கள்)

17.மேகம் மூடிய நிலவு போல (பக்.10, நிழலில் நிற்கும் நிஜங்கள்)

18.வெல்லத்தை மொய்க்கின்ற கட்டெறும்புகள் போல் (பக்.11 நிழலில் நிற்கும் நிழங்கள்)

19.தேவலோக மொழியைக் கேட்பது போல், கேட்டுப் புளகித்துக் கொண்டிருந்தார்கள் ரசிகர்கள் (பக்.18, நிழலில் நிற்கும் நிஜங்கள்)

20.கலெய்டாஸ்கோப் வடிவங்கள் போல் எண்ணற்ற நினைவுச் சுழல்கள் பொங்கி ஆர்ப்பரித்தன (பக். 149, பெண் என்பது உடம்பு அல்ல)

21.சுந்தரத்தின் உடலெங்கும் அக்கினிக் குழம்பு பாய்வது போல் தகித்தது( பக்.156, பெண் என்பது உடம்பு அல்ல)

22.நெருப்புக் கோழி மாதிரி சாப்பிடறதுானே உங்க பழக்கம் ( பக்.159, பெண் என்பது உடம்பு அல்ல)

௨௩.கணவனோடு இணைந்து அவள் கட்டி வைத்திருந்த அன்புக்கோட்டை ஒரு காகிதக் கணையால் இடித்து தூளாகி விட்டது போன்ற பிரமை – அவளுக்கு ஏற்பட்டது (பக்.165, பெண் என்பது உடம்பு அல்ல)

௨௪.அந்தக் குங்குமம் அவளது ஸ்பரிசமும், நெருப்பு ஜ்வாலைகளாக அவன் நெற்றியைச் சுடுவதுபோல் உணர்ந்தான் சுந்தரம் (பக்.169, பெண் என்பது உடம்பு அல்ல)

௨௫.இன்று விழுவோமா, நாளை விழுவோமா? என்று யோசித்துக்கொண்டிருப்பது போல் நின்றன (பக்.௨௩, இரண்டாவது ஆகஸ்ட் 15)

௨௬.நீலமலர் விரிந்தது போல் விழிகளைத் திறந்த டயானா (பக்.110, இரண்டாவது ஆகஸ்ட் 15)

இதுபோன்று பல்வேறு விதமான உவமைகளைப் படைப்பாசிரியர் அய்க்கண் தம் புதினங்களில் பயன்படுத்தியுள்ளதைக் காண முடிகிறது.

## உருவக நடை

ஒரு பொருளை வெளிப்படுத்துகின்ற படைப்பாசிரியர் அப்பொருளை மிகு கற்பனைத்திறத்துடன் காட்டுவர். அந்நடையைக் கவிதை நடை போன்ற உத்தி முறை என்றும் கூறுவர். புதினங்களில் உருவகம் என்பது பாத்திரப் படைப்புகளையோ, இயற்கைச் சூழல்களையோ படைப்பாசிரியர்கள் தங்கள் வாசகர்களிடத்தில் மனக்காட்சி வடிவமாக எடுத்துக்காட்டுவதற்கு இவ்வுருவக உத்திகளைப் பயன்படுத்துகின்றனர். இதற்கேற்ப

அய்க்கண் அவர்கள் இளைஞர்களின் எதிர்காலத்தைப் பற்றிக் குறிப்பிடும்போது,

> “இளைஞர்களின் எதிர்காலம் போன்று இருட்டு மேலை
> வானத்தில் பகலவனின் வீழ்ச்சியைப் பார்த்து

கொண்டே வேகமாகக் கவிழ்ந்து கொண்டிருந்தது"[65]

என்றும்,

ஒரு பெண்ணை வர்ணிக்க முற்படும் ஆசிரியரின், உருவகத்தன்மையை

> "குளித்து சேலை உடுத்திக்கொண்டு, மேகக் கூட்டமான கூந்தலை நுனியில் சிறைப்படுத்திப் பின்னல் தழையவிட்டபடி, அவனுக்குச் சாப்பாடு பரிமாறினாள்"[66]

என்றும்,

> "சிரித்த கல்யாணியின் கொழுவிய கன்னங்களில் நாணச் செம்மை படர்ந்து பளபளத்தது"[67]

என்று கூறும் திறம் தனித்தன்மையானது. பலாத்கார தன்மை கொண்ட ஒருவனைப் பற்றி அறிமுகப்படுத்தும் ஆசிரியர்,

> "ஆரம்பத்தில் முரண்டு செய்த பல மலர்களை இந்த முறையில் மயக்கி தேன் குடித்த அனுபவம் அந்த வண்டுக்கு இருந்தது"[68]

என்று வெள்ளைத்தாமரையில் உருவகப்படுத்துகிறார்.

இயற்கையை வருணித்து உருவகப்படுத்தும் ஆசிரியர்,

> "உலகத்தின் மேல் இருட்டுப் போர்வை மெல்ல மூடத் தொடங்கியிருந்தது. கீழ் வானிலே சில நட்சத்திரங்கள் தலைநீட்டிச் சிரித்துக்கொண்டிருந்தன"[69]

என்று கூறுகிறார்.

ஒருவர் சொல்லப் போகும் செய்தியைக் கேட்கும் ஆர்வத்தில் உள்ள ஒருவரை,

> "அம்பலக்காரர் சொல்லப் போகும் செய்திகளைக் கேட்கும் ஆர்வத்தில் உடலெல்லாம் செவியாக உட்கார்ந்திருந்தான் வைரவன்"[70]

என்றும்,

ஒருவரின் குரலை உருவகப்படுத்தும் ஆசிரியர்,

"கணீர் என்ற குரல், அங்கே நிலவிய அமைதியைக் கிழித்துக்கொண்டு உள்ளே நுழைகிறது"[71]

என்றும்,

ஒரு ஆணும், பெண்ணும் கடற்கரையில் உட்கார்ந்த சூழலை,

"கடற்கரையில், அலையை ஒட்டி உட்கார்ந்து கண்ணனும் தேவிகாவும் பேசிக் கொண்டிருந்தார்கள்: தாவி வரும் அலைகளில் நனையும்படியாகக் கால்களை நீட்டிக்கொண்டு இருவரும் உட்கார்ந்திருந்தார்கள்.

தேவியினுடைய வரால் போன்ற கால்களை அலைகள் வந்து முத்தமிட்டுச் செல்லும் அழகைப் பார்த்து ரசித்துக் கொண்டிருந்தான் கண்ணன்"[72]

என்று மிக நுணுக்கமாய் அய்க்கண் வாசகருக்கு உணர்த்துகிறார். 'உயிர்' புதினத்தில் ஒரு பெண்ணின் சிரிப்பை,

"சிரித்தான் வள்ளி, அதைச் சிரிப்பு என்று சொல்வதை விட, பவள இதழ்களைத் திறந்து முத்துப் பற்களைக் காட்டினாள் என்று சொல்வது தான் மிகப் பொருந்தும்"[73]

என்று உருவகப்படுத்தும் தன்மையில் அவரின் எழுத்தாளுமையைப் புரிந்து கொள்ள முடிகிறது. இது போன்று புதினங்களிலும் இடத்திற்கேற்ப அய்க்கண் உருவக நடையை தேவைக்கு ஏற்பப் பயன்படுத்தியிருக்கிறார்.

## பழமொழி

மக்களோடு மக்களாக வழங்கும் மொழிகளே பழமொழியாகும். ஒரு நிகழ்வை எடுத்துரைக்கும் ஒருவர், அந்தச் செயலுக்கு உகந்த கருத்தைத் தரப் பழமொழிகளே பயன்தரும்.

"உலகில் பல்வேறு பகுதிகளிலுள்ள, உணவு தேடித்திரியும் இனக்குழு மக்கள் முதல் அறிவியலில் வளர்ச்சியடைந்து நாகரிகத்தின் உச்சக்கட்டத்தில் வாழ்வதாகச் சொல்லப்படும் மக்கள் வரை அன்றாட வாழ்வில் பழமொழியைப் பயன்படுத்துகின்றனர். வாய்மொழி இலக்கிய வகைகளுள் பழமொழியும் ஒன்று"[74]
என்று வாழ்வியற் களஞ்சியம் விளக்கம் அளிக்கின்றது.

இப்பழமொழியை இலக்கியங்களின் தேவைக்கேற்பப் படைப்பாசிரியர் பயன்படுத்துவர். அதே போல் அய்க்கண் தமது புதினங்களில் பயன்படுத்தியுள்ளார். இத்தகைய மொழிநடையானது படிப்பவருக்குச் சலிப்பூட்டாமலும் வாழ்க்கையின் எதார்த்தத்தை ஒரு சில சொற்களிலும் சொல்லும் திறமுடையதாகவும் இருக்கும். "பொம்பிளை வளர்த்தி பீர்க்கங்கொடி மாதிரி... பார்த்துக்கிட்டிறப்பவே வளர்ந்திடுவாங்க" என்று ஒரு பெண் பிள்ளையின் வளர்ச்சியைப் பீர்க்கங்கொடியோடு ஒப்பிட்டு வழக்கில் பேசப்படுவதையும் காணலாம். இதனை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

அய்க்கணின் புதினங்களில் 'பழமொழிகள்' முத்துப் போன்று ஆங்காங்கே சிதறி இருப்பதைக் காண முடிகிறது. அவற்றில் சில:

1. "நாயைக் குளிப்பாட்டி நடுவீட்ல வச்சாலும், வாலைக் குழைச்சிகிட்டு எச்சியிலைப் பொறுக்கத்தான் போகும்னு சொல்லுவாங்க" (பக்.28 வெள்ளைத்தாமரை)

2. கறுப்பு நாயை எம்பிட்டுத் தண்ணியில் குளிப்பாட்டினாலும், அதோடு கறுப்பு நிறம் மாறாது. (பக்.29, வெள்ளைத்தாமரை)

3. 'ஆடின காலும் பாடின வாயும் சும்மாயிருக்காதுனு சொல்லுவாங்களே" (பக்.31, வெள்ளைத்தாமரை)

4. பொது இடத்தில் காய்த்திருக்கும் மரத்தில், யார் வேண்டுமானாலும் கல்லெறியலாமே (பக்.39, வெள்ளைத்தாமரை)

5. “ஏழைக்கு அழகும், நோயாளிக்கு நெய்யும் விஷம்” (பக்.95, வெள்ளைத்தாமரை)

6. அரிதாரம் பூசின முகம் இருக்கே, அது கடைசி வரை அரிதாரம் பூசிக்கிட்டே தான் இருக்கும்” (பக்.5, நிழலில் நிற்கும் நிஜங்கள்)

7. மீன் குஞ்சுக்கு நீந்தக் கத்துக்கொடுக்கணுமா (பக்.19, நிழலில் நிற்கும் நிஜங்கள்)

8. தாய் எட்டடி பாய்ஞ்சா, குட்டி பதினாறடி பாயும்னு சொல்வாங்களே (பக்.22, நிழலில் நிற்கும் நிஜங்கள்)

9. “கெட்டும் பட்டணம் சேர்” (பக்.39, நிழலில் நிற்கும் நிஜங்கள்)

10. கரும்பு தின்னக்கூலி வாங்கிடறேன் (பக்.56, நிழலில் நிற்கும் நிஜங்கள்)

11. தாய் போல் பிள்ளை நூலைப் போல சேலை (பக்.68, நிழலில் நிற்கும் நிஜங்கள்)

12. கல்யாணம்கிறது, ஆயிரம் காலத்துப் பயிர் (பக்.74, நிழலில் நிற்கும் நிஜங்கள்)

13. “அண்ணன் தம்பி, பத்து வயசுக்குமேல பங்காளின்னு ஊரிலே சொல்லுவாங்க” (பக்.4, இரண்டாவது ஆகஸ்ட் 15)

14. தண்ணீர் பள்ளத்தை நோக்கிச் செல்லும். ஆனால் பணம், மேட்டை நோக்கியே செல்லும்” (பக்.76, இரண்டாவது ஆகஸ்ட் 15)

15. கும்பிடப் போன தெய்வம், நேரிலே வந்தது மாதிரி (பக்.84, இரண்டாவது ஆகஸ்ட் 15)

16. ஆடியிலே விதைச்சால்தான் தையிலே அறுவடை செய்யலாம். (பக்.128, இரண்டாவது ஆகஸ்ட் 15)

இது போன்று பல்வேறு பழமொழிகளைத் தீர்க்க சுமங்கலி, வயல், என் மகன், ஜல்லிக்கட்டில் பசுமாடுகள், மண்ணின் மலர்கள் போன்ற பல்வேறு புதினங்களிலும் சூழலுக்கு ஏற்பப், பாத்திரங்கள் பேசுவது போன்று, ஆசிரியர் பழமொழியை வெளிப்படுத்துவது எதார்த்ததுடன் சமூகப் புதினங்களுக்குப் பொருந்தி அமைவதைக் காண முடிகிறது.

## இலக்கிய மேற்கோள்கள்

ஒரு கருத்தை வெளிப்படுத்த முனையும் ஆசிரியர் அக்கருத்திற்குச் சான்றோர்களை வைத்து இலக்கிய கருத்துக்களை மேற்கோளாகக் காட்டுவர். இம்முறையை அய்க்கண் திறம்படக் கையாண்டுள்ளார்.

சூழலால் கற்பிழந்து நின்ற பெண்ணைத் திருமணம் செய்து கொள்ளுவது தவறில்லை என்ற கருத்தை 'பெண் என்பது உடம்பு அல்ல' என்ற புதினப் பாத்திரத்தின் மூலம் உணர்த்துகிறார்.

> "இந்தியா சுதந்திரம் அடைந்த சமயத்தில் வங்காளத்திலும் பஞ்சாபிலும் வகுப்புக் கலவரம் ஏற்பட்ட போது ஏராளமான பெண்கள் குண்டர்களால் கற்பழிக்கப்பட்டு நிர்க்கதியாய் நின்றார்கள். அப்போது மகாத்மா காந்தி என்ன சொன்னார்? பாவம் இந்தப் பெண்கள் உடலால் களங்கமடைந்தாலும் உள்ளத்தால் கற்புடையவர்கள். இவர்களை ஒதுக்காமல் ஆண்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று சொன்னாரே நினைவிருக்கா? ஏன் புராண காலத்திலே கூட, இந்திரனின் வஞ்சனையால் கற்பிழந்த அகலிகையை மனைவியாக ஏற்றுக்கொள்ளும்படி கௌசிக முனிவரை இராமபிரான் கேட்டுக்கொள்ளவில்லையா"[75]

என்று கூறும் கூற்றானது சமூக நடைமுறைக்கு உதவும் தத்துவமாய் முன் நிற்கிறது.

அமெரிக்காவில் படிப்பை முடித்துவிட்டு தமிழகத்திற்கு வரும் ஒரு பெண் தமிழ் இலக்கியத்தைப் பற்றிப் பேசுவதாக 'இரண்டாவது ஆகஸ்ட 15'புதினத்தை அமைத்துள்ளார் அய்க்கண்,

> "யாதும் ஊரே, யாவரும் கேளீர் என்ற கவிதையா?" என்று கேட்டார் முதியவர்.
>
> "இல்லை.... அது நீளமான கவிதையல்லவா? 'யாயும் ஞாயும் யாராகியரோ' என்ற பாட்டைத் தான் அங்கே எழுதி வைத்திருக்கிறார்கள் என்ற டயானா,
>
> 'யாயும் ஞாயும் யாராகியரோ?'
>
> எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளீர்?...
>
> என்று சொல்லிப் பார்த்தவள் மேலே பாடல் வரிகள் நினைவு வராமல் யோசித்துக் கொண்டிருந்தாள்.
>
> "யானும் நீயும் எவ்வழி அறிதும்?
>
> செம்புலப் பெயல் நீர் போல
> அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே....
> என அந்த பாடலை முடித்தார் பெரியவர்"[76]

என்று சங்க இலக்கியப் பாடல்களையும் அய்க்கண் பயன்படுத்தியுள்ளார். மேலும்,

> "இம்மை மாறி மறுமை ஆயினும், யான் ஆகியர் நின் நெஞ்சு நேர்பவளே, என்று சங்கப் பாடல் இதைத்தான் நினைவூட்டுகிறது... பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ, என்று கம்பரும் இதைத்தான் குறிப்பிடுகிறார்...."[77]

என்று சங்க இலக்கியக் களவுப் பாடல்களைப் பாத்திரங்களின் வழியாக மக்களுக்கு உணர்த்துகிறார்.

ஒரு பெரியவர் திருக்குறளைப் பேசுவதாக விடிவெள்ளியில் படைத்துள்ளார்.

"நமக்கெதுக்குப் படிப்பு? உழுக நிலம் இருக்கு, மாடு இருக்கு; தோட்டம் இருக்கு; நாம் ஏன் படிச்சு உத்தியோகத்துக்குப் போகணும்? உத்தியோத்துக்குப் போய் மேலதிகாரிகிட்டே போய் கைகட்டி நிற்கணும்?..... 'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம் தொழுதுண்டு பின் செல்பவர்'னு யாரோ ஒரு புலவர் பாடியிருக்காரே யார் அவர்?" என்று சற்றே நிறுத்தினார் சுப்பையா

"திருவள்ளுவர்... என்று எடுத்துச் சொன்னான் வைரவன்"[78]

ஊரகத்தில் இருக்கின்ற படிப்பறிவற்றவர்கள் கூட அறிவாளிகளாய் இருக்கிறார்கள் என்பதை இவ்விலக்கிய மேற்கோள் மூலம் அய்க்கண் உணர்த்துகிறார்.

'ஏறு தழுவுதல்' என்னும் பழக்கம் பண்டையக் காலத்திலிருந்தே வழக்கத்தில் இருந்து வந்துள்ளது. இதைச் சங்க இலக்கியப் பாடல்கள் வெளிப்படுத்தும். அத்தகைய ஏறு தழுவும் பழக்கம் கொண்ட பக்தி சார்ந்த சூழலை அய்க்கண் விடிவெள்ளி கதையில் இலக்கிய மேற்கோளுடன் பாத்திரத்தின் வாயிலாக உணர்த்துகிறார்.

"அந்த காலத்திலே ஏறு தழுவுதல்னு ஒரு பழக்கம் இருந்திச்சு, தம்பி! ஒவ்வொரு வீட்டிலும் காளை மாடுகள் இருக்கும். ஒரு வீட்டிலே இருக்கிற பெண்ணைக் காதலிக்கிறவன், அந்த வீட்டுக் காளையைப் பிடித்து அடக்கி, அந்த வீரத்துக்குப் பரிசாக, தன் காதலியைக் கைப்பிடித்துக் கல்யாணம் செய்து கொள்வான்.

"கொல் ஏற்றுக்கோடு அஞ்சுவானை, மறுமையும் புல்லாளே ஆய மகள்"னு ஒரு சங்க காலப் பாடலை எங்க அண்ணன் அடிக்கடி சொல்வாரு.."[79]

என்று கலித்தொகையிலுள்ள முல்லைக்கலிப் பாடலைப் பாத்திரத்தின் மூலம் உணர்த்துவதைக் காணலாம்.

சிற்றூர் பெண்ணொருத்தி வள்ளலாரின் பாடலை இறைவணக்கமாக,

"ஒருமையுடன் நினது திருமலரடி நினைக்கின்ற
உத்தமர்தம் உறவு வேண்டும்.."[80]

என்று பாடும், பாசுரத்தைத் தெரிந்து கொண்ட பாத்திரங்களை இலக்கிய மேற்கோளுடன் நமக்கு அறிமுகம் செய்து வைக்கிறார் அய்க்கண்.

விடிவெள்ளி புதினத்தின் முடிவில் பெண்மையைச் சிறப்பிக்கும் பொருட்டு,

"பெண்மை வாழ்க என்று கூத்திடுவாயோ!
பெண்மை வெல்க என்று கூத்திடுவோமடா!"[81]

என்று பாரதியின் கருத்தோடு முடிவு கூறுகிறார்.

இலக்கியச் செய்திகளை மிகத் தெளிவுற ஆசிரியர் உணர்த்துவதைக் காண முடிகிறது. கற்பைப் பற்றிப் பேசும் பாத்திரம்,

"ஆனானப்பட்ட ராமபிரானே, சீதாபிராட்டியைச்
சந்தேப்படலியா? அக்கினி பிரவேசம் செஞ்சு
தானே சீதை தன் கற்பை நிரூபிச்சா?

அந்த ராமபிரான் அகலிகையையே மன்னிச்ச
உத்தமர். அந்த வீரனுக்காக, அக்னிப்
பிரவேசம் என்ன உயிர்த்தியாகமே செய்யலாம்"[82]

என்று பல்வேறு நிகழ்வுகளுக்கு ஏற்பத் தேவையான இடங்களில் இலக்கிய மேற்கோளையும், பண்டைய இலக்கியக் கருத்துக்களையும் தெளிவுற வாசகர்கள் புரிந்து கொள்ளும் வகையில் படைப்பாசிரியர் திறம்பட அமைத்துள்ளார்.

## புராணச் செய்திகள்

இலக்கியங்களோடு இணைந்து வாழ்வியல் கருத்துக்களை வழங்குபவை புராணங்கள் ஆகும். அப்புராணக் கருத்துக்கள் பெரும்பாலும்

இறை நிகழ்வை உணர்த்துவதாகவே இருக்கும். அதனை அய்க்கண் தமது புதினங்களில் தேவையான இடங்களில் கதைக்கேற்ப தந்துள்ளார்.

தன் கற்பைப் பற்றி பேசும் ஒரு பெண்,

> "நான் சொல்றதை நீங்க நம்பலேன்னா, என்னாலே வேறு என்ன செய்ய முடியும்? அந்தக் கால சீதைபோல நான் அக்னி பிரவேசம் செய்ய முடியுமா? இந்தக் காலத்து அக்னிங்கிறது, வெறும் அக்னியா இல்லாம, அக்னி பகவானாக இருந்தா நானும் அக்னி பிரவேசம் செஞ்சு, நான் களங்கமில்லாதவள்னு நிருபிச்சிட முடியும்"[83]

என்று அக்னி பகவானைப் பற்றிப் பேசும் பாத்திரத்தை ஆசிரியர் தருகிறார். பலதார மணம் தவறான ஒன்றல்ல என்பதை உணர்த்த,

> "நம்ம சாதியிலே மூணாம் தாரம் கட்டிக்கிறது, ஒண்ணும் புதிசில்லே... எங்க அப்பாவுக்கு ஆறு தாரம்... ஏன் தசரதனுக்கு அறுபதினாயிரம் பொண்டாட்டிகள்னு சொல்லுவாங்க"[84]

என்று புராணச் செய்திகளை ஆங்காங்கே தேவைக்கேற்ப ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## நாட்டுப்புறப் பாடல்கள்

நாட்டுப்புறப் பாடல்கள் மக்கள் மத்தியில் என்றும் அழியாத நிலைகொண்ட அற்புத இலக்கியமாகும். தொழில், உற்பத்தியில் ஈடுபடும்பொழுது 'சிற்றூர் நிகழ்வை' மையமிட்டு அவர்களே பாடல் புனைந்து பாடுவர். இப்பாடல்கள் வாய்மொழியாக வழங்கப்பட்டு இன்றும் சிறப்புற நிலைத்திருக்கின்றன. இந்நாட்டுப் புறப்பாடலை ஆசிரியர் அய்க்கண் தமது புதினங்களில் பயன்படுத்தியுள்ளார்.

இறந்தவருக்கு ஒப்பாரி வைத்து அழும் பழக்கம் இன்றும் பல்வேறு சிற்றூர்களில் காணப்படுகிறது. 'விடிவெள்ளி' யில் அழகப்பன் என்ற பாத்திரம்

இறந்த பின்னர்,

"சண்டாளப் பாவி சதிகாரன் எமதர்மன்

புண்ணியவதி தாலியைப் பொசுக்குன்னு பறிச்சானே...

தாலிக்கொடியை மட்டுமா அந்த சண்டாளன் பறிச்செடுத்தான்?

தாய்மார்கள் பெத்தெடுத்த தங்கப் பிள்ளைகளைத்

தாலாட்டும் தொட்டில் கொடியை அல்லோ அறுத்துப்பிட்டான்?

ஏழைகளின் கர்ப்பத்தில் இருக்கின்ற கொழந்தையோட

தொப்பூள் கொடியை அல்லோ கொடும்பாவி அறுத்துபிட்டான்?...

ஊர்நடுவே இருந்த ஊருணியும் காஞ்சு போச்சே

எல்லார்க்கும் தாயாய் இருந்தவளும் போறாளே!

ஊர்காத்த லெட்சுமியும் ஊரை விட்டுப்போறாளே!

உத்தமியாள் போனப்புறம் உசிரை வச்சு என்ன செய்ய?..."[85]

கணவனை இழந்த ஒரு பெண்ணை நினைத்துப் பாடுகின்ற நாட்டுப்புறப்பாடலைத் தேவைக்கேற்ப, ஆசிரியர் கையாண்டுள்ளார், 'வெள்ளைத் தாமரை' புதினத்தில்,

"வச்ச பூ வாடறதுக்குள்ளே

வாச்ச மச்சான் வாடிட்டானே....

விரிச்ச பாய் சுருட்டுறதுக்குள்ளே

வீரமவன் தூங்கிட்டானே..."[86]

என்ற ஒப்பாரிப் பாடலும் நயம்பட ஆசிரியர் பயன்படுத்தியுள்ளதை அறிய முடிகிறது.

‘வயல்’ என்னும் புதினத்தில்,

வயலில் அறுவடை நடைபெற்றுக்கொண்டிருக்கிறது. ஊர் மக்கள் அனைவரும் திரண்டு, பாட்டின் பின்னணியில் கதிர் அறுவடை செய்கிறார்கள். அப்பாடல் பின்வருமாறு, பதிவு செய்துள்ளார்.

“ஆண்கள் :

சாயச்சேலை சரிகைச் சேலை
சாத்தங்குடி கம்பிச் சேலை
ஊதாக் கரும்புச் சேலை
உட்காரடி பக்கத்திலே! (பக்கம்)

பெண்கள் :

செம்பிலே சிலை எழுதி
சிவத்தம்பிள்ளை பேரெழுதி
வம்பாகத் தாலிக்கட்டி
வாழுறது எந்த விதம்

ஆண்கள் :

மானத்திலே நீயிருக்க
மதுரையிலே நானிருக்க
சேலத்திலே நீயிருக்க
சேருவது எந்த விதம்?

பெண்கள் :

கரும்பிலே சிலை எழுதி
கருத்தப்பிள்ளை பேரெழுதி
வம்பாகத் தாலிகட்டி
வாழுறது எந்த விதம்”[87]

என்ற பாடலைப் பாடியவாறு உழைப்பின் கடுமையை இசையினால் குறைத்துக்கொள்வதாக ஆசிரியர் சிறந்த நாட்டுப்புறப் பாடல்களைப் புதினங்களில் வெளிப்படுத்தியுள்ளார்.

## சமூக ஆழ்கருத்துக்கள்

இலக்கியங்களின் மையக் கருத்துக்கள் மனிதனுக்குத் தேவையான வாழ்வியல் கருத்துக்களாக மட்டும் இருக்க வேண்டும் என்பதில் அய்க்கண் மிகுந்த நோக்கோடு தமது புதினங்களில் அனைத்திலும் சமூகக் கருத்துக்களைப் பதிவு செய்திருக்கிறார். தானே முன்னின்று கருத்துச் சொல்லும் போக்கும், பாத்திரங்கள் வாயிலாகக் கருத்துச் சொல்லும் போக்கும் இவர் புதினங்களில் காண முடிகிறது.

'இரண்டாவது ஆகஸ்ட 15' புதினத்தில் முழுவதுமே சமூகத்தில் நிகழ்கிற கருத்துக்களைக் கூறுகிறார். ஆணாதிக்கச் சமூகச் சூழலில் ஆண்கள் குடித்துவிட்டு பெண்களைத் துன்புறுத்துகிற நிலையைக் காண முடிகிறது. இதனைச் சாடி ஆசிரியர் பாத்திரத்தின் வாயிலாகச் சீர்த்திருத்தக் கருத்துக்களை முன் வைக்கிறார்.

இனிமேல் தான் நம்ம கிராமத்துக்கு உண்மையான சுதந்திரம் கிடைக்கப்போகுது. அதற்கான போராட்டத்தில் இறங்க வேண்டியதுதானே... என்று தீவிரமாக யோசிக்கத் தொடங்கினார் அழகப்பன்.

> "அதிலே எல்லாப் பெண்களையும் ஈடுபடுத்த வேண்டும். அங்கிள்! அப்போதுதான் மறியல் போராட்டம் வெற்றியடையும்..." என்றாள் டயானா. நம் ஊரிலே சாராயக் கடையை ஒழித்துவிட்டால் போதுமா? பக்கத்துக் கிராமங்களிலே போய் குடித்துவிட்டு வந்தால் என்ன செய்கிறது என்று கேட்டாள் லிஸி.
>
> அப்படி குடிச்சுட்ட வந்தா, அவனுங்களை வீட்டுக்குள்ளே விடக்கூடாதுன்னு எல்லா பொம்பிளைகளும் கூடித் தீர்மானிச்சுடனும்"[88]

என்று மதுவிற்கு அடிமையான குடிமகனின் நிலையையும், அதற்கு மாற்று வழியையும் தருகிறார். ஒருவரின் தோற்றத்தை மட்டுமே நினைத்து எடைபோடக்கூடாது எனும் கருத்தை,

> “கந்தசாமி அவனை பெற்ற உனக்கு அவனோட உடம்பு, உடம்பிலே இருக்கிற அடையாளங்கள் மட்டும்தான் தெரியும். ஆனால் அவனுக்குள்ளே இருக்கிற அறிவு, திறமை, சக்தி எல்லாம் எங்களுக்குத் தெரியும். மல்லிகைக் கொடி பூத்து மணம் வீசப் போகிற விஷயம், அது வளர்கிற மண்ணுக்குத் தெரியுமா? அதை வளர்க்கிற தோட்டக்காரனுக்குத்தான் தெரியும்...”[89]

என்று தந்தையிடம் சமூகக் கருத்துக்களை ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

‘மாபெரும் நாடு மாபெரும் மக்கள்’ எனும் புதினத்தில்,

> “மிருகங்களுக்கு கொடுக்காத கையை, கடவுள் மனிதனுக்குக் கொடுத்தார். தன்னிடமுள்ளதை எடுத்து மற்றவனுக்குக் கொடுப்பதற்காகவே கையைப் படைத்தார். அந்த கையால் மற்றவனை அடிக்க மனிதன் என்று ஆரம்பித்தானோ அன்றே அவன் மிருகமாகி விட்டான். கல்வி, நாகரிகம், கலாச்சாரம், பண்பாடு என்பதெல்லாம் வெறும் ஏமாற்று வார்த்தைகள்: மனிதன் தன்னுடைய மிருகத் தனத்தை மறைப்பதற்காக போட்டுக் கொள்ளும் மாறுவேஷம்”[90]

என்ற பகுதியில் மனிதன் எந்த அளவிற்குச் சமூகத்தில் கீழானவனாக மாறிவிட்டான் என்பதைத் தெளிவுறக் குறிப்பிடுகிறார்.

இன்றைய உலகில் மிகுந்த அறிவுடையோர்களை இந்தச் சமூகம் கண்டு கொள்வதில்லை. என்பதனை,

> “பார்த்தியா, அக்கா! இந்தச் சுகுமார், சாதாரண ஆள் இல்லை. நம்ம அரசாங்கம், விண்வெளி ராக்கெட்டைச் செலுத்துவதற்கு ரஷ்யாவோட ‘க்ரையோஜெனிக்’

என்ஜினையே நம்பிக்கிட்டிருந்ததே, அதுக்குப் பதிலாக ஒரு புது என்ஜினையே கண்டுபிடிச்ச என்ஜினியர் இவன். போன வருஷம், இவனுக்கு ‘பத்மபூசண்’ அவார்டு கிடைச்சது. அப்பேர்ப்பட்ட அறிவாளியை வரவேற்க, யாரையும் காணோம். ஆனா வெளிநாட்டு ஷீட்டிங் போயிட்டு வந்த நடிகருக்கு, ஊர் முழுவதும் கூடி வரவேற்பு... என்று சிரித்தான் இராமு”[91]

ஒரு பொதுக்கருத்தைப் பாத்திரத்தின் மூலம் அய்க்கண்,

“ஒரு மரத்தோட ஆணிவேர் என்போதும் ஆடறதில்லே. மேலே இருக்கிற இலைகள் தான் ஆட்டம் போடும்”[92]

என்று கூறும் சமூக தத்துவச் சொற்கள் இலக்கியத்திற்கான தன்மையை உணர்த்துகின்றன எனலாம்.

## அறிவியல் செய்திகள்

ஒரு பொருளைப் பற்றிக் கூற வரும் ஆசிரியர் அதனோடு தொடர்புடைய அறிவியல் கருத்துக்களை மிக எளிமையாகவும், வாசகர்கள் புரிந்து கொள்ளும் தன்மையுடனும் கலந்து தந்துள்ளார். உறவினர்களுக்குள் திருமணம் செய்து கொள்ளும் நிலை இன்றும் நிகழ்கிறது. இதனை மறுத்து எவர் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்ற கருத்தை,

“நெருங்கிய உறவினர்களிடையே திருமண சம்பந்தம் ஏற்பட்டால், பிறக்கும் குழந்தைகள் உடலிலும் அறிவிலும் ஊனமுள்ளவர்களாக இருக்க வாய்ப்புண்டு”[93]

என்று சிறந்த அறிவியல் கருத்தைப் பாத்திரத்தின் மூலம் வெளிப்படுத்துகிறார்.

‘இரண்டாவது ஆகஸ்ட் 15’ புதினத்தில் மருத்துவர் ராதிகா,

“உங்களுக்கு ஒரு மருத்துவ உண்மையைச் சொல்கிறேன். ஒரு பெண்ணின் சினை முட்டையும் ஆணின் விந்து அணுவும் சேர்ந்துதான் குழந்தையாக உருவாகிறது. பெண்ணின் சினை முட்டையில் ‘எக்ஸ்

குரோமோஸோம்ஸ்' மட்டும் தான் இருக்கிறது. ஆனால் ஆணின் விந்து அணுவில் எக்ஸ், ஒய் என்ற இரண்டு வகை குரோமோஸோம்ஸ் இருக்கின்றன. இந்த இரண்டு வகை குரோமோஸோம்ஸ்கள் தான் குழந்தை ஆணா, பெண்ணா என்று முடிவு செய்கின்றன"[94]

என்று குழந்தைப் பிறப்பின் நிகழ்வைத் தெளிவுற அய்க்கண் குறிப்பிடுவதைக் காணலாம்.

## தொகுப்புரை

படைப்பாளன் தான் எண்ணிய கருத்தை வாசகர் மனத்தில் பதிய வைப்பதற்குப் பயன்படுத்தும் நுணுக்கமே உத்தி என்பது தெளிவாகின்றது. இதற்காகச் சொல்லும் முறையில் சில உத்திகளைப் படைப்பாளன் கையாளுகின்றான்.

இக்காலத்தில் பயின்று வரும் உத்திகளில் பொருட்கூறு மட்டுமல்லாது ஏதேனும் ஒரு நோக்கமும் அமைந்திருக்கும் என்பது புலனாகின்றது. படைப்பாளன் ஏதேனும் ஒரு நோக்கம் குறித்து ஒரு சொல், தொடர், பொருள், பொருண்மை, கருத்து, உணர்வு, பாத்திரம், செயல், நிகழ்ச்சி, இடம், காலம், கனவு, கடிதம், வருணனை, காட்சி என ஏதாவது ஒன்றினைக் கையாளும்போது அதில் உத்தி காணப்படுகின்றது.

படைப்பாளன் ஒரு சமுதாயத்தின் நிலையை அதே சமுதாயத்திலுள்ள ஒருவனுக்குக் கூற விரும்பும் போது எளிமையாகக் கூறலாம். இதனைப் பயன்பாட்டு உத்தி என்று திறனாய்வாளர்கள் கூறுகின்றனர்.

மொழியே மனித குல வளர்ச்சியின் முதல் படிநிலை. அம்மொழி காலம் காலமாகப் பல்வேறு மாற்றங்களில் மாறுபட்டும். புதியதொரு தன்மையோடும் இயங்குகிறது. மனிதனே அதனை இயக்குகிறான். எழுத்தாளுமையின் மூலம் பண்டைய காலம் தொட்டு இன்று வரையிலான மொழியின் நடை. மாற்றம் பெற்றிருப்பதை அறியலாம் .

மொழிநடை ஒவ்வொன்றும் எழுத்தாளர்களுக்கு ஏற்ப பல இடங்களில் மாறுபட்டு வரும். எனினும் எழுத்தாளுமைத் திறன் மக்களிடம் சென்றடைய வேண்டும். அத்தகைய நிலையை 'அய்க்கண்' உறுதி செய்திருக்கிறார்.

புதினத்தின் வழியாகத் தனி மனிதனைப் பற்றியும், சமூகப் பொது நிகழ்வுகளைப் பற்றியும், எளிமையாகப் பல்வேறு வகையான நடை உத்தி முறைகளைக் கையாண்டு வருகிறார்.

அவரின் தனித்திறம் மிக்க எழுத்து சிறந்த ஆளுகைக்கு உட்பட்டதாய் உள்ளது.

## சான்றெண் விளக்கம்

1. இரா.தமிழரசி, தமிழ் இலக்கிய உத்திகள் ஓர் அறிமுகம், ப.44
2. ச.வே.சுப்பிரமணியன, இளங்கோவடிகள் இலக்கிய உத்திகள், ப.6.
3. மா.இராமலிங்கம், நாவல் இலக்கியம், ப.16.
4. மா.இராமலிங்கம், நாவல் இலக்கியம், பக்.44–45.
5. அருள்ராஜ்(ப.ஆ.) தமிழியம், ப. 362.
6. அருள்ராஜ்(ப.ஆ.) தமிழியம், ப.362.
7. பூவண்ணன, கல்கியின் வரலாற்று நாவல்கள், ப.203.
8. ஞான மூர்த்தி தா.ஏ, இலக்கிய திறனாய்வியல், ப.183.
9. இராமலிங்கம்.மா, நாவல் இலக்கியம், பக். 160–161.
10. அருள்ராஜ்(ப.ஆ.) தமிழியம், ப.364.
11. ஞானமூர்த்தி.தா.ஏ, இலக்கியத் திறனாய்வியல், ப.185.
12. நீதிவாணன்.ஜெ, நடையியல், ப.
13. ஞானமூர்த்தி.தா.ஏ, இலக்கியத் திறனாய்வியல், ப.185.
14. அருள்ராஜ்(ப.ஆ.) தமிழியம், ப.365.
15. இராமலிங்கம்.மா, நாவல் இலக்கியம், ப.144.
16. அணிந்துரை, அய்க்கண், உயிர், ப.2.
17. இரா.மோகன், கு.ப.ராஜகோபாலன் சிறுகதைகள், ப.157
18. அ.கி.பரந்தாமனார், நல்ல தமிழ் வேண்டுமா?, ப.324.
19. அய்க்கண், மறுபக்கம், ப.13.
20. அய்க்கண், மறுபக்கம், ப.32.
21. அய்க்கண், ஜல்லிக்கட்டில் பசுமாடுகள், ப.95.
22. அய்க்கண், நெஞ்சில் ஓர் நெருஞ்சி, ப.86.
23. அய்க்கண், தீர்க்க சுமங்கலி, ப.63.
24. அய்க்கண், உயிர், ப.133.
25. அய்க்கண், கரையை தேடும் அலைகள், ப.65.

26. அய்க்கண், நெஞ்சில் ஓர் நெருஞ்சி, ப.30.

27. அய்க்கண், விடிவெள்ளி, ப.152.

28. அய்க்கண், அவனுக்காக மழை பெய்கிறது, ப.9,

29. அய்க்கண், அவனுக்காக மழை பெய்கிறது, ப.66,

30. சு.சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப.189.

31. அய்க்கண், தீர்க்க சுமங்கலி, ப.27,

32. என்னுரை, அய்க்கண், விடிவெள்ளி, ப.7,

33. அய்க்கண், விடிவெள்ளி, ப.11,

34. அய்க்கண், விடிவெள்ளி, ப.96,

35. இராமலிங்கம்.மா, புதிய உரைநடை, ப.19,

36. அய்க்கண், மறுபக்கம், ப.47,

37. அய்க்கண், மறுபக்கம், ப.52,

38. அய்க்கண், மறுபக்கம், ப.53,

39. அய்க்கண், மறுபக்கம், ப.92,

40. அய்க்கண், நெஞ்சில் ஓர் நெருஞ்சி, ப.231,

41. அய்க்கண், தீர்க்க சுமங்கலி, ப.13,

42. அய்க்கண், தீர்க்க சுமங்கலி, ப.14,

43. இரா.மோகன், டாக்டர் மு.வ.வின் நாவல்கள், பக்.38–39.

44. அய்க்கண், விடிவெள்ளி, ப.153,

45. அய்க்கண், மறுபக்கம், ப.25,

46. அய்க்கண், உயிர், ப.130,

47. அய்க்கண், இரண்டாவது ஆகஸ்ட 15, ப.9,

48. அய்க்கண், நிழலில் நிற்கும் நிஜங்கள், ப.12,

49. மா.இராமலிங்கம், நாவல இலக்கியம, ப.155.

50. அய்க்கண், விடிவெள்ளி, ப.14,

51. அய்க்கண், இரண்டாவது ஆகஸ்ட 15, ப.23,

52. இந்திரா மணியன், இருபதாம் நூற்றாண்டிற்கான தமிழ் இலக்கணம், ப.83.

53. அய்க்கண், வெள்ளைத்தாமரை. ப.76.

54. அய்க்கண், விடிவெள்ளி, ப.33.

55. அய்க்கண், விடிவெள்ளி, ப.51.

56. அய்க்கண், உயிர், ப.21.

57. அய்க்கண், ப.32.

58. அய்க்கண், உயிர், ப.32.

59. தண்டியாசிரியர், தண்டியலங்காரம், நூற்பா.31.

60. அய்க்கண், விடிவெள்ளி, ப.17.

61. அய்க்கண், விடிவெள்ளி, ப.32.

62. அய்க்கண், விடிவெள்ளி, ப. 125.

63. அய்க்கண், மறுபக்கம், ப.64.

64. அய்க்கண், மறுபக்கம். ப.72.

65. அய்க்கண், வெள்ளைத்தாமரை, ப.101.

66. அய்க்கண், வெள்ளைத்தாமரை, ப.111.

67. அய்க்கண், வெள்ளைத்தாமரை, ப.113.

68. அய்க்கண், வெள்ளைத்தாமரை, ப.133.

69. அய்க்கண், வெள்ளைத்தாமரை, ப.167.

70. அய்க்கண். விடிவெள்ளி, ப.175.

71. அய்க்கண், மறுபக்கம், ப.19.

72. அய்க்கண், உயிர், ப.64.

73. அ.மா.பரிமணம் (ப.ஆ), வாழ்வியற் களஞ்சியம் தொகுதி–12, ப.206.

74. அய்க்கண், உயிர், ப.93.

75. அய்க்கண், நிழலில் நிற்கும் நிஜங்கள், ப.186.

76. அய்க்கண், இரண்டாவது ஆகஸ்ட் 15, ப.105.

77. அய்க்கண், இரண்டாவது ஆகஸ்ட் 15, ப.106.

78. அய்க்கண், விடிவெள்ளி, ப.23.

79. அய்க்கண், விடிவெள்ளி, ப.26.

80. அய்க்கண், விடிவெள்ளி, ப.40.

81. அய்க்கண், விடிவெள்ளி, ப.208.

82. அய்க்கண், விடிவெள்ளி, ப.234.

83. அய்க்கண், பெண் என்பது வெறும் உடம்பு அல்ல, ப.171.

84. அய்க்கண், விடிவெள்ளி, ப.86.

85. அய்க்கண், விடிவெள்ளி, ப.114.

86. அய்க்கண், வெள்ளைத்தாமரை, ப.8.

87. அய்க்கண், வயல், ப.195.

88. அய்க்கண், இரண்டாவது ஆகஸ்ட் 15, ப.195.

89. அயக்கண், மறுபக்கம், ப.14–15.

90. அய்க்கண், மாபெரும் நாடு மாபெரும் மக்கள், ப.110.

91. அய்க்கண், இரண்டாவது ஆகஸ்ட் 15, ப.7.

92. அய்க்கண், இரண்டாவது ஆகஸ்ட் 15, ப.8.

93. அய்க்கண், வெள்ளைத்தாமரை, பக் 14–15.

94. அய்க்கண், இரண்டாவது ஆகஸ்ட் 15, ப.145.

# முடிவுரை

ஆங்கிலேயர்கள் இந்தியாவிற்குக் குறிப்பாகத் தமிழகத்திற்கு, வந்ததன் விளைவாக நம் நாட்டிற்குக் கிடைத்த நன்மைகளுள் ஒன்று புது இலக்கிய வடிவங்களாகும்.

தற்கால இலக்கிய வடிவங்களுள் தமிழக்காப்பியத்தைப் போன்று புதினம் எனும் நாவல் வடிவம் மிகுதியானப் பாத்திரங்கள், கிளைக்கதைகள், வருணணை, உத்திகள் மூலமாகச் சமுதாயத்தை விரிவாகவும், தெளிவாகவும் புலப்படுத்தும் ஆற்றல் பெற்றுள்ளது.

இவ்வகைப் புதினப் படைப்பாளர்களுள் சமூக, வட்டார, நிகழ்வுகளைக் கொண்டு புதினம் படைக்கும் ஆற்றல் கைவரப் பெற்றவர் பேரா.அய்க்கண் அவர்கள் ஆவார்.

இவர் சிவகங்கை மாவட்டம், காரைக்குடிக்கு அருகிலுள்ள கண்டனூரில் 1935இல் எளிய விவசாயக் குடும்பத்தில் பிறந்தவர்; காரைக்குடியில் வாழ்ந்து வருபவர்.

தமிழ் முதுகலை மற்றும் முனைவர் பட்டங்கள் பெற்று; திருப்பத்தூர் ஆறுமுகம் பிள்ளை சீதையம்மாள் கல்லூரியில் பேராசிரியராகப் பணிபுரிந்து ஓய்வு பெற்றவர்.

இருபதுக்கும் மேற்பட்ட புதினங்கள், சிறுகதைகள், நாடகங்கள் எனப் பல படைப்புகளைப் படைத்தவர்.

பன்னாட்டு, தேசிய, தமிழக அளவில் பல்வேறு விருதுகள், பரிசுகளையும் தம் படைப்புகளுக்காகப் பெற்றவர்.

இந்தியத்தேசியம், தமிழத்தேசியம், தமிழ்மொழி, தமிழ் மக்கள் நலனில் அக்கறை கொண்டு தம் படைப்புகளை உருவாக்கி இருக்கிறார்.

நாட்டுப் பற்றும், மொழிப்பற்றும், சிற்றூர் மக்களின்பால் ஈடுபாடும், விளிம்புநிலை மக்களின் மேம்பாட்டிற்காகவும் உயர்ந்த சிந்தனைகளைத் தம்படைப்புகளில் பதிவு செய்து இருப்பவர்.

உறவுகள், குடும்பம், மனிதநேயம், மனித உரிமைகள் என மனித மேம்பாட்டுச் சிந்தனைகளைப் புதினங்களில் வெளிப்படுத்தி இருக்கிறார்.

வரதட்சணை ஒழிப்பு, விதவைத் திருமணம், பெண்ணுரிமை, பெண்ணின் பெருமை, மகளிர் கல்வி, பொருளாதார மேம்பாடு என பெண்களின் நிலைகளையும், பிரச்சினைகளையும், அவர்கள் மேம்படுவதற்குரிய வழிமுறைகளையும் புதினங்களில் குறிப்பிட்டுள்ளார். பரத்தமை, ஒழுக்க நெறிகள் குறித்தும் கருத்துரைத்துள்ளார்.

இயற்கை, சுற்றுச்சூழல், அஃறிணைகளின் தேவைகள் குறித்தும் புதினங்களில் வலியுறுத்தியிருக்கிறார்.

தமிழகத்தில் நிலவும் சாதியங்கள், சாதிய படிநிலைகள், அதன் வீச்சு, அவற்றின் விளைவுகளைக் குறிப்பிட்டு அனைத்துச் சமூகத்தினரும் அமைதியாகவும், ஒற்றுமையாகவும் வாழ வழிவகை சுட்டியிருக்கிறார்.

தமிழ் மரபு வழிபட்ட காதல், கற்பு, மற்றும் அகக்கருத்துக்கள் பற்றியும் புதினங்களில் ஆங்காங்கே எடுத்துக் காட்டியுள்ளார்.

படைப்பாளர்கள் கருத்துப்புலப்பாட்டிற்குப் பல்வேறு உத்திகளைக் கையாள்வார்கள். எழுத்தாளர் அய்க்கண் அவர்களும் வருணனை, வட்டார வழக்கு, உரையாடல், பிறமொழிச் சொற்கள், ஒலிக்குறிப்புச் சொற்கள், உவமை, உருவகம், பழமொழி, பிற இலக்கிய மேற்கோள்கள், புராண,

நாட்டுப்புற இலக்கியங்கள், நீதிக்கருத்துகள், அறிவியல் கருத்துக்கள் என பல உத்திகளைக் கையாண்டுயிருக்கிறார்.

இலக்கியத்தின் முதுகெழும்பு பாத்திரங்களாகும். இப்பாத்திரங்களின் உணர்ச்சிகளே கருவாக (Theme) அமைகின்றன. அய்க்கண் அவர்கள் தமது புதினங்களில் சமுதாயப் படிநிலைகள், பண்புகள் அடிப்படையில் பாத்திரங்களை வார்த்துள்ளார்.

புதினங்களில் காணலாகும் ஆண், பெண் பாத்திரங்கள் குறிக்கோள் மாந்தர்களாகவும், ஆளுமைப் பண்புடையவர்களாகவும், மரபு வழிப்பட்டவர்களாகவும், ஒழுக்க நெறி சார்ந்தவர்களாகவும் அமைந்துள்ளனர். ஆண்களுக்கு மேலாக பெண் பாத்திரங்களை வார்த்துள்ளது குறிப்பிடத்தக்கது.

தமிழ்க் கலாச்சாரம், பண்பாடு போற்றும் அய்க்கண் அவர்கள் ஆய்வுக்குரிய புதினங்களில் தமிழ் மக்களின் பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், வழிபாடுகள், திருமணம், பிறப்பு, இறப்பு, பெரியவர்களை மதித்தல், உறவுகளைப் பேணுதல், விருந்தோம்பல், ஒருவனுக்கு ஒருத்தி போன்ற தமிழ்ப் பண்பாட்டு மரபுகளை ஆங்காங்கே பதிவு செய்திருக்கிறார்.

தமிழ் மக்களிடையே காணப்படும் மூட நம்பிக்கைகள், சகுனம் பார்த்தல், உடல்நலம் பேணும் கலைகள், புழங்கு பொருட்கள், சிற்றூர் வழக்கு மன்ற அமைப்புகள், நாட்டுப்புற மருத்துவ முறைகள் போன்றவற்றையும் பண்பாட்டுப் பதிவுகளாகக் காண முடிகிறது.

பேராசிரியர் அய்க்கண் அவர்கள் தமது இருபது புதினங்களின் வழி மரபு வழிப்பட்ட தமிழச் சமுதாயத்தின் அனைத்துக் கூறுகளையும் முன்னெடுத்து இருப்பதை இவ்வாய்வின் வழி தெளிவுப்படுத்தப்பட்டுள்ளது.

## மேலாய்வுக் களங்கள்

பன்முகத் தன்மை கொண்ட அய்க்கண் அவர்களின் படைப்புகள் ஏராளம் இவருடைய புதினங்கள், சிறுகதைகள் குறித்த தனித்த ஆய்வுகள் ஆய்வியல் நிறைஞர், முனைவர்பட்ட ஆய்வு நிலைகளில் வந்துள்ளன. இருப்பினும் கீழ்க்கண்ட தலைப்புகளில் ஆய்வு மேற்கொள்ளலாம்.

1. அய்க்கண்ணின் பண்பாட்டுப் பதிவுகள்
2. அய்க்கண்ணின் பாத்திரப் படைப்புகள்
3. அய்க்கண்ணின் படைப்புகளில் பெண்கள் நிலை
4. அய்க்கண்ணின் படைப்புகளில் வட்டாரத் தன்மைகள்

# துணைநூற் பட்டியல்

## முதன்மைச் சான்றாதாரங்கள்

1. அய்க்கண், உயிர், அருண்மல்லி நூலகம், 3, ஆசிரியர் குடியிருப்பு, ஆறுமுக நகர், திருப்பத்தூர், இராமநாதபுரம், மு.ப.1972.

2. அய்க்கண், மாபெரும் நாடு மாபெரும் மக்கள், அருண்மல்லி நூலகம், ஆறுமுக நகர், திருப்பத்தூர்–11. மு.ப.1972.

3. அய்க்கண், வயல், தமிழ்மணம், தியாகராய நகர், சென்னை–17. மு.ப.1979.

4. அய்க்கண், இதோ ஒரு சாவித்திரி, பழம் நீ பதிப்பகம், மேலபட்டமார் தெரு, மதுரை–01, மு.ப.1985.

5. அய்க்கண், நெஞ்சில் நெருடும் நினைவுகள், பழம் நீ பதிப்பகம், மேலப்பட்டார் தெரு, மதுரை. மு.ப.1985.

6. அய்க்கண், கரையைத் தேடும் அலைகள், பழம் நீ பதிப்பகம், 20, மேலப்பட்டமார் தெரு, மதுரை. மு.ப.1985.

7. அய்க்கண், என் மகன், வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை, மு.ப.1989.

8. அய்க்கண், விடை தவறிய கணக்குகள், வானதி பதிப்பகம், தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை–17. மு.ப.1991.

9. அய்க்கண், மண்ணின் மலர்கள், வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை–17. மு.ப.1991.

10. அய்க்கண், ஜல்லிக்கட்டில் பசுமாடுகள், தமிழாலயம், பொன்னுசாமி நாயக்கன் தெரு, இராயப்பேட்டை, சென்னை–14. மு.ப.1993.

11. அய்க்கண், தீர்க்க சுமங்கலி, கார்த்திக் பதிப்பகம், 36ஏ/8, கோவிந்தன் சாலை, மேற்கு மாம்பலம், சென்னை–33. மு.ப.1993.

12. அய்க்கண், ஒரு பெண் மனைவியாகிறாள், சுவாதி பதிப்பகம், 13, ரெட்டித் தெரு, ஆலந்தூர், சென்னை. மு.ப.1994.

13. அய்க்கண், வெள்ளைத்தாமரை, சுவாதி பதிப்பகம், 13, ரெட்டி தெரு, ஆலந்தூர், சென்னை–16. மு.ப.1994.

14. அய்க்கண், நிழலில் நிற்கும் நிஜங்கள், சூடாமணி பிரசுரம், 36/8, கோவிந்தன் சாலை, மேற்கு மாம்பலம், சென்னை–33. மு.ப.1995.

15. அய்க்கண், மறுபக்கம், மதி நிலையம், 45, செல்லப் பிள்ளையார் கோயில், இராயப்பேட்டை, சென்னை–14. மு.ப.1995.

16. அய்க்கண், நெஞ்சில் ஓர் நெருஞ்சி, மதி நிலையம், 45, செல்லப் பிள்ளையார் கோயில் தெரு, இராயப்பேட்டை, சென்னை–14. மு.ப.1995.

17. அய்க்கண், பெண் என்பது உடம்பு அல்ல, சூடாமணி பிரசுரம், 36ஏ/8, கோவிந்தன் சாலை, மேற்கு மாம்பலம், சென்னை–33. மு.ப.1995.

18. அய்க்கண், விடிவெள்ளி, மணிவாசகர் பதிப்பகம், சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை–8, மு.ப.2004.

19. அய்க்கண், அவனுக்காக மழை பெய்கிறது, மணிவாசகர் பதிப்பகம், 31 சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை–08. மு.ப.2004

20. அய்க்கண், இரண்டாவது ஆகஸ்ட் 15, இலக்கிய பீடம் பதிப்பகம், 3, ஜயசங்கர் தெரு, மேற்கு மாம்பலம், சென்னை–33, மு.ப.2005.

## துணைமைச் சான்றாதாரங்கள்


1. அகிலன், கதைக்கலை, பாரி புத்தகப்பண்ணை, சென்னை, 1981.
2. அருள்ராஜ், வே.சா., (மு.ப.ஆ), தமிழியம், நியூ விஷன் வெளியீடு, 1/211, விஷன் காட்டேஜ், எல்.ஜே.நகர், தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர்–10, மு.ப.2011.
3. அறவாணன், க.பா., மரபு வழிபாடு, திராவிட ஆப்பிரிக்கா ஒப்பீடு, பாரி நிலையம், சென்னை–1, 1984.
4. அறவாணன், க.ப., தமிழர் மேல் நிகழ்ந்த பண்பாட்டுப் படையெடுப்புகள், தமிழ்க்கோட்டம், சென்னை, மு.ப.1987.
5. இந்திரா மணியன், 20ஆம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கணம், சங்கப் பதிப்பகம், சென்னை, 1999.
6. இராசமாணிக்கனார், மா., (உ.ஆ.), கலித்தொகை, 1/72, பிராட்வே, வள்ளுவர் பண்ணை, சென்னை–1, மு.ப.1958.
7. இராமலிங்கம், மா., நாவல் இலக்கியம், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, மு.ப.1976.
8. இளம்பூரணர், (உ.ஆ.), தொல்காப்பியம், திருநெல்வேலி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிட்., 522, டி.டி.கே.சாலை, சென்னை–18, மு.ப.2001.
9. ஈசுவரப்பிள்ளை, தா., (மு.ப.ஆ), சுந்தர ராமசாமியின் படைப்பிலக்கியம் பன்முகம் ஆய்வு, தமிழ்ப் பல்கலைக்கழக ஆய்வு மன்றம், தமிழ்ப் பல்கலைக்கழகம் தஞ்சாவூர். மு.ப.2007.
10. கழகத்தமிழகராதி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், பாளையங்கோட்டை, மு.ப. 1962

11. காந்தி, க., தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், உலக தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை–13. மு.ப.2003.

12. சக்திவேல், சு., நாட்டுப்புறவியல், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 2ஆம் பதிப்பு, 1983.

13. சச்சிதானந்தன், வை., மேலை இலக்கியச் சொல்லகராதி, மாக்மில்லன் இந்தியா லிமிடெட், சென்னை, 1983.

14. சாமிநாத ஐயர், உ.வே., (உ.ஆ), புறநானூறு, கழக வெளியீடு, சென்னை. மு.ப.1977.

15. சாவித்திரி, எஸ்., சமூகவியல், மோகன் பதிப்பகம், சென்னை, மு.ப.1987.

16. சுப்ரமணியன், ச.வே., இளங்கோவின் இலக்கிய உத்தி, உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை, 1984.

17. சுப்பிரமணியன், ச.வே., தமிழ் இலக்கிய வரலாறு, மணிவாசகர் பதிப்பகம், 8/7, சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை–108. மு.ப.1999.

18. செல்வம், வி.டி., தமிழக வரலாறும், பண்பாடும், மதுரை பப்ளிஷிங் ஹவுஸ், மதுரை, மு.ப.1976.

19. ஞானசம்பந்தன், அ.ச., இலக்கிய கலை, திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், 154, டி.டி.கே. சாலை, சென்னை–18. மு.ப.1999.

20. ஞானமூர்த்தி, இலக்கியத்திறனாய்வில், ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, 1986.

21. ஞானமூர்த்தி, தா.ஏ., இலக்கியத் திறனாய்வியல், மணிவாசகர் பதிப்பகம், சென்னை. மு.ப.1976.

22. தண்டாயுதம், இரா., தற்கால தமிழ் இலக்கியம், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை. மு.ப.1983.

23. தண்டாயுதம், இரா., சமூக நாவல்கள், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை. இ.ப.1988.

24. தண்டாயுதம், இரா., நாவல்வளம், தமிழ் புத்தகாலயம், 57, பைகிராப்ட்ஸ் ரோடு, சென்னை, 1982.

25. தண்டியாசிரியர், தண்டியலங்காரம், திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1982.

26. தனராசன், நா., பிரபஞ்சனின் புதினக் கலை, காந்தி பதிப்பகம், 1/86, நாட்டுச்சாலை, பட்டுக்கோட்டை, தஞ்சாவூர், மு.ப.2004.

27. திருநாவுக்கரசு, க.த., மு.வ. படைப்பிலக்கியம், தமிழ்க்கடல் பதிப்பகம், சென்னை, 1972.

28. திலகவதி, க., சங்க கால மகளிர் வாழ்வியல், இறையருள் பதிப்பகம், 4/371, முதல் தெரு, சக்தி நகர், காட்டூர், திருச்சி–19, மு.ப.2001.

29. துரைசாமிப்பிள்ளை, ஔவை., செந்தமிழ்த் தொகுதி–51 (சிலப்பதிகாரமும் இயற்கைக்கு அப்பாற்பட்ட நிகழ்ச்சிகளும்) மு.ப.1955.

30. நாகராஜன், வி., (உ.ஆ) குறுந்தொகை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) சிட்கோ இண்டஸ்ட்ரிஸ் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை–98. மு.ப.1983.

31. நாராயணன்,ஜெ.,(த.ஆ.) சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள், தமிழ் வெளியீட்டுக் கழகம், சென்னை. மு.ப.1964.

32. நீதிவாணன், ஜெ., நடையியல், மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம். மு.ப.1983.

33. பக்தவத்சல பாரதி, சி., பண்பாட்டு மானிடவியல், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1990.

34. பரிமணம், வாழ்வியற் களஞ்சியம், தொகுதி XII, தஞ்சாவூர் பல்கலைக்கழகம் வெளியீடு, 1982.

35. பரிமேலழகர், (உ.ஆ), திருக்குறள், பூம்புகார் பதிப்பகம், 15, மன்னார்சாமி கோயில் தெரு, இராயபுரம், சென்னை–13. மு.ப.

36. பாலசுப்ரமணியன், இரா., நாவல் கதையியல், உலகத் தமிழராய்ச்சி நிறுவனம், சென்னை, 2004

37. பாலுசாமி, ந.,(மு.ப.ஆ), வாழ்வியற் களஞ்சியம், தமிழ்ப்பல்கலைக்கழம், தஞ்சாவூர். மு.ப.1991.

38.பால்சந்திரமோகன், க.சோ.,(மு.ப.ஆ)மலரும் முள்ளும், ஸ்ரீ நிதி ஆப்செட் பிரிண்டர்ஸ் 40, அல்லிமால் தெரு, திருச்சி–8, மு.ப.2007.

39. பாரதிதாசன், இசையமுது, பாரிநிலையம், சென்னை, மு.ப. 1978.

40. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், மணிவாசகர் பதிப்பகம், 31, சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை–18. மு.ப.1998.

41. பிரேமா, இரா., பெண்ணிய அணுகுமுறை, தமிழ் புத்தகாலயம், சென்னை–17, மு.ப. 2000.

42. பெரிய சாமித்தூரன், ம.ப., (மு.ப.ஆ) கலைக்களஞ்சியம், தொகுதி–7, (பருகூர்–பௌதிகம்), தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை. மு.ப.1960.

43. மறைமலை, சி.இ., புதுக்கவிதை முப்பெரும் உத்திகள், திருமகள் நிலையம், சென்னை, 1986.

44. மறைமலை, சி.இ., இலக்கியமும் சமூகவியலும், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1991.

45. முத்தையா, கரு., செயகாந்தன் நாவல்களில், பாத்திரப்படைப்பு, முத்து மீனாள் பதிப்பகம், தேவக்கோட்டை, சிவகங்கை(மா). மு.ப.1980.

46. முத்துராமன், இலக்கிய வடிவங்கள், மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், மு.ப. 1984

47. மெய்யப்பன், ச.தமிழவேள்., (ப.ஆ), பாரதியாரின் குயில்பாட்டு, முல்லை நிலையம், 9, பாரதிநகர் முதல் தெரு, தி.நகர், சென்னை–17. மு.ப.1998.

48. மோகன், மு.வ.வின். நாவல்கள், மணிவாசகர் நூலகம், சிதம்பரம். மு.ப.1972.

49. மோகன், இரா., கு.பா.இராஜகோபாலன் சிறுகதைகள் பண்ணை, சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை, 1978.

50. விமலானந்தம், மது.ச., தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம், தொகுதி–1, ஐந்திணைப் பதிப்பகம், சென்னை. மு.ப.1987.

51. வீராசாமி, தா.வே., தமிழ்ச் சமூக நாவல்கள், தமிழ்ப்பதிப்பகம், சென்னை, 1998.

52. வைத்தியலிங்கம், செ., தமிழர் பண்பாட்டு வரலாறு, பாகம்–1, அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு, அண்ணாமலை நகர், சிதம்பரம். மு.ப.1991.

53. ராமநாதன், அரு., நாட்டுப்புறப்பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்வியல், மணிவாசகம் பதிப்பகம், சிதம்பரம், 1982.

## ஆங்கில நூல்கள்

1. Elizabeth Fisher, Women's sexual evolution and the shaping of society, Archor press, Neyork, F.E.1979.

2. Forester.EM. Aspects of the Novel, Penquin Books Ltd., England. F.E.1970.

3. Hary shaw, S., Concise Dictionary of Literary Terms.

4. John Hospers, Art Philosophy of "The New encyclopaedia Britanica, Chicago. F.E.1973.

5. Maren Edwood, Characters make your story., (*இரா. மோகன் அவர்களின் 'மு.வ.வின் நாவல்கள் நூலில் மேற்கோளாக வந்துள்ளது. ப.58, (மு.ப.1972*)

6. Northrop Frye, The Anatomy of Critism, The Nineth Century Novels, Minemann Educational Books Ltd., London. F.E.1972.

7. The Reader's Digest Great Encyclopaedic Dictionary, Vol.III. The Reader's Digest Association, London, S.E.1972.

## ஆய்வேடுகள்

1. சைலஜா, பெ., மீசை சிறுகதைகள் உணர்த்தும் சமுதாயம், எஃம்பில் ஆய்வேடு, அய்யநாடார் ஜானகி அம்மாள் கல்லூரி (தன்னாட்சி), சிவகாசி, மே.2008.

2. மஞ்சுளவல்லி, சிவசங்கரி நாவல்களில் குடும்ப உறவுகள், முனைவர் பட்ட ஆய்வேடு, தமிழ்த்துறை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி, அக்டோபர், 2001.

3. ரீட்டா ராஜகுமாரி, பாலகுமாரனின் இருநாவல்கள் பன்முகம் பார்வை, எஃம்பில் ஆய்வேடு, அய்யநாடார் ஜானகி அம்மாள் கல்லூரி (தன்னாட்சி), சிவகாசி, மே.2008.

## பேராசிரியர் முனைவர் அய்க்கண் அவர்களிடம்
## நேர்காணலின்போது கேட்கப்பட்ட வினாக்கள்
## நாள் : 18.10.2011

1. தங்கள் இயற்பெயர் யாது? தற்பொழுது வழக்கில் இருக்கும் பெயரின் சிறப்பு யாது?
2. தங்களுக்கு வேறு ஏதேனும் புனைப்பெயர் உண்டா?
3. தாங்கள் பிறந்த ஆண்டு, வயது, கல்வித்தகுதி பற்றிக் கூறுங்களேன்.
4. இளமைக்கல்வி, குடும்பச் சூழல் பற்றிக்கூறுக.
5. கல்லூரி வாழ்க்கை குறித்துக் கூறுக.
6. தங்கள் திருமண வாழ்க்கை குறித்துக் கூறுக.
7. தங்கள் படைப்பாற்றலின் தூண்டுகோள் எது?
8. முதல் படைப்பின் போது, தாங்கள் பெற்ற அனுபவம் யாது?
9. தங்களை மிகவும் கவர்ந்த படைப்பு எது?
10. தங்களுடைய புதினங்களுக்குத் தாங்கள் அமைத்துக் கொண்ட களம் எது?.
11. தங்கள் படைப்புகளில் புதினம் எழுதுவதற்குரிய நோக்கம், மற்றும் காரணங்கள் யாவை?
12. தங்கள் புதினங்களுக்குரிய, கரு என்பது தன் அனுபவமா? கற்பனையா? பாதிப்பா?
13. புதினங்களுக்குத் தலைப்புக்கள் கருவின் அடிப்படையில் தருகிறீர்களா? அல்லது தாங்களாகவே பெயர் வைக்கின்றீர்களா?
14. தங்கள் புதினங்களின் கதாப்பாத்திரங்கள் குறித்து விளக்கம் தருக.

15. ஆண் பாத்திரங்கள், பெண் பாத்திரங்கள் இவர்களில் யாருக்கு முன்னுரிமை தந்துள்ளீர்கள்?

16. அதற்கு, காரணம் யாது?

17. தங்கள் புதினங்கள் தாங்கள் வாழும் சமுதாயத்தைக் காட்டுவனவாக உள்ளதே அதற்குரிய சிறப்பான காரணம் யாது?

18. தங்கள் படைப்புகளைப் படைப்பதற்கு, தங்கள் பேராசிரியர் பணி, வாய்ப்பாக அமைந்ததா? அல்லது இடையூறாக இருந்ததா?

19. தங்கள் படைப்புகளில் அறக்கருத்துக்கள் மலிந்து காணப்படுகிறதே? சமுதாயத்திற்கு நல்ல செய்திகள் சொல்ல வேண்டும் என்ற நோக்கமா? அல்லது வேறு ஏதேனும் காரணம் உண்டா?

20. தங்கள் படைப்புகளில் பிறமொழிக் கலப்புகள் அதிகம் உள்ளதே, காரணம் யாது? அல்லது பிறமொழி மீது உள்ள ஆர்வமா?

21. தற்பொழுது தாங்கள் படைப்புகளைப் படைத்துக் கொண்டிருக்கிறீர்களா?

22. தாங்கள் தலைமைப் பொறுப்பேற்றுள்ள நிறுவனங்கள், அமைப்புகள் பற்றி விளக்கம் தருக.

23. தாங்கள் பெற்ற பட்டங்களும், விருதுகளும், பரிசுகளும் பற்றிக் கூறுக.

24. தங்கள் வாழ்க்கைத் துணைவியார் மறைவுக்குப்பின், தங்கள் படைப்புக்கள் பற்றி விளக்கம் தருக.

25. தங்கள் குடும்பம் பற்றிக் கூறுக.

26. இன்றைய இளைஞர்கள், மகளிர்கள் பற்றித் தங்களின் மதிப்பீடு யாது?

27. இளைய சமுதாயத்திற்குத் தாங்கள் கூறும் கருத்து என்ன?

28.தற்பொழுது புதினங்கள் அதிகம் வெளியிடுவது இல்லையே ஏன்?

29.இன்றைய கல்வி உலகம் எப்படி இருக்கிறது?

30.அரசியல் குறித்துத் தங்கள் கருத்து என்ன?

31. தமிழ்ச்செம்மொழித் தகுதி பற்றித் தங்கள் கருத்து என்ன?

32.தமிழ்ச் சமூகத்திற்கு நீங்கள் நாடும் நன்மைகள் எவை?

33.இன்றைய புதினாசிரியர்கள் பற்றித் தங்கள் கருத்து என்ன?

34.தங்களின் படைப்புகளுக்கு முன்னோடி யார்? யாரை வழி காட்டியாக ஏற்றுள்ளீர்கள்?

35.தங்கள் படைப்புகளில் உங்களை மிகவும் கவர்ந்த பாத்திரம் எது? நாவல் எது?

36.தற்பொழுது தாங்கள் ஆற்றிவரும் சமுதாயப் பணிகள் குறித்து விளக்கம் தருக.

1. என் இயற்பெயர் அய்யாக்கண்ணு. எழுத்துலகில் நுழையும்போது, பெயர் கர்நாடகமாக இருக்க வேண்டாமே என்று கருதினேன். அதற்காகச் சம்பந்தம் இல்லாத பெயர் சூட்டிக் கொள்ளவும் விரும்பவில்லை. ஆகவே அய்யாக்கண்ணு என்ற நீண்ட பெயரிலேயே சில எழுத்துக்களை நீக்கிவிட்டு 'அய்க்கண்' என்று சுருக்கிக்கொண்டேன். அந்தப் பெயர் எனக்கு தெரிந்த இரண்டே இரண்டு மொழிகளில் அமைந்தது எதிர்பாராத வியப்பு; அய் 'Eye' என்றால் தமிழில் 'கண்'தானே? 'Eye'க்கண், ஆங்கிலமும் அரைகுறை; தமிழிலும் அரைகுறை என்று வேண்டாதவர்கள் சொல்ல நல்ல வாய்ப்பும் ஏற்பட்டது.

2. 1970–80களில் தமிழகத்தின் ஏறத்தாழ எல்லா பிரபல பத்திரிக்கைகளிலும் அடிக்கடி எழுதி வந்ததால், எனக்குத் 'திருஷ்டி' பட்டுவிடும் என்று எழுத்தாளர் அமரர் 'சாவி' எண்ணி, இன்னொரு புனைபெயர் வைத்துக்கொள்ளச் சொன்னார். அவருக்காக 'நந்தினி நாராயண்' என்று வைத்துக்கொண்டேன். இந்தப் பெயரில் அதிகம் எழுதவில்லை.

3. 1.9.1935, வயது நீங்களே கணக்கிட்டுக் கொள்ளுங்கள். படித்தவை எம்.ஏ.,(தமிழ்), பி.டி.(ஆசிரியர் பட்டம்)

4. பிறந்த போது இருந்த செல்வவசதி, நினைவு தெரிந்த போது இல்லை. சிறுவயதிலிருந்தே வறுமைதான் நினைவிருக்கிறது. குடும்பச்சூழல், வேளாண்மைக் குடும்பம்தான். படிப்பு, கல்வி, பட்டம், உத்தியோகங்கள், எல்லாம், வெகு தூரம், பள்ளிப் படிப்புக்கே ஊர்விட்டு ஊர் 6, 7 கிலோ மீட்டர் நடந்து போய்ப் படித்தேன். 'படிக்க வேண்டாம்' என்பதே என் குடும்பத்தாரின் தொடர்ந்த 'அறிவுரை'

5. கல்லூரியில் சேர வெறும் 100 ரூபாய் (அந்தக் காலத்தைச் சொல்கிறேன்) இல்லாமல் வெளியூர் சென்று என் உறவினரிடம் கடன் பெற்று, பெற்றோரின் பெரும் எதிர்ப்புக்கிடையே, கல்லூரியில் சேர்ந்தேன். கல்லூரியில் எங்கோ என்னைவிட வசதியானவர்கள், பணக்காரர்களாகக் காட்சியளித்தார்கள். வசதியில் மட்டுமல்லாமல் தோற்றத்திலும் என் ஏழ்மை பளிச்சிட்டது. என்றாலும், வகுப்புப்பாடங்களில் முதல் தர மாணவனாக இருந்த 'கல்விச் செருக்கு' என் கல்லூரி வாழ்க்கையில் முத்திரை பதிக்கத் தவறவில்லை. தமிழ் வகுப்பிலேயே முதல் கட்டுரையிலேயே (அந்தக் காலத்தில் தமிழ் வகுப்பில் வாரந்தோறும் கட்டுரை, மொழி பெயர்ப்புப் பயிற்சிகள் உண்டு). கல்லூரியில் ஆசிரியர் மாணவர் ஆகியோரின் ஆங்கில மோகத்தையும், நாகரிகத்தையும் கண்டித்துக் காரசாரமாக எழுதிவிட்டேன். அதைப் படித்த ஆசிரியர் திரு.உ.பாலசுப்பிரமணியன் அவர்கள், அந்தக் கட்டுரையை எல்லோருக்கும் வாசித்துக் காட்டிவிட்டு, 'அவர்களது ஒட்டு மொத்த வெறுப்புக்கு நான் ஆளாகிவிடக் கூடாது' என்ற நல்ல எண்ணத்தில் என் பெயரை மறைத்து விட்டார். எனினும் உண்மை வெளிவந்து, நான் கல்லூரியில் 'ஹீரோ' ஆகிவிட்டேன். அதனால், முதலாண்டு மாணவர் சார்பாளர் பதவித் தேர்தலிலேயே என் நண்பர்கள் என்னை வேட்பாளராக்கி, தம் சொந்தச் செலவில் விளம்பரத் துண்டுப் பிரசாரம் (துண்டு என்றால் மிகச்சிறிய துண்டு) அச்சடித்து விநியோகம் செய்துவிட்டார்கள். அதைப் பார்த்து அஞ்சி பணக்கார வேட்பாளர்கள், என் நண்பர்கள் மூவரும் என்னைப் 'பயமுறுத்தி' போட்டிலியிலிருந்து விலகச் செய்து விட்டார்கள்.

பள்ளியில் தொடங்கிய எழுத்து ஆர்வம் கல்லூரியிலும் வளர்ந்தது, பள்ளியில் பாரதி நாளை ஒட்டி நடந்த சிறுகதைப் போட்டியில் முதல் பரிசு பெற்றிருந்தேன். கல்லூரியில் ஆண்டு விழாவில் நடத்துவதற்கான

நாடகத்திற்காகப் போட்டி நடத்தி பேராசிரியர் என்.குழந்தைநாதன், அந்தப் போட்டியில் எனது நாடகம் தேர்ந்தெடுக்கப் பெற்று கல்லூரி ஆண்டு விழாவில் நடிக்கப்பட்டது. அதில் நானே கதாநாயகனாக நடித்தேன். புகழ் பெற்ற கவிஞர், நாடகாசிரியர், தஞ்சைவாணன் (கோவிந்தராமானுஜம் என்பதுஅவர் பூர்வாசிரிமப் பெயர்)நகைச்சுவை நடிகராக நடித்தார்.

6. என்னுடைய விருப்பத்திற்கு எதிராக, கல்லூரியில் நான் படித்துக்கொண்டிருக்கும் போதே நடந்தது, பொருளாதார வசதி என்பதே இல்லாமல், முற்றிலும் மாமனார் தயவிலே குடும்பம் நடத்தும் வேதனையிருந்தாலும், மனைவியின் அன்பும் பாசமும் ஆதரவும் என்னைப் பட்டதாரியாக்கி, வாழக்கையில் உயர்த்திக்கொண்டே சென்றன. ஒரு வேளை அந்தத் திருமணம் நடந்திராவிட்டால் நான் இந்த நிலைக்கு உயர்ந்திருக்க மாட்டேன் என்று இப்போது எனக்கு 'ஞானோதயம்' ஏற்பட்டிருக்கிறது.

7. தொடக்கப்பள்ளி, பள்ளிக்காலங்களில், பள்ளி இலக்கிய மன்றங்களின் செயலாளனாக நான்தான் இருப்பேன். வாரந்தோறும் அல்லது ஆண்டு விழக்களில் நாடகம் நடிக்க நாடங்கள் தேவை, பாடப்புத்தகங்களில் உள்ள நாடகங்கள் தீர்ந்து போன பிறகு, புதிதாக நாடகம் எழுத வேண்டிய அவசியம், அவசரம் என்னை எழுத்தாளனாக ஆக்கிவிட்டன.

8. எனது முதல் சிறுகதை, 'ஆனந்த விகடனில்' பிரசுரமானது, எனக்கும் என் நண்பர்களுக்கும் ஏற்பட்ட மகிழ்ச்சியை விட என் மனைவிக்கும் மனைவி குடும்பத்தாருக்கும் அதிக மகிழ்ச்சி. வசதியில் ஏழையாக இருந்தாலும், அறிவில் செல்வந்தனாக இருக்கிறானே என்ற மகிழ்ச்சிதான், எங்கள் உறவினரிலே இதுவரை யாரும் சிறுகதை எழுதி

வெளி வந்ததில்லை. எங்கள் உறவினர்க்கும் இலக்கியப்படைப்புக்கும் அவ்வளவு தூரம்.... இன்றும் (2011ல்) என் உறவினர் பலருக்கு நான் எழுத்தாளன் என்று தெரியாது.

9. நான் படைத்த எல்லாமே, எனக்குப் பிடித்ததுதான்; பிடிக்காததை ஏன் படைக்கப்போகிறேன்? பத்து குழந்தை பெற்ற தாயிடம், 'உனக்கு பிடித்த குழந்தை எது?' என்று கேட்டால், எப்படி விழிப்பாள்? ஆயிரம் குழந்தை படைத்த என் நிலைமையும் அந்தத் தாயின் நிலைமைதான்!

10.பெரும்பாலும் எனக்குத் தெரிந்த அறிமுகமான களங்கள்தான். நான் பிறந்த, வளர்ந்த, படித்த, மணந்த, வாழ்ந்த கிராமப்பகுதிகள், பின்பு நான் சென்று கண்ட நகரப்பகுதிகள் ஆகியவற்றையே நான் களமாக அமைத்துக்கொள்வேன்.

'மாபெரும் நாடு மாபெரும் மக்கள்' என்று இந்தியா பாகிஸ்தானியப் போரின் பிண்ணனி பொருந்திய கதைக்கு நான் பெரும் முயற்சி செய்து, ராணவ முகாம், அலுவலகம், சூழல் முதலியவற்றை நூல்களில் படித்தும், ராணுவ வீரர்களிடம் நேரில் கேட்டும் தெரிந்து கொண்டு எழுதினேன்.

11. நாம் சொல்ல விரும்பும் கருத்தோ, நிகழ்வோ சிறுகதைக்குள் அடங்காத நிலை ஏற்படும்போது புதினத்தைக் களனாக எடுத்துக்கொள்கிறோம். ஓவியன் தான் வரையவிருக்கும் பொருளின் அளவையும் எண்ணிக்கையையும் பொறுத்துத் திரைச்சீலையைத் தெரிவு செய்து கொள்வதைப் போல்தான்.

12.கரு என்பது நேரடி அனுபவத்தின் பாதிப்புத்தான். ஒரு நிகழ்ச்சியை நேரடியாகப் பார்க்கும் போதும் அல்லது அனுபவிக்கும்போதும் ஏற்படும் தாக்கம். ஒரு சிறுகதைக்குக் கருவாக அமைவது போல், ஒரு

நிகழ்ச்சியின் தொடர்ச்சியோ, பல நிகழ்வுகளின் பாதிப்போ, அல்லது வெவ்வேறான நிகழ்வுகளின் ஒருங்கிணைவோ, ஒரு புதினத்திற்குக் கருவாக அமையலாம். ‘விடிவெள்ளி’ என்ற புதினத்தில் ஒரு சமுதாயத்தின் கலாச்சாரத்தையே கலைபூர்வமாக வெளிப்படுத்தி, அதன் பிரச்சனைகளுக்குத் தீர்வு சொல்லி முன்னேற்ற வேண்டும் என்ற அகத்தூண்டுதலே கருவாக அமைந்தது எனலாம்.

13.புதினத்தின் தலைப்புகள் பெரும்பாலும் கருவின் அடிப்படையில்தான் அமையும். கருவின் அழுத்தத்தை நேரடியாகவோ அல்லது குறிப்பாகவோ உருவகமாகவோ அல்லது புகழ்பெற்ற தொடர்களாகவோ அமைப்பது வழக்கம். தலைப்புகள் சிலசமயம் சம்பந்தம் இல்லாமல் இருப்பதுபோல தோன்றினாலும், ஆழ்ந்த நோக்கில் பொருத்தம் இருப்பதை ஊகிக்கலாம். ‘ஜல்லிகட்டி பசுமாடுகள்’ என்ற தலைப்பு, மேற்போக்காக முரணாக இருந்தாலும், புதினத்தைப் படித்து முடித்ததும் அதன் தலைப்பு சமுதாய நிலைமையைப் பளிச்சென துலக்குவதாக அமைந்திருப்பதை உணரலாம்.

14.புதினங்களின் கதாபாத்திரங்கள் யாவையுமே ‘கதாபாத்திரங்கள் அல்ல; உண்மைப் பாத்திரங்களே’ பெயர், ஊர், தோற்றம் ஆகியவை மாற்றங்களுக்குள்ளாகியிருந்தாலும், அவை நிஜ வாழ்க்கையில் எங்கேயோ நம் கண்ணில் படும்படியாகவோ அல்லது தூரத்திலோ, வாழ்பவைதாம், நீங்கள் அந்தப் பாத்திரங்களைப் பார்க்கவில்லை என்பதற்காக ‘கதை’ என்ற கற்பனைக்குள்ளே தள்ளி விடாதீர்கள் கதாசிரியர் பார்வையில்பட்டவர்களே, பாத்திரங்களாகப் பரிணமிக்கிறார்கள்.

15.ஆண், பெண் என்பதை விட மனிதர் என்பதுதான் முக்கியம் : நாம் சந்திக்கும் பாத்திரங்களில் ஆணோ பெண்ணோ யார் நம்மைப்

பாதிக்கிறார்களோ, அவர்களை நாம் முன்னிலைப்படுத்துகிறோம். 'ஆண் உயர்ந்தவன், பெண் அடிமை' என்ற கொள்கையை நான் ஏற்காமல் உதறித் தள்ளுவதில் உறுதியாக இருக்கிறேன். பெண்ணை அடிமைப்படுத்தி எந்தச் சமுதாயமும் வாழ முடியாது; உயர முடியாது; முன்னேற முடியாது என்பதில் அழுத்தமான நம்பிக்கை கொண்டிருக்கிறேன். பெண்ணைத் தாழ்த்தும் எந்த நாடும் வாழ்ந்ததில்லை. பெண்ணை உயர்த்தும் எந்த நாடும் வீழ்ந்ததில்லை; இறைவன் படைப்பிலே, பெண்ணைத்தான் போற்றிப் படைத்திருக்கிறான்; பெண்மையிலேதான் மானுட தெய்வத்தன்மை பெறுகிறது என்று நம்புகிறேன். சாகித்ய அகாடமி தொகுத்த பெண்ணியக் கதைகளில் எனது சிறுகதை ஒன்றும் இடம் பெற்றிருப்பது பெருமைக்குரிய செய்தி என நினைக்கிறேன்.

16.இதற்கான பதில் முந்திய பதிலேயே அடங்கியிருக்கிறது. ஆண்களில் எந்தக் கொம்பனையும் படைப்பவள் பெண்தான் என்ற இயற்கை நியதியிலேயே எல்லாம் அடங்கி விடுகிறது.

17.எழுத்தாளன், தான் வாழ்கின்ற சமுதாயத்தை எப்படிப் புறந்தள்ள முடியும்? 'மனிதன் என்பவனே சமுதாய விலங்குதானே?... தான் பிறந்த சமுதாயத்தை மரியாதையோடு சிந்திக்கக் கடமைப்பட்ட அவன் அதைத்தான் சிந்திக்கும் அளவுக்கு முடியுமளவுக்கு உயர்த்தவும் கடமைப்பட்டிருக்கிறான்.

18.பேராசிரியர் பணி, வாய்ப்பாகவே இருந்தது; ஓர் எழுத்தாளன் எழுதத் தொடங்கும் முன்பு, நிறையப் படிக்க வேண்டும். வால்மீகியை விட, கம்பன் இலக்கியத்தரத்தில் உயர்ந்திருப்பதற்குக் காரணம், கம்பனுக்கு படிக்கும் வாய்ப்பு இருந்ததே என்பேன். என்னைப் பொறுத்த வரையில்,

கல்லூரி வாழ்வு கற்பிக்கும் பணியோடு, வேறு பல பொறுப்புகளும், கடமைகளும் சேர்ந்து வேலைப்பளுவாக மாறினாலும், எழுதுவதிலே கிடைத்த சுகம் நிறைய எழுதத்தூண்டியது. பள்ளியில் படித்த போதும், கல்லூரியில் படித்த போதும், என்னைப் போல் நூல்நிலையப் புத்தகங்களை நிறைய எண்ணிக்கையில் படித்தவர்கள் மிகச் சிலரே.

19.கலை, கலைக்காகவா வாழ்க்கைக்காகவா? என்ற கேள்வி மேனாடுகளில் எழுந்து பரவியதுண்டு. ஆனால் கீழைநாடுகளில் கலையும் இலக்கியமும் வாழ்க்கைக்காவே என்பது ‘ஆத்திசூடி’ காலத்திலிருந்து நிலவிய கருத்து, எனவே எந்தக் கலையும் எந்தப் படைப்பும், சமுதாய வாழ்வை உயர்த்துவதாக அமைய வேண்டும்; என் படைப்புகளைப் படிப்பதற்கு முன்பு ஒரு வாசகனுக்கு இருந்த மனப்பாங்கு, என் படைப்பைப் படித்த பிறகு ஓரளவாவது ஒரு மி.மீ என்று வைத்துக்கொள்ளுங்களேன் – உயரவேண்டும் என்பதில் எப்பொழுதும் நான் கவனமாயிருப்பேன்.

இது தார்மீக அளவில் எனக்கு மகிழ்ச்சியும், படித்தவர்களுக்கு பயனும் அளிப்பதாக இருந்து புகழ், பெயர், பிரபலம் என்ற அளவுகோல்களில் நான் மேலே செல்லவில்லை என்பது உண்மைதான், இருந்தாலும் எனக்கு இதிலே வருத்தம் இல்லை.

20.இக்குற்றச்சாட்டு, நான் தமிழாசிரியன் என்பதால் எழுகின்றது; நான் வேறொரு துறையில் இருந்தால், இந்தக் குற்றச்சாட்டைக் கூறமாட்டார்கள்: இங்கே என்னைத் தமிழாசிரியன் என்று பார்ப்பதைத் தவிர்த்து ஒரு படைப்பாளியாகப் பார்க்க வேண்டுகிறேன்.

என் படைப்புகளைக் கூர்ந்து கவனித்தால், படைப்பாளி என்ற களத்தில் கூட என்னைக் குற்றம் சொல்ல மாட்டீர்கள். என்னுடைய கதைகளில்

வரும் பாத்திரங்களைப் பொறுத்துத்தான் மொழிகள் இடம்பெறுகின்றன. நான் படைக்கும் பெரும்பாலான கதைகள், புதினங்களில், படித்த, நடுத்தர வர்க்கத்தைச் சார்ந்த அலுவலகப் பணிகள் செய்கிறவர்கள் இடம் பெறுவதால், அவர்கள் உரையாடல்களில் இடம்பெறுகின்ற ஆங்கிலச் சொற்களை அப்படியே கையாள்கின்றேன். கிராமப்புறப் பாத்திரங்கள், குப்பன், சுப்பன், பேச்சி, கருப்பாயி முதலானவர்கள் என் கதைகளில் ஆங்கிலம் பேசுவதில்லை. (இப்போது கிராமப்புறத்துப் பாட்டி கூட, தன் பேத்தியிடம், விடிகாலையில், 'சாணத்தை 'திக்' காய்க் கரைச்சுப் போடுடி!' என்கிறாள்)

இலக்கியம் என்பது சமுதாயத்தின் பிரதிபலிப்புதானே, 'Literature is the reflection of the society' என்னுடைய சரித்திரக் கதைகள், புதினங்களைப் பாருங்கள்! எங்கேயாவது என்னுடைய கரிகாற்சோழனோ, இளங்கோவோ, கர்ணனோ, ஊர்மிளையோ, பாஞ்சாலியோ 'இங்கிலீஷ்' பேசுகிறார்களா, காட்டுங்கள்!

21.இன்னும் எழுதிக்கொண்டுதான் இருக்கிறேன்... இருப்பினும், புதிய எழுத்தாளர்களை உருவாக்குவதிலும் ஊக்குவிப்பதிலும் அதிக நேரம் செலவிடுவது உண்மைதான்... இது எழுதுவதைவிட மிகுந்த மன நிறைவு தருகின்றது.

22.எழுத்தாளர் சங்கம், புத்தகத் திருவிழாக்குழு, போன்றவற்றில் பொறுப்பேற்றுப் பணிகள் ஆற்றிக் கொண்டிருக்கிறேன். சிலவற்றை நானாகத் தேர்ந்தெடுக்கிறேன். சிலவற்றில் என்னைத் தேர்ந்தெடுக்கிறார்கள்.

23.பட்டங்களும், விருதுகளும், பரிசுகளும் என்னுடைய இலக்கியப் பயணத்தில் ஆங்காங்கே உற்சாகப்படுத்தி மேலும் பயணம் செய்யத்

தூண்டியவை. பெரும்பாலான விருதுகளும், பரிசுகளும் கடுமையான உழைப்பின் பின்னே அவற்றின் காரணமாகக் கிடைத்தவை என்பதிலும், பிற காரணங்களால் கிடைக்காதவை என்பதிலும் எனக்கு உள்ளூர மகிழ்ச்சியும் பெருமையும் உண்டு.

௨4.எனக்கு உலகமாக இருந்த துணைவி, தன் மறைவுக்குப் பின்னும் என்னை இலக்கிய உலகில் நடத்திச் செல்கிற உந்து சக்தி என்பது நான் செய்த தவம்; பெற்ற வரம்.

௨5.'நல்லதொரு குடும்ப பல்கலைக்கழகம்' என்றார் பாவேந்தர், எனக்கு வாய்த்த குடும்பம், படிப்பில் மட்டுமல்ல; பண்பிலும் பல்கலைக்கழம். என் மனைவிக்கு மட்டுமல்ல, என் பிள்ளைகளுக்கும் நான் குழந்தைதான்!

௨6.படிப்பிலும், நாகரிகத்திலும் வெகுவாக முன்னேறியிருக்கிறார்கள்; ஆனால் அறிவிலும் பண்பிலும் மிகவும் பின் தங்கி விட்டார்கள். 'அறிவினான் ஆவதுண்டோ பிறிதின் நோய் தன் நோய் போல் போற்றாக் கடை' என்றானே, அந்த அளவுகோலை வைத்துப் பார்த்தால், இன்றைய படிப்பாளிகளில் எத்தனை பேர் அறிவுடையவர்களாகத் தேறுவார்கள்?

௨7.சாக்ரடீஸ் காலத்திலிருந்து இளைய தலைமுறை என்பது, அறிவுரைக்கு உரிய சமுதாயமாகவே இருப்பதுதான் வியப்பு...! 'பெரிசு'கள் தங்கள் முதுமையில் பெற்றிருக்கும் மன அமைதியை, இளசுகள் எதிர்காலத்தில் பெற்றிருப்பார்களா? நிச்சயமாக இல்லை. மனிதர்களைவிட 'ரோபோ'க்கள் மக்கட் தொகையில் மிகுதியாகிவிடும் நிலை ஏற்படும்.

௨8.புதினங்கள் படிக்க 'நேரம்' இல்லை என்கிறார்கள். எல்லாம் வேகம், உணவில் கூட ஃபாஸ்ட் புட்!... எல்லாம் வேகமாகப் பரிணமித்துள்ள உலகத்தில், வாழ்க்கை மட்டும் அல்ல 'ஆயுள்' கூட வேகமாகப்

போய்விடும் அபாயம் எதிரே காத்திருக்கிறது. உலகமே இன்று உள்ளங்கைக்குள் வந்துவிட்டது. ஆனால் பக்கத்து வீடு, பக்கத்து மனிதர், வெகு தூரத்திற்குப் போய்விட்டார்கள்.

29.வேலைகளுக்கான பணியாளர்களை உற்பத்தி செய்கிறது; பட்டதாரிகளை உருவாக்கிச் சிந்தையில் நிறுத்தி வைக்கிறது. மதிப்பெண்களிலும், Rank–களிலும் மாணவர்களைச் சிறைப்பிடித்து வைத்திருக்கிறது... பொறியாளர்கள், மருத்துவர்கள், கணக்கர்கள், மேலாளர்கள், ஆசிரியர்கள், விஞ்ஞானிகள், அரசியலாளர்கள் ஆகியோரை உருவாக்குகிறது. மனிதர்களை அது உருவாக்குவதில்லை.

30.அரசியல்வாதிகளைத் தெரியும், அரசியல் தெரியாது! செய்தித்தாளில் அரசியல் படிப்பதோடு சரி....

31.தமிழ், 'செம்மொழி' என்ற பட்டம் பெறாவிட்டாலும், சிறந்த மொழிதான்... தமிழை யாராலும் 'சமஸ்கிருதம்' ஆக்க முடியாது. தமிழர்களைத் தவிர... 'மம்மி'களும், 'டாடி'களும் தமிழைக் சவப்பெட்டிக்குள் அடைக்க முயன்றாலும், தமிழ் விழித்து எழும்; வெல்லும் என்ற நம்பிக்கை இருக்கிறது.. களப்பிரர் காலம் போல், இன்னொரு இருண்ட காலம், தமிழுக்கு...

32.தமிழ்ச் சமூகம் உலகத்தையே வெல்லும் என்ற நம்பிக்கை பாரதிக்கு இருந்தது. அதனால்தான் 'தமிழ்ப்பிள்ளைகளே! நீங்கள் வெளிநாடுகளுக்கு செல்லுங்கள்; உங்கள் அறிவுத்திறனால் வெற்றிக்கொடி நாட்டுங்கள்...' என்ற உற்சாகமாகத் தமிழ் இளைஞர்களுக்கு வழிகாட்டினான். இன்று அவன் கண்ட கனவு, அமெரிக்காவில், மற்ற ஐரோப்பிய நாடுகளில் நனவாகிக்க கொண்டிருக்கிறது. இந்த இளைஞர்கள், தாம் தமிழர்கள் என்பதை

நினைவிற் கொள்ள வேண்டும் என்பதுதான் முக்கியம். அதற்குப் பெற்றோர்கள் தான் வழிகாட்ட வேண்டும். வெளிநாட்டில் இரண்டு பேர், மலையாளத்தில் பேசிக்கொண்டால், அவர்கள் மலையாளிகள் என்று புரிந்துகொள்ளலாம். இரண்டு வங்காளிகள் சந்தித்துக்கொண்டால், வங்காளியில் பேசிக்கொள்கிறார்கள். ஆனால் தமிழன் இரண்டு பேர் சந்தித்தால், ஆங்கிலத்தில் பேசிக்கொள்கிறார்கள்; ஆம்... அவர்கள் வீட்டிலேயே 'மம்மி'யிடமும் 'டாடி'யிடமும் ஆங்கிலம் பேசிப்பழகியவர்களாயிற்றே ஆகவே முதலில் பெற்றோர்கள், வீட்டிலே பிள்ளைகளோடு தமிழில் பேசுங்கள். இதை ஓர் இயக்கமாகவே நடத்தலாம் போலிருக்கிறது.

33.இன்றைய எழுத்தாளர்கள் பொதுவாகவே, நிறைய விஷயங்கள் தெரிந்து வைத்திருக்கிறார்கள். ஆனால் எந்த விஷயத்தைச் சமுதாயத்திற்குச் சொல்வது பயனளிக்கும் என்பதை மட்டும் தெரிந்து வைத்திருத்திருக்கவில்லை. தனக்குத் தெரிந்ததையெல்லாம் எழுதுவது என்பது ஓர் எழுத்தாளனின் நோக்கமாகவே இருக்கக்கூடாது; இந்தச் சமுதாயம் எதைத்த தெரிந்து கொள்ள வேண்டுமோ, அதை எழுதுவதே ஒரு நல்ல எழுத்தாளனின் வேலை

34.ஏற்கனவே நான் சொன்னதுபோல், நிறைய எழுத்தாளர்களைப் படித்திருப்பதால், எல்லோருமே எனக்குள் பாதிப்பை ஏற்படுத்தியிருக்கிறார்கள். யாரையும் வழிகாட்டியாக நான் கொண்டு எழுதவில்லை.

35.ஆயிரக்கணக்கான பாத்திரங்களில் எதைக் கவர்ந்தது என்று சொல்ல முடியும்..? ஒவ்வொரு பாத்திரத்தையும் நாவலையும் படைக்கும்போது அவை என்னை முழுமையாக ஈர்த்துக் கவர்ந்து நெஞ்சமெல்லாம்

நினைவெல்லாம் நிறைந்து இருக்கும். அடுத்த படைப்பு வரும் போது, முந்தைய ஈர்ப்புகள் கடந்து போய்விடும்; புதிய வெள்ளம் வந்து பழைய நீரை வெளியேற்றி விடுவதைப் போல...

36.‘சமுதாயப்பணி’ என்று சொல்லிக்கொள்ளக் கூடிய அளவுக்கு, எதுவும் நான் செய்வதாகத் தெரியவில்லை. அப்படி ஏதாவது தென்பட்டால், அதை நீங்கள்தான் சொல்ல வேண்டும்.!

**திருவையாறு தமிழய்யா கல்விக்கழகம் – குற்றாலம் ஸ்ரீ பராசக்தி மகளிர் கல்லூரி – அவ்வை அறக்கட்டளை இணைந்து நடத்திய அனைத்துலக பண்பாட்டுத் தமிழ் ஒன்பதாவது ஆய்வு மாநாட்டுக் கருத்தரங்கம் – 2011**

# *தாலாட்டுப் பாடல்களில் பண்பாட்டுக் கூறுகள்*

## *முன்னுரை*

*நாட்டுப்புறப் பாடல்கள், தொன்மைக்கால மக்களின் வாழ்க்கை முறையை, எண்ணங்களின் வெளிப்பாட்டை, சிந்தனைத் திறனை, உழைப்பின் உயர்வை பொழுதுபோக்கின் தன்மையை, இக்கால மக்கள் அறிந்து கொள்ள உதவும் அரிய சாதனமாய் விளங்குகின்றன. மனிதனின் முழுமையான வாழ்க்கையை, நாட்டுப்புறப்பாடல்கள் செம்மையாகப் படம்பிடித்துக் காட்டுகின்றன. மக்கள் தம் பண்பாட்டை வாழ்வின் உண்மைகளும், தன்மைகளும் அப்பட்டமாய் வெளிப்படுத்துவன நாட்டுப்புறப்பாடல்கள். மக்களின் அன்றாட வாழ்வில் குறிப்பாகக் கிராமங்களில் பழந்தமிழர்களின் நடை, உடை, உணவு, பழக்கவழக்கங்கள், சிந்தனைகள், விழாக்கள், விளையாட்டுக்களில் பழந்தமிழ்ப்பண்பாடு அழியாது, இன்றளவும், நின்று நிலவி வருவதை நாட்டுப்புறப்பாடல்கள் வாயிலாக, சிறப்பாக, தாலாட்டுப் பாடல்களின் வாயிலாக வெளிப்படுத்துவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.*

## *நாட்டுறப்புற இலக்கியங்கள்*

*நாட்டுப் பாடல்கள் மக்களின்பாடல்கள் அந்தந்தப் பகுதி மண்ணுடன் வளர்ந்து வளம் பெற்றவை. எழுத்தறிவில்லாத கிராமப்புற மக்களிடையே தொன்று தொட்டு வழங்கி வரும் அப்பாடல்கள், மக்களின் உணர்ச்சிப் பெருக்காகக் கொந்தளித்தோடும், நதிப்பிரவாகமே நாட்டுப்பாடலாகும். நாட்டுப்புற மக்கள் பாடி மகிழும் பாடல்கள், ஏட்டில் எழுதாதவை, இலக்கணத்தைப் பாராதவை. இதயத் துடிப்பில் எழுந்தவை. நிலைபேறு பெற்றவை. காலவெள்ளத்திற்குக் கரையாதவை. அன்றாடச் சம்பவங்களையே பொருளாகக் கொண்டவை. "கற்றாமைரக் காமுறச் செய்யும் பாடல்கள் நிறைந்து நாகரிகம், பண்பாடு, பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், ஆகியவற்றின் கொள்கலமாய் அமைந்ததுவே நாட்டுப்புற இலக்கியம்"[1] என்று குறிப்பிடுவார் (முனைவர். சுப்பிரமணியன் ச.வே. நாட்டுப்புற இலக்கியம் பக்.7)*

*ஒரு தனி மனிதனின் பழக்க வழக்கங்கள், காலத்தின் கட்டாயத்தால் ஒரு சமுதாயத்தின் பழக்க வழக்கங்கள் ஆகி மரபுகளாக நிலைபெற்றுவிட்டன. ஒரு சமுதாயத்தின் பண்பாட்டை அறிந்து கொள்வதற்குப் பழக்கவழக்கங்களும், மரபுகளும், நம்பிக்கைகளும் அடிப்படைக் கருவிகளாக அமைகின்றன. இதனடிப்படையில் தொகுப்பாசிரியர் நா.வானமாமலை எழுதிய தமிழர் நாட்டுப்பாடல்களில் இடம்பெறும் தாலாட்டுப் பாடல்களை அடிப்படையாக வைத்து, தமிழர் பண்பாடு விளக்கப்படுகிறது.*

**பண்பாடு**

மனிதர்கள் ஒன்றுகூடி வாழ்வது சமூகம் எனப்பட்டது. அவ்வாழ்வில் சில நெறிமுறைகளைப் பின்பற்றி மக்கள் வாழ்ந்து வந்தனர். ஒருநாடு, அல்லது ஒரு சமூகம், அதன்கண் வாழும் மக்களின் பண்பைப் கொண்டே மதிக்கப்படும். மனிதனை விலங்கினத்திலிருந்து வேறுபடுத்துவது பண்பாடேயாகும். பண்பாடு இல்லாத சமூகங்கள் கிடையாது. ஒவ்வொரு சமூகமும் ஏதேனும் ஒருவகையான பண்பாடு உடையதாகவே இருக்கும். பண்டைத் தமிழர்கள் வகுத்து வைத்த வாழ்க்கை முறைகளை வழிவழியாக வரும் தலைமுறையினர் பின்பற்றி வருகின்றனர். இவ்வாறு முன்னோர்கள் வாழ்ந்த முறைகளையே பண்பாடு என்பர். பண்பாடு என்பது ஒரு குறிப்பிட்ட சமூகத்தின் வாழ்க்கை முறையேயாகும்.

பண்பாடு மக்களின் சமூக அமைப்பு, சமயம், மொழி, கலைகள், தொழில்நுட்பம், பொருளாதாரம் ஆகியவைகளே பண்பாட்டின் அம்சங்கள். இவற்றோடு ஆயுதங்கள், அணிகள், ஆடைகள் போன்றவை பொருள்பற்றிய பண்பாடாகும். ''சென்னை பல்கலைக்கழக அகராதி, பண்பாடு என்பதற்கு பண்படுத்துதல் என்று பொருள் கொள்கிறது. பண்படுத்துதல் என்னும் சொல்லிற்கு சீர்திருத்துதல், நிலம் முதலியவற்றைச் செம்மைப்படுத்துதல் என்று பொருள் தருகிறது. பாடு எனும் சொல் சங்க இலக்கியங்களில் உலக ஒழுக்கம், கடமை, குணநலம், இனிமை, பயன், நடுநிலை என்னும் பொருள்களில் வழங்கப்படுகிறது"2 (முனைவர். நாசீர்அலி மீ.அ.மு. நாட்டுப்புறப் பண்பாட்டியல் பக்.23)

**தாலாட்டுப் பாடல்கள்**

தாலாட்டு தாய்மைக்கு மட்டுமே உரிய தனிப்பாட்டாகும். இது பாசத்தின் படப்பிடிப்பு. பண்பாட்டின் எதிரொலி. தாய் ஆழம் காணமுடியாத ஓர் அன்புக்கடல். அந்த அன்புக்கடலில் விளைந்த வலம்புரி முத்தே தாலாட்டாகும். தன் உணர்விலும், உயிரிலும், கலந்துவிட்ட குழந்தையை உறங்க வைக்கத் தாய் பாடும் பாட்டே தாலாட்டாகும்.

"தாலாட்டு என்பது காரணத்தால் அமைந்ததாகும். தால் என்ற சொல், நாக்கு என்று பொருள்படும், தாய் ராராரோ, என்று நாவினை ஆட்டிப்பாடுவதால் தால்+ஆட்டு = தாலாட்டு எனப் பெயர் பெறலாயிற்று. இத்தாலாட்டினைத் தாய்மார்கள் ராராட்டு, ஓராட்டு என்று வழங்குவதும் உண்டு"[3] (முனைவர். அழகப்பன்.ஆறு; நாட்டுப்புறப்பாடல்கள் திறனாய்வு பக்-16.)

தாய்மைப் பண்பின் முழுமையான வெளிப்பாடே தாலாட்டாகும். தாய்தன் பிள்ளையின் அழுகையை நிறுத்துவதற்குத் தன் நாவசைத்து இனிமையான ஒலியினை உண்டாக்கி, அதன்பின் அவ்வொலியில் பொருளுடன் கூடிய சொற்களை ஒலி நயத்துடன் வெளிப்படுத்தி, எதிர்பார்ப்புக்களுடன் பாடப்படுவதே தாலாட்டுப் பாடல்களாகும். இப்பாடல்கள் வழி நாட்டுப்புற மக்களின் பண்பாட்டை, குழந்தை பெறுவதிலிருந்து, குழந்தை வளர்ப்பது வரையிலான பாடல்களைக் கொண்டு அறியலாம்.

**உறவுமுறைகள்**

குழந்தையை உறங்க வைப்பதற்காகப் பாடப்படும் தாலாட்டுப் பாடல்களில், பாடுபொருளாக முதலில் அமைவன உறவுமுறைகள்தான்.

அவள்பாடும் பாடல்களில் உறவுமுறைகளாக இடம் பெறுபவர்கள் தாத்தா, மாமா, தந்தையாகும். ஒரு பெண்ணுக்குத் திருமணமாகி அப்பெண், குழந்தை பெற்றவுடன், அப்பெண்ணுடன் பிறந்த சகோதரர்கள் அவள் பெற்ற குழந்தைக்குத் தாய்மாமன் ஆகிறார்கள். எல்லாத் தாய்மார்கள் பாடும் தாலாட்டுப் பாடல்களிலும் தப்பாமல் இடம்பெறும் உறவினன் அக்குழந்தையின் தாய்மாமன். இப்பாடல்களில் தாய்மாமனின் அழகு, வீரம், செல்வச் சிறப்பு, தன் குழந்தைக்கு அவன் செய்யும் சீர்வரிசை ஆகியவை இடம்பெறுகின்றன.

"செக்கச் சிவப்பரோ - உங்க மாமா
சீமைக்கோர் அதிபதியோ
அழகு சிவப்பரோட- ஐயா நீ
அருமை மருமகனோ" (வானமாமலை நா.த.நா.பா. பக்-90)

என்று பாடுகிறாள். சகோதரனுக்கு இணையாகத் தாலாட்டில் பேசப்படும் மற்றொரு உறவினன் கணவன். தன்னை மணந்தவன் என்ற முயைிலும், குழந்தையின் தந்தை என்ற முறையிலும், மேலும் சமுதாயத்தில் தனக்கு மதிப்பும் மரியாதையும் உண்டாவதற்குக் காரணமாய் அமைந்தவன் என்ற முறையிலும் தன் சகோதரனுக்கு இணையான இடத்தைத் தன் கணவனுக்குத் தருகின்றாள்.

"தொந்தி குலுங்க
துடை குலுங்க வேட்டிகட்டி
அந்தி நடை நடந்து உங்களப்பா
அதிகாரி வந்திறங்கி
கோட்டுத் துறந்து
குறிஞ்சிமேல் உட்கார்ந்து
கேசை விசாரிக்கும்
கவர்னரோ உங்களப்பா" (வானமாமலை நா.த.நா.பா.பக்-104)

என்று பாடுகிறாள்.

"கடலுக்கு சம்சாரி
கப்பலுக்கு வியாபாரி
இனிவாரக் கப்பலுக்கு
உங்க தாத்தா தீர்த்த கணக்காளி"

(வானமாமலை நா.த.நா.பா.பக்-109)

எனத் தாத்தாவின் பெருமையும் பேசப்படுகிறது.

**பழக்கவழக்கங்கள்**

ஒரு சமுதாயத்தின் பண்பாட்டை அறிந்து கொள்வதற்கு அடிப்படையானது பழக்கவழங்கங்களாகும். இப்பழக்க வழக்கங்கள்தான் நாளடைவில் மரபுகளாக மாறுகின்றன. பண்டைத் தமிழரின் பழக்க வழக்கத்தில் தலையாய இடம்பெறுவது மாமன் செய்யும் சீர்வரிசையாகும். தன் சகோதரியின் பிள்ளைக்கு சீர் கொண்டுவரும் பழக்கம் இருந்தது என்பதை,

"பால் குடிக்கக் கிண்ணி
பழந்திங்கச் சேணாடு
நெய் குடிக்கக் கிண்ணி
முகம் பார்க்கக் கண்ணாடி

கொண்டைக்குக் குப்பி
கொண்டுவந்தான் தாய்மாமன்" (வானமாமலை நா.த.நா.பா.பக்.82)

மற்றும்

"முத்தளக்க நாழி
முதலளக்க பொன்னாழி
வச்சளக்கச் சொல்லி
வரிசையிட்டார் தாய்மாமன்" (வானமாமலை நா.த.நா.பா. பக்.91)

என்று கூறுவதால் அறியலம். தாய்மாமன், பரத்தையரோடு உறவு வைத்திருந்ததை பெருமையாகப்பாடுகிறாள்.

"தங்கக் குடைபிடிக்க
தாசிமாரை முன்னவிட்டு உன் மாமன்
தாசிக்கே விட்ட பணம் -ரெண்டு
தங்கமடம் கட்டலாமே"

இலக்கியங்கள் வாயிலாக பரத்தமை ஒழுக்கம் அறிவதோடு, வாய்மொழி இலக்கியத்தின் வாயிலாகவும் அறியலாம். குழந்தைக்கு காது குத்தும் பழக்கம் இருந்திருக்கிறது என்பதையும், அதனை ஒரு பெரும் விழாவாகக் கொண்டாடுவர் என்பதனை

"மாம்பிஞ்சு கொண்டு
மதுரைச் சிமிக்கி கொண்டு
காது குத்த வாராக
கனகமுடி உங்களம்மான்" (வானமாமலை நா.த.நா.பா. பக்-101)

எனப் பாடுகிறாள். காதுகுத்தின் போது காப்பரிசி கொடுக்கப்பட்டதையும் பாடுகிறாள்.

"பச்சரிசி முக்குறுணி
எள்ளு இரு நாழி
இளந்தேங்காய் முந்நூறு
அள்ளி விளம்புங்க நான்பெற்ற
அருமை மகன் காதரிசி
சிந்தி விளம்புங்க" (வானமாமலை நா.த.நா.பா. பக்.102)

குழந்தைக்கு கண்ணேறு பட்டுவிடும் என்பதற்காகத் தாய் கண்ணேறு கழித்தாள் என்பதை

"கண்ணுக்குக் கண்ணெழுதி - உன்
கடைக்கண்ணுக்கு மையெழுதி
கண்ணான கண்ணுக்கு என் ஐயா
உனக்குக் கண்ணேறு தையாமல்
சுண்ணாம்பு மஞ்சளும்
சுத்திஎறி சூரியர்க்கு" (வானமாமலை நா.த.நா.பா. பக்.102)

எனத் தாய் தாலாட்டிலே பாடுகிறாள்.

**அறச்செயல்கள்**

ஒரு தாய் தாலாட்டுப் பாடும்பொழுது மாமன் பெருமை, கணவன் பெருமையெல்லாம் பாடியவள் தன் மகனுக்கும் சில அறிவுரைகளைக்

கூறுகின்றாள். உன் மாமன் போல, உன் தகப்பன் போல, உன் தாத்தா போல அறச்செயல்களைச் செய்ய வேண்டும் என்று கூறுகிறாள்.

"ஊருணியும் வெட்டி
உசந்த மடமும் கட்டி
தாரணியார் பூசை செய்ய - நீ
தர்மகுல வம்முசமோ" (வானமாமலை த.நா.பா.பக்-90)

என்றும்

"சாலை பதிப்பமோ
சத்திரங்கள் கட்டுவோமே
மதுரைக்கும் திருப்பதிக்கும்
வகுப்போமே பூஞ்சோலை" வானமாமலை நா.த.நா.பா. பக் 109

என்று குளம் வெட்டி, கோயில் கட்டி, தருமங்கள் செய்தவர் வீட்டிலே பிறந்த மகனும் தருமங்கள் செய்ய வேண்டும் என்று பாடுகிறாள்.

**கடவுள் நம்பிக்கை**

அழகும், தெய்வத்தன்மையும் மிக்க தன் குழந்தை நன்கு வளர, நோய் நொடியில்லாமல் இருக்கத் தாய் தெய்வங்களை பல நிலைகளில் வேண்டுகிறாள். கடவுளை குழந்தையோடு ஒப்பிடுதல் குழந்தைக்கு காப்பாக வரவேண்டும் என்று தெய்வங்களை அழைத்தல், குழந்தையோடு விளையாட தெய்வத்தை அழைத்தல், கடவுளுக்குத் தெண்டு செய்தல் என்று பலநிலைகளில் தெய்வங்களைப் பாடுகிறாள்.

"வாருமையா கந்தா
வரங்கொடுமே வேலவரே
தீருமையா இவன் பிணியை
திருச்செந்தூர் வேலவரே" வானமாமலை நா.த.நா.பா. பக்-91

என்று குழந்தையைக் காக்கப் பாடுகின்றாள்.

"பரமசிவர் பந்தாட
பரம சிவரடித்த பந்தை
பார்த்தடிக்க வந்த கண்ணோ
மருத அழகரோ
வாழ்மருத சொக்கரோ
திருமால் அழகரோட
சேதிக்க வந்தவனோ" (வானமாமலை நா.த.நா.பா-114,117)

தாய் தன் குழந்தையை, உண்ணாமல், உறங்காமல் பாதுகாத்தாலும், தன் செயல் செம்மையுற தெய்வத்தை துணைக்கழைக்கிறாள்.

**விழாக்கள்**

தாய்பாடும் தாலாட்டிலே, அக்காலத்தில் நடைபெற்ற விழாக்களை அறிந்து கொள்ளமுடிகிறது. அதிலும், தேர்த்திருவிழா சிறப்பாகப் பேசப்படுகிறது

மானத்திலே பூப்பரிச்சு
மந்தையிலே தேர்சோடிச்சி
தேரும் திரும்புதையா
தேவாதிங்க கையெடுங்க

தேரும் திரும்பிவர
தேவரெல்லாம் கையெடுக்க" (வானமாமலை.நா த.நா.பா-112, 86)

இது தவிர சிவராத்திரி விழாவும் கொண்டாடப்பட்டது என்பதை,

"சீராட்டும் நோம்பு
சிவநோம்பு நாளையிலே" (வானமாமலை.நா த.நா.பா.பக்-104)

என்பதால் அறியலாம்.

**விளையாட்டு**

"வெள்ளியாலே கால்நிறுத்தி
வெத்திலையால் பந்தலிட்டு
பொன்னாலே கால்நிறுத்தி
பூவாலே பந்தலிட்டு
தங்கத்தால் கால் நிறுத்தி
தாமரையில் பந்தலிட்டு-அதிலே
பிள்ளை விளையாடுமென்று
அறிக்கை உட்டார் உன் மாமன்"

(வானமாமலை.நா. த.நா.பா. பக்.119)

தங்கை மகன் பந்தடித்து விளையாட தாய்மாமன் கொடுத்த சீர் வரிசையால் அறியலாம்.

**ஆடை**

"உசந்த தலைப்பாவோ
உல்லாச வல்லவாட்டு"

மற்றும்

"பட்டு ஜவுளிகளும் கண்ணே உனக்குப்
பலவர்ண சட்டைக்கும்
பட்டுப்புடவைகளும் கண்ணே -உனக்கு
கட்டிக் கிடக் கொடுத்தானோ"

என்பதால் அறியலாம்.

**முடிவுரை**

ஏட்டில் எழுதப்பட்ட இலக்கியங்கள் இருக்குமிடம் தெரியாமல் இருக்கும் இக்காலத்தில் ஏட்டில் எழுதா வாய்மொழி இலக்கியமான நாட்டுப்புறப் பாடல்கள் காலந்தோறும் புதிய மெருகு பூசப்பட்டுப் பாடப்பட்டு வருகிறது. நாட்டுப்புற இலக்கியத்தின் ஒரு பிரிவாகத் திகழும் தாலாட்டுப் பாடல்கள் ஒரு சமூகத்தின் மனவியல்புகளை, பண்பாட்டினை அறிந்து கொள்ளக் காரணமாக அமைகின்றன. மேற்கூறிய சான்றுகளால் நாட்டுப்புற மக்களின் பண்பாட்டை அறிந்து கொள்ளலாம்.

## பண்நோக்குப் பார்வையில் தமிழ்ச் செம்மொழி தமிழ் காப்பியங்கள்

## கல்லூரி ஆசிரியர் குமரித் தமிழ்ச்சங்கம் – 2012

# சிலம்பில் மாதவி

### முன்னுரை

காப்பிய உலகில் தலையாய இடம் பிடித்தவை, சிலப்பதிகாரமும், மணிமேகலையுமாம். தமிழின் தலைமைக் காப்பியமாகவும், முதன்மைக் காப்பியமாகவும், முத்தமிழ்க் காப்பியமாகவும், மூவேந்தர் காப்பியமாகவும், புகழப்படும் காப்பியத்தைப் படைத்தவர் இளங்கோவடிகள். தமிழகத்தில் தோன்றிய நன்மக்களுள் ஒருவனைத் தலைவனாகக் கொண்டு அவன் வாழ்வைக் கருப்பொருளாகக் கொண்டு பாடப்பெற்ற காப்பியம் சிலப்பதிகாரம். சிலப்பதிகாரம் கற்பு நெறியை சிறப்பித்துக் கூறவந்த காப்பியமாகும். பெண்மையின் பெருமையினை பறைசாற்றும் வகையில் அமைந்து, பெண்ணியச் சிந்தனைக்கு வலிமை சேர்த்த காப்பியமாகும். இக்காப்பியத்தின் தலைமைப் பாத்திரமாய், கற்புக்கரசியாகப் போற்றப்படும் கண்ணகிக்கு இணையான கதாப்பாத்திரமாக கற்புடையவளாக, மாதவியைப் படைத்துள்ளார் இளங்கோவடிகள். கோவலனின் இல்லறத்தாள் உரிமை, கண்ணகியைக் காட்டிலும் மாதவிக்கே சிறப்புடைத்து என்று காப்பியத்தை படைத்துக் காட்டியவர் இளங்கோவடிகள். கற்புக்கரசியாம் மாதவியின் பன்முக ஆற்றலை எடுத்துக்கூறுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### மாதவி அறிமுகம்

சோழநாட்டின் பெருநகரமாம் காவிரிப்பூம்பட்டிணத்தில், கணிகையர் குலத்தில் சித்திராபதியின் மகளாய்ப் பிறந்தவள் மாதவி. அகத்திய முனிவன் சாபம் பெற்று, அவன் அருளால், இந்திரச் சிறுவனொடு சாபம் நீங்கிய உருப்பசி பரம்பரையில் தோன்றியவள் மாதவி. ஆடல், பாடல், அழகில் சிறந்தவளாய், ஆயகலைகள் அறுபத்தி நான்கும் கற்றுத் தேர்ந்தவள். இளங்கோவடிகள் படைத்த புரட்சிக்காப்பியத்தில் தலை மக்களுக்கு இணையாகப் பொலிந்து நிற்கும் கதாப்பாத்திரம் மாதவி என்றால் மிகையாகாது. மாதவி கணிகையர்க் குலத்துப் பிறந்தவளாயினும் கோவலன்பால் உண்மைக் காதல் கொண்டவள். கண்ணகிக்கு இணையான கற்புடையவள் மாதவி. ஆயிரத்தெண்கழஞ்சுப் பொன் கொடுத்து கோவலன் மாலை வாங்கியதால், கோவலன் வாழ்க்கையில், இணைந்தாலும், பாரதியார் பாடுவதுபோல "காதலன் ஒருவனைக் கைபிடித்தே அவன் காரியங்கள் யாவிலும் கைகொடுத்தே" என்று ஒரு நல்ல கற்புள்ள மனைவியாகவே வாழ்ந்தவள்.

கணிகையர் குலத்தில் பிறந்து, சமுதாயத்தால் மதிக்கப்படாது, இகழப்பட்டு அழிந்திருக்க வேண்டிய மாதவி, சமுதாயத்தவரும் போற்றும் வண்ணம், வீறு கொண்டு, தன் கலையால், அறிவால், செயலால் படிப்படியே உயர்ந்து கண்ணகிக்கு நிகரான கற்புடையவளாய், நல்ல மனைவியாக, நல்லதாயாக, புரட்சிசெய்பவளாக, உயர்ந்த பண்புடையவளாய் விளங்குபவள் மாதவி. பரத்தமை எனும் இழிவான குலத்தில் பிறந்திருந்தாலும் தன்னுடைய உறுதியான கொள்கையால், நடத்தையால், செயலால், மற்றவர்கள் கருத்துக்களைப் பொய்யாக்கி பரத்தமை ஒழிப்பிற்கு வித்திட்டவள் மாதவி. பரத்தையர் குலத்தில் பிறந்தாலும் மாதவி பத்தினி என்று கூறும் உயர்வைப் பெறுகின்றாள்.

**கலைகளில் தேர்ந்தவள் மாதவி**

கலையே வாழ்வாகக் கொண்டவள் மாதவி என்பதை,

"எண்ணும் எழுத்தும் இயலைந்தும் பண்ணான்கும்
பண்ணின்ற கூத்துப் பதினொன்றும் – மண்ணின்மேற்
போக்கினாள் பூம்புகார்ப் பொற்கொடி மாதவிதன்
வாக்கினால் ஆடரங்கின் வந்து" (சிலம்பு 4)

என்ற வெண்பாவால் அறியலாம். விஞ்சை வீரன் தன் காதலிக்கு பூம்புகாரின் இந்திர விழாச் சிறப்பைக் கூறும்பொழுது,

"அவரவர் அணியுடன் அவரவர் கொள்கையின்
நிலையும் படிதமும் நீங்கா மரபிற்
பதினோ ராடலும் பாட்டின் பகுதியும்
விதிமாண் கொள்கையின் விளங்கக் காணாய்" (சிலம்பு-6 : 64-67)

என்பதால் மாதவியின் ஆடல் கலைத்திறனை அறியலாம். ஊடற்கோலமோடிருந்த கோவலன் உவப்ப கானல் கடல் விளையாட்டுக் காண்பவளாய் அவனை அழைத்துக்கொண்டு கடற்கரைக்குச் சென்று புன்னை நிழல் புதுமணற் பரப்பில் சித்திரத்திரையைச் சுற்றி, சேர வளைத்து அமைக்கப்பட்ட அழகிய கூடத்தில், வெண்கால் அமளிமிசையிருந்து வயந்த மாலையின் கையில் இருந்த யாழினை வாங்கி கானல்வரி பாடினாள் என்பதிலிருந்து யாழ் மீட்டிப்பாடும் இசைக்கலையை அறிந்தவள் என்பது புலனாகுகிறது. யாழிசை மேல்வைத்து ஊழ்வினை வந்து உருத்ததாகலின் இவள் மிக்க மாயமுடையளாகலின் வேறொன்றின்மேல் மனம் வைத்துப் பாடினாள் என ஊடல் கொண்டு, கோவலன் அவளைப் பிரிந்து கண்ணகியை அடைந்தபொழுது, இளவேனிற் பருவத்தாற் துயர் எய்திய மாதவி, தாழை மடலின் பித்திகை அரும்பை எழுத்தாணியாகக் கொண்டு, செம்பஞ்சிலே

தோய்த்து மடல் எழுதியவள், வசந்த மாலை வாயிலாக கோவலனுக்கு அனுப்புகின்றாள். கூலமறுகில் கோவலனைக் கண்டு வசந்தமாலை மடல் கொடுக்க

"ஆடல் மகளே ஆதலின் ஆயிழை

பாடுபெற் றனவப் பைந்தொடி தனக்கென" (சிலம்பு 8 : 109-110)

மாதவியை ஆடல் மகள், ஆதலால் நடிப்புக்கள்அவட்கு இயல்பாவனவே என்று கூறி ஓலையை மறுத்தான் கோவலன். இங்கே மாதவி ஆடிய எண் வகை வரிக்கூத்தையும் கூறுவதின் வழியே, கோவலன் மூலமாகவும் மாதவியின் கலைச் சிறப்பை உணரலாம்.

கோவலனும், கண்ணகியும், கவுந்தியடிகளும், பார்ப்பனர் உறையும் பகுதியில் இருந்தபொழுது, கௌசிகன் என்ற அந்தணன், மாதவியின் இரண்டாவது மடலை நீட்ட, கோவலன் அதன் பொருளை உணர்ந்து, இம்மடலின் பொருள் தம் பெற்றோருக்கும் பொருந்தியிருக்கிறது என்பதால், எம் குரவருக்கும் இவ்வோலையைக் காட்டு எனகௌசிகன் கையில் கொடுத்து அனுப்புகிறான். மாதவி எழுதிய,

" அடிகள் முன்னர் யானடி வீழ்ந்தேன்

வடியாக் கிளவி மனக்கொளல் வேண்டும்

குரவர்பணி அன்றியுங் குலப்பிறப் பாட்டியோடு

இரவினைச் கழிதற் கென்பிழைப் பறியாது

கையறு நெஞ்சம் கடியல் வேண்டும்" (சிலம்பு 13: 87-91)

இம்மடலின் பொருள், கோவலனுக்கும், அவனது பெற்றோருக்கும் பொருந்த எழுதி இருப்பதன் வழியாக மாதவி எழுத்துக் கலையிலும் தேர்ச்சி பெற்றிருந்தாள் என்பது புலனாகுகிறது.

**நல்ல இல்லறத்தாள் மாதவி**

கணிகையர் குலத்தில் பிறந்தாலும், சேற்றில் முளைத்த செந்தாமரையாக, சிப்பியில் உதித்த முத்தாக, உயர்ந்த குலத்திற்குரிய உணர்வுகளைக் கொண்டு, அவளுடைய எண்ணங்கள் செயல்பாடுகள் அமைகின்றன. கோவலன்பால் கொண்ட அன்பினால் ஒருவனுக்கு ஒருத்தி என்று வாழ்ந்தவள். இந்திரவிழாவில், ஒருநாள் புகார் நகரத்து மக்கள் காண மாதவி பாடலுடன் ஆடினாள். தனக்கே உரிய மாதவி, மற்றவருக்கு விருந்தாகிய நிலைகண்டு வெறுப்புற்றான் கோவலன். வெறுப்போடு இருந்த கோவலன் உள்ள உணர்வைப் புரிந்துகொண்டு

"கூடலும் ஊடலும் கோவலற் களித்துப்

பாடமை சேக்கைப் பள்ளியு ளிருந்தோள்" (சிலம்பு 6 :109-110)

கணவனின் மனமறிந்து நடக்கும் நல்ல மனைவியாக மாதவியைப் பார்க்கிறோம்.